# டியாரா லானோலின் லோஷன் ஷாம்பூ

## தலை மயிரை பாதுகாக்க விரும்புகிறவர்களுக்கு!



இதர ஷாம்பூக்களை உபயோகித்து உங்கள் தலைமயிர் வரள்வதனால் நீங்கள் மனவேதனை படுகிறீர்களா? அப்படியானால் உடனே இந்த புதிய இணையற்ற, ஜே. கே. ஹெலன் கர்டிஸாரால் தயாரிக்கப்பட்ட லானோலின் லோஷன் ஷாம்பூவை உபயோகித்து பாருங்கள். இது உங்கள் தலை மயிருக்கு சக்தியையும், அழகான தோற்றத்தையும், பளபளப்பையும் அளிக்கவல்லது. முதல் உபயோகத்திலேயே, இந்தியாவின் ஒரே தயாரிப்பான லானோலின் லோஷன் ஷாம்பூவே, நீங்கள் விரும்பத்தக்க ஷாம்பூ என்பதை தெரிந்து கொள்வீர்கள். இதர ஷாம்பூவினால் இழந்த முக்கியமான சரும எண்ணெயை திருப்பி அளிப்பது போலிருக்கும் லானோலின்! டியாரா லானோலின் லோஷன் ஷாம்பூ அதிக நுரை தரக்கூடியது. ஒவ்வொரு தலை மயிருக்கும் போஷாக்களிக்கிறது. அதி விரைவில் அழுக்கையும் சிக்கையும் போக்குகிறது. உங்கள் தலை மயிரை உடனே உங்களிஷ்டப்படி அமைக்க முடிகிறது—மேலும் நீங்கள் நினைத்ததை விட அதிக அழகுடன் விளங்குகிறது.

டியாரா லானோலின் லோஷன் ஷாம்பூ
உங்கள் தலை மயிருக்கு புத்துயிர் அளிக்கிறது.

**ஜே. கே. ஹெலன் கர்டிஸ்**

பூரண விநியோகஸ்தர்கள் :
ஸ்பென்ஸர் அண்டு கம்பெனி லிமிடெட்.
மதராஸ் . பம்பாய் . டெல்லி . கல்கத்தா.

maa-JKH-5656 C. TAM

உலகத்தாருடைய கண்ணுக்கு ஒரு விஷயம் தட்டுப்படாமல் இருக்க வேண்டுமானல், அதை அவர்களின் கண்ணுக்கு நேராக வைத்து விடு. உலகத்தின் பார்வையிலிருந்து ஒன்றை ஒளிப்பதற்கு இதுவே ஏற்ற உபாயம்.

— எட்கார் அலன்போ

# கல்கி

## பொருளடக்கம்

**விசுவாவசு பங்குனி 28 ※ ஏப்ரல் 10**



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.


தமிழகத்தின் ராஜ்ய சபைத் தேர்தல்
ஐயோ, என் கழுத்தை நெரிக்கிறார்களே!


எங்களுக்கு வோட் போடாவிடில் ராணுவ ஆட்சி வந்துவிடும்.
பெரும்பான்மை பலம்
பாதுகாப்புச் சட்டம்


மக்கள்
P.K.



மலர் 25 ❋ இதழ் 37



# அமெரிக்காவின் உதவி

**பா**ரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தியின் அமெரிக்க விஜயம் மிக வெற்றிகரமாக முடிந்ததில் பாரத மக்கள் மகிழ்ச்சியுறுவார்கள்.

பாரதத்துக்குச் சாதகமாக இதுகாறும் இல்லாத ஒரு சூழ்நிலை இப்போது அமெரிக்காவில் நிலவி வருகிறது. பாகிஸ்தானின் சென்ற வருட ஆக்கிரமிப்புப் போரும், தற்போது அது சீனுவுடன் கொஞ்சிக் குலாவுவதும், பாகிஸ்தானிடம் அவர்களுக்கு ஒரு மனக் கசப்பையே ஏற்படுத்தி விட்டது. இந்த மனோபாவத்தின் விளைவாகப் பாரதத்தினிடம் அமெரிக்க அரசாங்கத்துக்கும் மக்களுக்கும் ஓரளவு அநுதாபமே உண்டாகியிருக்கிறது.

மேலும், இந்தியா ஒரு ஜனநாயக நாடு. ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும் சமீபத்தில் சுதந்திரம் பெற்ற பல நாடுகள், ஜனநாயக ஆட்சி முறையை விட்டு, ராணுவ ஆட்சியையும், எதேச்சாதிகார ஆட்சியையும் மேற்கொள்ளத் தொடங்கி விட்டன. இந்த நிலையில் இந்தியா ஒன்றுதான் ஐம்பது கோடி மக்கள் கொண்ட பெரிய ஜனநாயக நாடாக இருந்து வருகிறது. இந்த ஜனநாயக நாட்டில் பஞ்சமும் பசியும் தலைவிரித்தாடுகின்றன; உணவுதான்யப் பற்றுக்குறை ஏற்பட்டுள்ளது என்றால், ஜனநாயகத்தில் பற்றுள்ள அமெரிக்கர்களால் எப்படிச் சும்மா இருக்க முடியும்? 'உடுக்கை இழந்தவன் கை'போல் இந்தியாவுக்கு வேண்டிய உணவு தான்யத்தை அளிக்க முன்வருகிறார்கள். அமெரிக்க ஜனாதிபதி தம் மக்கள் சபையினரிடம் இந்தியாவுக்கு இன்னும் மூன்றரை மில்லியன் டன் கோதுமை அனுப்ப அனுமதி கோரினார். அப்படிக் கோருகையில், இந்தியாவின் மொத்த இறக்குமதி ஆண்டுக்கு 11 அல்லது 12 மில்லியன் டன் உணவு தான்யங்களாகும்; சென்ற ஆண்டு ஆறு மில்லியன் டன்னும், இந்த ஆண்டு ஆறரை மில்லியன் டன்னும் அனுப்பியாகி விட்டது: இன்னும் 3·5 மில்லியன் டன் அமெரிக்கா அனுப்ப வேண்டும் என்றார். பாக்கியை மற்ற உலக நாடுகள், உணவு தானியமாகக் கொடுக்கக் கூடியவை உணவு தானியமாகக் கொடுக்க வேண்டும் என்றும், அப்படிக்கின்றி ரசாயன உரமாகக் கொடுக்கக் கூடியவை ரசாயன உரமாக அனுப்ப வேண்டும் என்றும் கோரினார்.

இப்படி நமக்காக வேண்டி அமெரிக்க ஜனாதிபதி உலக நாடுகளை யாசிக்கவும் கேட்கவும் தயங்கவில்லை என்பது அவருடைய பெருந்தன்மையைக் காட்டுகிறது!

அது மட்டுமின்றி இந்தியா அந்நியச் செலாவணி கிடைக்காமல், தனது தொழிற்சாலைகளுக்கு வேண்டிய முக்கிய பொருள்களை இறக்குமதி செய்ய முடியாமல் சென்ற சில மாதங்களாகப் பெரும் கஷ்டத்துக்கு உள்ளாகியிருக்கிறது. அதற்கும் அமெரிக்க ஜனாதிபதி உலக பாங்கின் மூலமாக இந்தியாவுக்குத் தேவையான அந்நியச் செலாவணி யளிக்க முன்வந்திருக்கிறார். இதனால் நம் நாட்டில் சோம்பிக் கிடக்கும் பல தொழில்கள் இயங்கத் தொடங்கும்.

அமெரிக்காவின் மிக முக்கியமான பெருந் தொழிலதிபர்கள் சுமார் ஆயிரம் பேர்கள் கூடியிருந்த கூட்டத்தில் ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்கள் பின்வருமாறு பேசினார்: "கொடுக்கும் உதவியைப் போதும் போதாமல் கொடுக்காதீர்கள். கணிசமாகக் கொடுங்கள். அந்த உதவியைக் கொண்டு எங்கள் நாட்டில் தொழில்கள் சுறுசுறுப்பாக இயங்கக் கூடிய வகையில் கொடுங்கள்" என்று கேட்டுக் கொண்டார்.

அமெரிக்கத் தொழிலதிபர்கள், நமது நாட்டில் மூலதனம் போட்டுத் தொழில் வளம் பெருக்க மிகவும் தயங்கி வந்தார்கள். நமது அரசாங்கக் கட்டுப்பாடுகளும் கண்ட்ரோல்களும் மிகவும் வேதனையளிக்கின்றன என்று குறை கூறி வந்தார்கள். நமது வரி முறைகள் அந்நிய மூலதனம் போட உற்சாகமூட்டு

பவையாக இல்லை என்று கூறி வந்தார்கள். ஸ்ரீமதி இந்திரா அவர்களோ, கண்ட்ரோல்கள் தளர்த்தப்படும்; அதற்கான யோசனைகள் நடந்து வருகின்றன என்று கூறியிருக்கிறார். அதாவது பிரத்தியட்ச நிலையை உணர்ந்து பேசியிருக்கிறார்.

கடன் தருவதில் இரண்டு வகைகள் உண்டு. ஒரு நாட்டு அரசாங்கம் இன்னொரு நாட்டு அரசாங்கத்துக்குக் கடன் தரலாம். இன்னொரு வகை, ஒரு நாட்டுத் தொழிலதிபர்கள் தங்கள் சொந்தப் பொறுப்பில் இன்னொரு நாட்டுத் தொழிலதிபர்களுடன் கூட்டுச் சேர்ந்து கடன் தந்து, தொழில்கள் ஏற்படுத்தி உதவலாம். அரசாங்கம் கடன் வாங்கி ஏற்று நடத்தும் தொழில் நஷ்டமானால், அத்தொகையை ஈடுகட்ட மக்களிடம் வரி விதித்துத்தான் வசூலிக்கவேண்டியிருக்கிறது. அதுவே அமெரிக்கத் தொழிலதிபர்கள் இந்தியத் தொழிலதிபர்களுடன் கூட்டுச் சேர்ந்து தொழில் பெருக்க வாய்ப்பளித்தால் நஷ்டம் ஏற்பட்டால் அவர்களோடு போகும். லாபம் ஏற்பட்டால் நாட்டில் மக்களுக்குத் தொழில் வாய்ப்பு ஏற்படுவதுடன் அரசாங்கத்துக்கும் வருமானம் இருக்கும்!

எப்படியோ ஸ்ரீமதி இந்திரா காந்தி அமெரிக்கத் தொழிலதிபர்களிடையே பேசிய பேச்சு, நாட்டில் தொழில் வளம் பெருக வாய்ப்பு ஏற்படும் என்ற நம்பிக்கையூட்டுகிறது. அவர்களுக்கு அளித்த வாக்குறுதியை இந்தியாவுக்குத் திரும்பி வந்ததும் நிறைவேற்றி வைப்பார் என்று நம்புவோமாக!

மொத்தத்தில் சுதந்திரக் கட்சி காட்டும் பாதையில் போவதைத் தவிர கபி.ட்சத்துக்கு வேறு பாதை இல்லை!

இவ்வாறு அமெரிக்காவின் உதவிகளை, உணவுத் துறை, தொழில் துறை ஆகிய எல்லாவற்றிலும் பெற்றுக் கொண்டு அடுத்த தேர்தலுக்குள் நாட்டில் சற்று வளத்தையுண்டாக்கும் காங்கிரஸ், பின்னர் இந்த வளம், தொழில் பெருக்கம் எல்லாவற்றுக்கும் காரணம் தனது சோஷலிசக் கொள்கை தான் என்று தேர்தலின்போது கூறப்போகும் பொய்யை மக்கள் நம்பப் போகிறார்களா என்பதுதான் கேள்வி.

# மணிவிழாக் காணும் தமிழறிஞர்

நமது சகோதரப் பத்திரிகையான 'கலைமக'ளின் ஆசிரியரும், தமிழறிஞருமான திரு கி. வா. ஜகந்நாதன் அவர்கள் அறுபது ஆண்டுகள் நிறைந்து 61—ல் இம்மாதம் 9—4—66 அன்று அடியெடுத்து வைக்கிறார்கள் என்பது நம்பக் கூடியதாகவே யில்லை. நக்கீர தேவர் முருகனுக்கு இட்ட பல பெயர்களில் ஒன்று "என்றும் இளையாய்" என்பது. தமிழ்க் கடவுளான முருகனைப் பரவும் திருப்புகழ், அநுபூதி, அலங்காரம், திருமுருகாற்றுப் படை முதலிய நூல்களிலுள்ள நயங்களைப் பக்தி சிரத்தையோடும் இலக்கியச் சுவையோடும் தமிழ்கூறும் நல்லுலகமெங்கும் பலப்பல சமய நெறிக் கூட்டங்களில் எடுத்தியம்பிப் பரவசப்படுத்தும் திரு கி. வா. ஜ. வும் அம்முருகனைப் போலவே என்றும் இளையரோ என்றுதான் நினைத்து வந்தோம். அப்படி அவர் பேசில், அவர் குதித்துக் குதித்துப் பேசும் தோரணையில், அகமும் முகமும் மலர்ந்து கைகளில் பாவனை காட்டிக் கொண்டு பேசும் முறையில் ஓர் இளமை கொப்புளிப்பதைப் பார்த்திருக்கிறோம். அப்படிப்பட்டவருக்கு அறுபது வயது ஆகிவிட்டது என்றால் நம்பத்தான் முடியவில்லை.

திரு கி. வா. ஜ. அவர்கள் ஓர் அற்புத மனிதர். பண்டிதர்களுக்குள் மாபெரும் பண்டிதராக விளங்கிய தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாதய்யரவர்களின் முதல் மாணாக்கர் என்று பெயரெடுத்து அவரிடம் பாடம் கேட்டுத் தமிழ் வித்வான் பரீட்சையில் முதன்மையாகத் தேறினார். அதனால் தமிழ்ப் பண்டித உலகத்தில் தனிச் சிறப்பும் செல்வாக்கும் பெற்றார். தமிழ் அதிகம் படிக்காமல், தமிழ் இலக்கியத் துறையில் சேவை புரிய வரும் தமிழ் எழுத்தாளர்களிடையேயும் அவர் சர்வ வாகவமாக இனிமையாக ஒட்டிப் பழகுவார்.

சிறு வயதிலே முறைப்படி தமிழ் கற்கத் தொடங்கினால் ஆங்கிலப் புலமை பெறுவதற்கு வாய்ப்பில்லாமல் வெறும் தமிழ்ப் பண்டிதராகவே நின்றுவிட நேரும். ஆனால் கி. வா. ஜ. அவர்கள் சொந்த முயற்சியால் ஆங்கிலம் பயின்று பி. ஓ. எல்., எம்.ஓ. எல். பட்டங்கள் பெற்றுத் தமக்கு ஆங்கிலத்திலும் புலமை உண்டு என்று நிரூபித்துக் கொண்டிருக்கிறார். அந்த ஆங்கிலப் புலமை தமிழ் இலக்கியங்களை விமர்சிக்கும்போது வெகு வாகவமாக உதவ வருவதைக் காணும்போது ரசிகர்கள் மெய்சிலிர்த்து விடுகின்றனர்.

அவர் நல்ல சிறுகதை எழுத்தாளர். நல்ல இலக்கிய விமர்சனக் கட்டுரையாளர். பல நூல்களை விளக்கி எழுதியிருக்கிறார். அவர் எழுதியுள்ள தமிழ் நூல்கள் கணக்கில் அடங்கா! இருப்பினும் அவர் செய்யவேண்டிய பணிகள் இன்னும் எவ்வளவோ இருக்கின்றன என்ற உணர்ச்சிதான் அவருடன் நெருங்கிப் பழகியவர்களுக்கு ஏற்படும். அந்நூல்களையெல்லாம் இயற்ற நல்ல தேக ஆரோக்கியத்தையும் நீண்ட ஆயுளையும் தமிழ்க் கடவுள் அருள வேண்டும் என்று பிரார்த்திக்கிறோம்.

அவருக்கு ஒரு பொற்கிழி அளிக்க இந்த நாட்டு மன்னர்களாகிய பொதுமக்கள் தீர்மானித்திருக்கிறார்கள். ★அப்பொற்கிழி பொங்கி வழியும்படி செய்ய வேண்டியது அவருடைய எழுத்தையும் பேச்சையும் கேட்டு மகிழ்ந்த தமிழ்கூறும் நல்லுலகிலுள்ள அன்பர்கள் அனைவருடைய கடமையாகும்! அவரது திருவுருவத்தை இவ்விதழ் அட்டையில் வெளியிட்டுப் பெருமித மடைகிறோம்.

---

★ நிதி அனுப்ப வேண்டிய விலாசம்: ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர், பொக்கிஷதார், கி. வா. ஜ. மணி விழாக் குழு, "ஆசிரமம்", லஸ், சென்னை-4.

## தொழிற்கட்சியும் சோஷலிஸமும்

பிரிட்டனில் நடைபெற்ற தேர்தலில் தொழிற் கட்சியானது பெருவாரி ஸ்தானங்களைப் பெற்று வெற்றி அடைந்துள்ளதைக் கண்டவுடன், நம்மில் சிலருக்கு 'பிரிட்டன் சோஷலிஸத்தைத் தேர்ந்தெடுத்து விட்டது' என்று தோன்றும். ஆனால் இந்த எண்ணத்தைத் தொழிற் கட்சித் தலைவர் வில்ஸன் அவர்கள் சந்தேகத்துக்கு இடமின்றிக் களைந்திருக்கிறார். 'தொழிற் கட்சியானது கணிசமான மெஜாரிட்டி பெற்று விட்டபடியால் பிரிட்டனில் சோஷலிஸ ஆட்சி தீவிரம் அடைந்துவிடும் என அந்நிய நாடுகள் அஞ்ச வேண்டியதில்லை. இப்போது தொழிற்கட்சி நாட்டின் தேவைகளுக்கு உரிய கொள்கைகளைத்தான் சமயத்துக்கேற்ப வகுத்துப் பின்பற்றப் போகிறதேயன்றி, எந்தச் சித்தாந்தத்தையும் கண்மூடித்தனமாகப் பின்பற்றப் போவதில்லை' என்று அவர் கூறியுள்ளார். பெருத்த வெற்றி பெற்ற சமயத்தில் பெருமிதத்துடன் 'எங்கள் சோஷலிஸத்தையே இனி அமுலாக்குவோம்' என்று கூறாமல் 'சோஷலிஸத்தைக் கட்டிக்கொண்டு அழ மாட்டோம்' என்று அவர் கூறியிருப்பது அவருக்கு நாட்டு நலனில் உள்ள உண்மையான அக்கறையைக் காட்டுவதோடு பிரிட்டிஷ் மக்கள் இக்கட்சியை சோஷலிஸத்துக்காகத் தேர்ந்தெடுக்கவில்லை என்பதை மெய்ப்பிக்கிறது. மேலும் சோஷலிஸம் என்பது இன்று உலகுக்கு ஒவ்வாத வறட்டுச் சித்தாந்தமாகி விட்டது என்பதையும் வில்ஸனின் கூற்று வெள்ளிடைமலையாக விளக்குகிறது.

## ராஜ்யசபைக்குத் திரு சுந்தரம்

தமிழகச் சுதந்திரக் கட்சியின் உப தலைவராகிய கோவை திரு ஜி. கே. சுந்தரம் ராஜ்ய சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது ஒரு மகத்தான வெற்றி என்று கூற வேண்டும். ஏனெனில் காங்கிரஸ் அக்ராசனர் உள்படத் தமிழகக் காங்கிரஸ் கட்சியினர் அவரைத் தோல்வியுறச் செய்ய வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்தனர். தி.மு.க. சுதந்திரக் கட்சி நட்பை முறிக்கப் பெரும் பிரயாசைப்பட்டனர். மின் அதிபராகிய அவருக்கா வோட்டளிப்பது என்றும், பெரும் பெரும் பணக்கார முதலாளிகளையும் கறுப்பு மார்க்கெட்காரர்களையும் கொண்டிருக்கும் காங்கிரஸ் கட்சிக்காரர்கள் பேசி வந்தார்கள். இப்படிப் பல வகையில் மித்ர பேதம் செய்ய அவர்கள் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் படுதோல்வியடைந்தது மட்டுமின்றி, எல்லா அங்கத்தினர்களையும்விடப் பெருவாரியான வோட்டுக்கள் பெற்றுத் திரு சுந்தரம் ராஜ்யசபை அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். நம் ராஜ்யத்தில் இப்படி அவருக்கு மனப் பூர்வமாக வோட்டளித்து, அவர் வெற்றியைச் சரித்திர முக்கியத்வம் வாய்ந்த வெற்றியாகச் செய்த தி. மு. க. அங்கத்தினர்கள், பார்வர்ட் பிளாக் கட்சி அங்கத்தினர்கள், தங்கள் வோட்டுக்களை அளித்த ஒரு சில காங்கிரஸ் அங்கத்தினர்கள், சுயேச்சையாளர் ஆகிய அனைவருக்கும் நம் நன்றியும் பாராட்டுதலும் உரியனவாகும்.



திரு ஜி. கே. சுந்தரம் அவர்களைப் பற்றி இங்கு ஒரு வார்த்தை சொல்லியாக வேண்டும். அவர் தொழிலதிபர்களுள் ஒரு முக்கியமான தொழிலதிபர். தம் தொழிலின் நுட்பத்தையும், சிறப்பினையும் நன்கு அறிந்தவர். தொழில் அறிவு பெறுவதற்காக மேல் நாடுகளில் பிரயாணம் செய்து நல்ல தேர்ச்சி பெற்றவர். நிர்வாக அனுபவம் பெற்றவர்.

இவற்றுடன் கூட அவர் நல்ல தேச பக்த பரம்பரையைச் சேர்ந்தவர். காங்கிரஸ் என்றால் கஷ்டமும் சிறைவாசமும்தான் உண்டு என்றிருந்த நாட்களில் அவர் தந்தையார் தேச பக்தியின் காரணமாகக் காங்கிரஸில் பணியாற்றி வந்தார். வேதாரண்ய சத்தியாக்கிரகத்தில் திரு ஜி. கே. சுந்தரம் தீவிர பங்கு எடுத்துக் கொண்டு சிறை சென்ற தியாகி.

அவர் உண்மையான தியாகி யாதலால் அதை வெளியில் சொல்லிக் கொள்ள அவர் விரும்பாதவர்; தியாகத்தை வைத்துச் சம்பாதிப்பதை வெறுக்கும் உத்தம குணம் படைத்தவர்.

அவரைத் தேர்ந்தெடுத்து அனுப்பியது போன்ற சிறந்த காரியம் வேறு இருக்க முடியாது. அவருக்குப் போட்ட ஒவ்வொரு வோட்டும் ஒரு நல்ல மனிதருக்கு அளித்த சிறந்த வோட்டாகும்.

★

'சர்க்கார் வரிகளை ஐம்பது சதவிகிதம் குறைத்து விட்டால் சுதந்திரக் கட்சியைக் கலைத்துவிடுமாறுகூட யோசனை கூறுவேன்' என்று நான் ஒரு கூட்டத்தில் குறிப்பிட்டது சில தீவிர சுதந்திரக் கட்சித் தொண்டர்களுக்குக் கலக்கமளித்திருக்கிறது. இதுபோன்ற சவால்களைக் கண்டு அவர்கள் அஞ்சலாகாது. நான் கூறியது காரணமாக வரிகள் குறைந்தால் சுதந்திரக் கட்சிக்குப் புத்துயிரே கிடைக்கும்.

★

ருஷியாவில் கூட்டுப் பண்ணைகள் அடைந்துள்ள தோல்வி அந்நாட்டின் கதையில் ஒரு பாதியே; அங்கு தனியாரின் விவசாயம் கண்டுள்ள வெற்றி மறு பாதியாகும். ருஷியாவில் தனியாரின் சொந்த நிலம் மொத்தப் பயிர் நிலத்தில் மூன்றே சத விகிதம்தான். எனினும் மொத்த விளைச்சலில் 34 சத விகிதம் இதிலிருந்தே கிடைக்கிறது. ருஷியாவின் பால் உற்பத்தியில் 42 சத விகிதமும், முட்டைகளில் 70 சத விகிதமும், கம்பளத்தில் 20 சத விகிதமும் தனியாரிடமிருந்தே கிடைக்கின்றன. அங்கு மத்தியத் திட்ட முறையிட




முள்ள பிரமை எந்த அளவுக்கு நீங்கியிருக்கிறது என்பதை அந்நாட்டின் அதிகாரபூர்வமான ஒரு வெளியீடு உணர்த்துகிறது. 'இன்றைய கூட்டுப் பண்ணை முறை நாட்டை நாசத்துக்கு இட்டுச் செல்லுகிறது. எனவே இப்பண்ணைகளைப் பிரித்து ஐந்தாறு விவசாயிகள் கொண்ட கோஷ்டிகளுக்குச் சட்டபூர்வமான சொத்துரிமையுடன் வழங்க வேண்டும்' என்று இந்த அறிக்கை கூறுகிறது.

★

அதிகார வர்க்கத்தால் இழைக்கப்படும் அநீதிகளை விசாரித்துத் தனி மனிதனுக்கு நியாயம் கிடைக்க உதவும் 'ஆம்பட்ஸ்மான்' என்ற அமைப்பு பல நாடுகளில் பரவி வருகிறது. இதுபோல் இந்தியாவிலும் அமைய வேண்டுமெனச் சுதந்திரக் கட்சியின் 1962-ஆம் வருஷத்திய தேர்தல் அறிக்கை கோரிற்று.

சர்க்காருக்குச் சட்டப்படி உரித்தான துறைகள் தவிர மற்றவற்றிலும் அது தலையிடுவதால் அதிகார துஷ்பிரயோகம் மலிகிறது. இதற்கு நிவாரணம் கோருவோரும் பெருகுவதால் ஆம்பட்ஸ்மான் பிரபலமாகி வருகிறது. ஆட்சியிலுள்ள கட்சியிடம் எவ்விதச் சலுகையும் எதிர்பாராதோரைக் கொண்டு தனி மனிதர்களின் குறைகளை விசாரிப்பது இந்த அமைப்பின் வேலை முறை. அதிகார துஷ்பிரயோகம் மிகவும் அதிகமாகி விட்ட நாடுகளில் எல்லாக் குறைகளையும் விசாரிப்பது ஆம்பட்ஸ்மானுக்குச் சிரமமாகும். எனவே ஆம்பட்ஸ்மான் அமைப்பு ஏற்பட வேண்டும் என்ற இயக்கத்தோடு, அதிகார துஷ்பிரயோகத்தைக் குறைக்கும் முறையில் சர்க்காரின் அதிகாரத்தையே குறைந்தபட்சமாக்க வேண்டும் என்ற இன்னோர் இயக்கமும் சேர வேண்டும். ஒரு சிலர் ஆளும் கட்சியின் ஆதரவினால் அதிக சக்தி பெற்று மற்றவர்களுக்குத் தீங்கு இழைக்கக் கூடிய அடிப்படை நிலையையே நாம் மாற்ற முயல வேண்டும். இதனால் சர்க்கார் சிப்பந்திகள் மக்களுக்கு அநீதி இழைக்கும் வாய்ப்பு தானாகவே குறையும். அரசாங்கத்திடம் பகுத்தறிவுக்குப் பொருந்தாமல் நம்பிக்கை வைப்பதை விட்டு, அவரவரும் தம்மிடமே அதிக நம்பிக்கை கொள்ள வேண்டும். அரசாங்கம் எந்த அளவுக்கு நன்மை செய்யுமோ, அந்த அளவுக்குத் தீமையும் செய்ய முடியும்.

★

அரசியல் சாஸனத்தின் ஒரு ஷரத்தை எதிர்த்து ஒருவர் அதன் பிரதியை எரிப்பது குற்றம் எனச் சட்ட நிபுணர் எண்ணுவது சரியெனில் திருச்சியில் 'ஆரிய ஹிந்து ஆதிக்கத்தை'த் திராவிடக் கழகம் எதிர்ப்பதின் அறிகுறியாக திரு ஈ. வெ. ரா. அவர்கள் பொது இடத்தில் ராமாயணப் பிரதிகளை எரித்தது அதைவிடப் பயங்கரமான குற்றமாகும். இது போன்ற செயல்கள் பெரிய மதக் கிளர்ச்சியை உண்டாக்கக் கூடும். எனினும் இது ஒரு மன வியாதியின் அறிகுறிதான் என்பதையும், ஆளும் கட்சிக்குக் கழகம் உடந்தையாயிருப்பதற்கு ஆதரவு கிடைக்காததால் மக்களின் கவனத்தைத் திருப்புவதற்காகச் செய்த தந்திரம்தான் என்பதையும் மக்கள் உணர்ந்திருந்ததால் கிளர்ச்சி எதுவும் நடைபெறவில்லை. இஸ்லாம் அல்லது கிறிஸ்துவ நம்பிக்கைகளை ஆட்சேபிக்க விரும்புவோர் இதுபோல் எரிப்பு நடத்தியிருப்பின் அவர்கள் மீது வழக்குத் தொடரப்பட்டிருக்கும். ஆனால் ஹிந்து மதத்துக்கு மிகுந்த தன்னம்பிக்கை இருப்பதால் இத்தகைய தாக்குதல்களை அது லட்சியம் செய்வதில்லை.

ஏராளமான மக்கள் அரசியல் சாஸனத்தின் குறிப்பிட்ட பகுதிகளை மட்டும் மாற்ற வேண்டும் என எண்ணும்போது, அதற்கு உருவமாக நடத்தப்படும் எதிர்ப்பு இயக்கத்தால் சாஸனத்தின் கௌரவம் பாதிக்கப்பட்டதென எண்ண வேண்டியதில்லை. எனினும் இவ்வெதிர்ப்பு எரிப்பதன் மூலம் வெளிப்படக் கூடாது என்று கருதும் அதே அரசாங்கம் திரு ஈ. வெ. ராவின் எரிப்பு இயக்கத்துக்குப் பூரண சுதந்திரம் அளித்திருக்கிறது. இது ஏன் என்று காரணம் காட்டச் சர்க்கார் கடமைப்பட்டிருக்கிறது. காங்கிரஸுக்கு உதவி புரிவது, நாஸ்திகப் பிரசாரத்தினால் ஹிந்து மதத்தைத் தாக்குவது ஆகிய இரு கொள்கைகளைத் திராவிடக் கழகம் பின்பற்றுவதையும், தி.மு. கவோ இவ்விரு கொள்கைகளையும் ஆதரிக்காததையும் இங்கு குறிப்பிட வேண்டும்.

# கல்கி

ஏப்ரல் 17-1966

புத்தாண்டு மலரில்

ஆரம்பம்



# திருவருட் செல்வர்



திருமுருக

கிருபானந்த வாரியார்

எழுதுகிறார்







○ ● ○

1. பம்பாய் பாரதீய வித்யா பவனத்தின் தோ மந்திரில் ரமண மகரிஷியின் எண்பத்தாறுவது பிறந்த நாள் விழா ஸ்ரீ முன்ஷியின் தலைமையில் சிறப்பாக நடந்தது. 2. திருப்பூந்துருத்தியில் ஸ்ரீ தீர்த்த நாராயண குரு ஸ்வாமிகளின் ஆராதனை விழாவில் டாக்டர் வே. ராகவன் தொடக்கஉரை நிகழ்த்தினார். இவ்விழாவுக்குச் சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை தலைமை வகித்தார். 3. பிரிட்டிஷ் கொலம்பியா பெண்மணிகளும் அவர்களின் கனடிய நண்பர்களும் தேசியப் பாதுகாப்பு நிதிக்கு இரண்டாயிரம் ரூபாய் நன்கொடை வழங்கினர். கடிதத்தையும் அதில் கையெழுத்திட்டுள்ளோரின் பட்டியலையும் பாரதப் பிரதமர் இந்திரா பார்வையிடுகிறார். இந்த நிதித் தொகையை அந்நியச் செலாவணியிலேயே தரப் போகிறார்களாம். 4. அமெரிக்க விண்வெளி வீரர்கள் டேவிட் ஸ்காட்டும் நீல் ஆம்ஸ்ட்ராங்கும். இவர்கள் ஜெமினி–8 விண்வெளிக் கப்பலில் சென்று அதனை மற்றுமொரு செயற்கைச் சந்திரனுடன் இணைசேர்க்க முயன்று வெற்றி கண்டனர். எனினும் இயந்திரக் கோளாறு காரணமாக மூன்று நாட்கள் விண்வெளிப் பிரயாணத் திட்டத்தைக் கைவிட்டுப் பூமிக்குத் திரும்பி விட்டார்கள்.



○ ● ○

## செய்திப் படங்கள்

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில் ஈறுகளைப் பலப்படுத்துகிறது என்று




ஒழுங்காக உங்கள் ஈறுகளைத் தேய்த்துக்கொள்ளுங்கள் என்று பல் வைத்தியர்கள் உபதேசிக்கின்றனர். இதனால் வீரிய குளோரோபில் லின் முழுப்பலனையும் கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட்டில் பெற்று ஈறுகளை உறுதியாகவும், ஆரோக்கியமாகவும் ஆக்குவதுடன் பயோரியா வராமலும் தடுக்க முடிகிறது. இந்த மேன்மையான குளோரோபில் டூத்பேஸ்ட், உலகத்தில் பெரிய, பல் தேய்க்க உதவும் இதனுள்ள சாதனங்களைத் தயாரிப்பவர்களின் தயாரிப்பே ஆகும்.

வாயிலிருந்து சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கின்றது: கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட்டினால் ஒழுங்காகவும், முக்கியமாக சாப்பிட்டவுடனேயும் பல்துலக்கி, ஈறுகளில் ஒட்டிக்கொண்டிருக்கும் உணவுத் துணுக்குகளையும் கிருமிகளையும் நீக்கி, பற்கள் சொத்தையாகாமல் தடுங்கள்.

வாயின் துர்நாற்றத்தை அதிதீவிரமாக ஒழிக்கின்றது: வாய் துர்நாற்ற மட்டத்தைக் காட்டும் "ஆஸ்மோஸ்கோப்" சோதனை மூலம் பரிசோதித்ததில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறு எந்த சாதாரண டூத் பேஸ்ட்டையும் விட மிகவும் தீவிரமாக வாயின் துர்நாற்றத்தை ஒழித்து, வெளியிடும் சுவாசத்தை புதுப்பித்து சுத்தமாக்குகிறது என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது.

வேறு எந்த டூத் பேஸ்ட்டிலும் இதை விட அதிக வீரிய குளோரோபில் இல்லை. குழந்தைகள் அதன் இனிய பெப்பர்மிண்ட் வாசனையை விரும்புகின்றனர்.




பணத்தை மிச்சப்படுத்துங்கள்—
பெரிய எகானமி
சைஸை வாங்குங்கள்!

CTPA. G. 11 TAM

# உலவிடும் தமிழ்க் கோயில்

அருகிணைக் கல்விச் செல்வம்
அளிப்பதில் குறையா ஊக்கம்;
கருணையின் ஆழம் தெரியாக்
கடலினும் பரந்த உள்ளம்;
பெருமையின் கோடு ஏறிப்
மிளிர்ந்திடும் ஞான வானே!
முருகனை எண்ணி உருகும்
முதுபெரும் பக்தர்: நல்ல

காவிரிக் கரையின் தெற்கில்
கா - விரி கிருஷ்ண ராயர்
பேர்விரி புரத்தின் தோன்றல்;
பார்வதி யம்மை வாஸு
தேவரின் தவத்தால் தோன்றித்
தூயராய்ப் பத்தாம் ஆண்டில்
நாவலர் ஆகித் தமிழின்
நலம்பல விளக்கும் செம்மல்

தமிழையே மூச்சாய்க் கொண்ட
தாத்தாவின் முதன்மைச் சீடர்
அமிழ்தெனும் வாக்கால் மக்கள்
அன்பினைக் கவர்ந்த கள்வர்
தமிழரின் பெருமைக் கெல்லாம்
தனிஒரு கிவா ஜவாய்த்
தமிழொலி முழக்கி எங்கும்
தமிழ்க்'கலை மகளாய்'த் தோற்றம்;

அன்பருக் கன்பர் ஆவார்,
அறிஞரில் அறிஞர்; நம்மை
இன்முகம் காட்டிப் பேசும்
இனியதோர் குழவிப் பண்பு
துன்பமே படரா நெஞ்சம்
தூய்மையாய் வாழ்ந்து காட்டி
இன்றுடன் அறுப தெய்த
இன்னமும் பல்நாள் வாழ்க!

அறத்தினைக் காக்க வென்றே
அமைந்ததோர் திருப்பணர் தான்
உறவுடன் தருமை, தமிழை
ஊக்குமோர் திருவை போன்ற
சிறப்புறு மடங்கள் மூன்றும்
சேர்ந்துமே தமிழை வாழ்த்த
அறப்பொது கண்டு வாழும்
அன்புள்ளம் நீடு வாழ்க!

நலமருள் கோவில் என்றும்
ஜகத்குரு "காம கோடி"
அலகிலா அன்பு கொண்டே
அளித்தபேர் ஆம்'வா கீச
கலாநிதி' என்றும் நின்று
கலங்கரை விளக்கம் ஆக
உலவிடும் தமிழ்க் கோவில்ஆம்
உயர் 'கிவா ஜ'வும் வாழ்க!

'மஹி'





## 'எலே!'

இரவு மணி ஒன்பது. கூடத்தில் நடு நாயகமாக அமர்ந்து இனிக்க இனிக்கப் பேசிக் கொண்டிருந்தார் ஸ்ரீ கி. வா. ஜ. விருந்துக்கு வந்திருந்த ஸ்ரீ கா. ஸ்ரீ. ஸ்ரீ. மாயாவி, மகரம், டி. வி. சுவாமிநாதன் முதலிய அன்பர்கள் அனைவரும் பசியை மறந்து தமிழைப் பருகிக் கொண்டிருந்தார்கள். ''சமையல் தயாராகி விட்டது'' என்று மூன்றாம் முறையாக அறிவிப்புக் கொடுத்தாள் எனது சகதர்மிணி பாலாம்பாள். சுவையான பேச்சிலே குறுக்கிட மனமின்றி இலைக்கட்டும் கையுமாய் நெடு நேரமாக நான் நின்றிருந்தேன். ''சமையல் ஆறிவிடுமே!'' என்று என் மனைவி மீண்டும் எச்சரிக்கவே, நான் கி. வா. ஜ.வை நோக்கிப் பழகு தமிழில் கேட்டேன், ''எலே போடலாமா?'' என்று.

''என்ன?'' என்று கேட்டார் கி. வா. ஜ.

கையில் உள்ள இலைக் கட்டைக் காட்டி, ''எலே'' என்றேன் நான்.

''நீங்கள் இவ்வளவு பேரும் சாட்சி! இவர் என்னை, 'எலே!' என்று அழைக்கிறார்!'' என்றார் கி. வா. ஜ.



எல்லாரும் சிரித்து ஆரவாரித்தபடி எழுந்து வந்து விருந்துக்கு வரிசையாக அமர்ந்தார்கள்.

- எல்லார்வி

## சாம்பலுக்கும் உபயோகம் உண்டு!

நெய்வேலிக் கரியை நீங்கள் உபயோகிக்கிறீர்களா? சாம்பல் கொட்டுகிறது. அதைப் பாத்திரம் தேய்க்க உபயோகிக்கலாம் என்பது உங்களுக்கு ஏற்கனவே தெரிந்திருக்கும். ஆனால் அதை சிமிண்டுடன் கலந்தும் உபயோகிக்கலாம் என்று இப்போது கண்டுபிடித்திருக்கிறார்கள்.

அனல் மின்சார நிலையங்கள் ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கான டன் சாம்பலைக் கொட்டுகின்றன. இதை என்ன செய்வதென்று தெரியாமல் தலையைச் சொறிந்து கொண்டிருந்த பிரிட்டிஷ் விஞ்ஞானிகள், ஆராய்ச்சிக்குப் பின், இப்போது இது ஒரு சிறந்த உப பொருள் என்று கூறுகிறார்கள்.



'பி. எப். ஏ.' (Pulverized fuel ash — தூளாக்கப்பட்ட எரி பொருள் சாம்பல்) என்று நாமகரணம் செய்யப்பட்டிருக்கும் இந்தச் சாம்பலின் உபயோகங்கள் வியக்க வைக்கின்றன. சுண்ணாம்பும் தண்ணீரும் சேர்க்கும்போது சிமிண்டுபோல் உறையும் இந்தச் சாம்பல் கட்டட வேலைகளுக்குப் பெரிதும் பயன்படுத்தப்படுகிறது. இங்கிலாந்திலுள்ள காரன்வாலில் கட்டப்பட்டிருக்கும் ஸ்திதியன் (Sthithian) அணைக்கட்டில் முப்பது சதமானம் வரை சிமெண்டுக்குப் பதிலாக இந்தச் சாம்பல் சேர்க்கப்பட்டது.

'காங்கிரீட்' தயாரிப்பில் ஜல்லி, மணலோடு இதையும் ஒரு 'கலவை'ப் பொருளாக உபயோகிக்கும்போது நமக்குச் செலவு குறைகிறது. உஷ்ணம் அதிகம் ஏற விடாமல் இது தடுப்பதால், காங்கிரீட் வெடிப்பதில்லை. களிமண்ணுடன் இதைக் கலந்து செய்யப்படும் செங்கற்கள் எளிதில் உலர்வதுடன் எளிதில் 'வெந்தும்' விடுகின்றன. தயாரிப்புச் செலவு குறைகிறது.

தகவல்: டி. என். கிருஷ்ணன் ஆதாரம்: 'நியூ ஸயன்டிஸ்ட்'




## லிங்கன் தாடி வளர்த்த கதை

அவர் ஏன் தாடி வளர்த்தார் என்றால் ஒரு கதையே இருக்கிறது. 'வெஸ்டு பீல்டு' என்ற இடத்தில் வசித்து வந்த பதினொரு வயதுள்ள ஏழைச் சிறுமி ஒருத்தி, ஒருநாள் தன் தந்தை வாங்கிக் கொடுத்த லிங்கனுடைய படத்தைப் பார்த்துக் கொண்டு இருந்தாள். படத்தில் அவர் கன்னங்கள் ஒட்டி முகம் ஒடுக்கமாயிருந்ததைக் கவனித்தாள். 'இவர் தாடி வளர்த்தால் முகம் எடுப்பாயிருக்கும் அல்லவா?' என்று அவளுக்கு யோசனை தோன்றவே அவள் தன் யோசனையை ஒரு கடிதத்தில் எழுதி அதை லிங்கனுக்கு அனுப்பி வைத்தாள். மேலும் தாடி வளர்த்தால் தலைவர் தேர்தலில் அவருக்குப் பெண்களின் வாக்குகள் அதிகம் கிடைக்கும் எனக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தாள். ஒரு சிறு பெண் தன்னிடம் இவ்வளவு அன்பு கொண்டு எழுதியிருந்ததைக் கண்ட லிங்கன் அதுமுதல் தாடி வளர்க்கத் தொடங்கினார்!

தகவல்: பிரேம்ராஜு, சீர்காழி

## போ, சேர், வை, வால்!

இந்தச் சொற்கள் அனைத்துக்கும் பொதுவான ஒரு விஷயம் உண்டு. அது என்ன என்று கேட்கப் போனால் நீங்கள் யோசித்து ரொம்பச் சிரமப்படுவீர்கள். ஆகவே, நானே கூறி விடுகிறேன். இவை யெல்லாம் வெளி நாட்டு நதிகள் சில வற்றின் பெயர்கள்!

போ (Po) என்னும் நதி இத்தாலியில் ஓடுகிறது.

சேர் (Cher) என்னும் நதி பிரான்ஸில் உள்ளது.

வை(Wye)என்னும் நதி இங்கிலாந்தில் இருக்கிறது.

வா(Vah) என்னும் நதி செக்கோஸ் லோவாகியாவில் உள்ளது.

வால் (Waal) என்னும் நதி நெதர்லாந்தில் ஓடுகிறது. - எம். ஆர். எல்.

## அன்பில்லாத ஆசிரியருக்கு




அமெரிக்கப் பத்திரிகை ஆசிரியர் ஒருவருக்குப் பின்வருமாறு ஒரு கடிதம் வந்தது:

ஐயா, என்னை விவாகரத்து செய்து விடத் தீர்மானித்திருந்த என் மனைவி தங்கள் பத்திரிகையின் சமீப இதழில் வெளியாகிய விவாகரத்தும் அதன் விபரீத விளைவுகளும் என்ற கட்டுரையைப் படித்த பின் தன் தீர்மானத்தை விட்டு விட்டு, என்னுடனேயே சேர்ந்து வாழப்போவதாகக் கூறியிருக்கிறாள்.

தங்கள் பத்திரிகைக்கு நான் செலுத்தியிருக்கும் சந்தாத் தொகையை உடனடியாகத் திருப்பித் தர வேண்டுகிறேன். எனக்கு உங்கள் பத்திரிகை இனி வேண்டாம்.... எஸ். வரதராசன்

## பெயர் மாற்றம்!

சென்னை கிறிஸ்தவக் கல்லூரியின் மூலவராகப் பல ஆண்டுகளுக்கு முன் விளங்கிய பேராசிரியர் மில்லர் துரை அவர்கள் அக்கல்லூரியில் ஆங்கில வகுப்பு நடத்தும் போதகராகவும் பணியாற்றினார். ஒரு நாள் பி. ஏ. வகுப்பு மாணவர்களுக்கு ஷேக்ஸ்பியர் போதிப்பதற்காக வகுப்பறைக்குள் நுழைந்தார். வகுப்புத் தொடங்கு முன், ஆஜர்ப் புத்தகத்தைப் புரட்டி ஒவ்வொரு மாணவராய்ப் பெயர் சொல்லிக் கூப்பிட்டார். அதில் ஒரே ஒரு மாணவரின் பெயரை மட்டும் ஐரோப்பியரான அவரால் சரியாக உச்சரிக்க முடியவில்லை. நெடுநாட்களாகவே அந்த மாணவரின் நீளமான பெயர் அந்தப் பேராசிரியரின் வாயில் நுழைய மறுத்துத் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்தது. அவர் அந்த மாணவர் தன் பெயரை மாற்றி வைத்துக் கொள்ள வேண்டும் என்று அபிப்பிராயப்பட்டார். அந்த மாணவரும் "முயலுகிறேன்" என்று பதிலளித்தார்.



அடுத்து அம்மாணவர் கல்லூரிக் காரியாலயத்தில் சொல்லித் தம் பெயரை மாற்றிக் கொண்டார்.

வழக்கம் போல் மில்லர் துரை அவர்கள் ஆஜர்ப் புத்தகத்தைப் புரட்டியபோது அதில் அந்த மாணவரின் பெயர் மாற்றப்பட்டிருந்தது. ஆனால் மாற்றப்பட்ட அந்தப் பெயர் இன்னும் கொஞ்சம் நீளமாக உச்சரிக்க முன்னிலும் கடுமையாகப் போய் விட்டது. ஆசிரியர் மில்லர் துரை அந்த மாணவரை உற்று நோக்க, ஆசிரியரின் பார்வையாலேயே அவரது கேள்வியைப் புரிந்து கொண்ட அந்த மாணவர், "நீங்கள் விழிகளால் கேட்கும் கேள்வி எனக்குப் புரிகிறது. குற்றம் என்மீது இல்லை. நீங்கள் கேட்டுக் கொண்டவாறே என் பெயரை மாற்றிக் கொண்டிருக்கிறேன். 'சூரிய நாராயணன்' என்ற பெயரை 'வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரி" என்று மாற்றிக் கொண்டு விட்டேன். நீங்கள் பெயரை மாற்றத்தான் சொன்னீர்களே தவிர குறைக்கச் சொல்லவில்லையே!" என்று கேட்க ஆசிரியர் மில்லர் துரை பதில் கூற முடியாமல் விழித்தார்.

இந்தச் சம்பவத்தால் முதலில் கவரப்பட்ட மில்லர் துரை பின்னால் சாஸ்திரியாரைத் தமது கல்லூரியிலேயே தமிழாசிரியராக இழுத்துக் கொண்டு விட்டாராம்.

ஆதாரம்: 'சூரிய நாராயண சாஸ்திரி' என்ற நூல். தகவல்: தி. வை. நடராஜன்

"என்னய்யா நீ! டைப் அடிக்கிற லட்சணம்...... டைப்ரைட்டரே நீ அடித்ததைப் பார்த்துச் சிரிக்கிறதே, ஐயா!"






'புத்தகத் தயாரிப்பு' என்பது கலை உணர்ச்சி கலந்த உன்னதத் தொழில்களில் ஒன்று. வியாபார நோக்கமும் சமூக சேவையும் ஒருங்கே கலந்த இந்தத் தொழிலில் அவ்வப் போது எதிர்பாராத சிக்கல்களும் சிரமமும் தோன்றத்தான் செய்கின்றன. இத் தொழிலின் இன்றைய நிலைபற்றி தெளிவாகத் தெரிந்து கொள்ள 'பழனியப்பா பிரதர்ஸ்' வெளியீட்டு ஸ்தாபனத்தின் உரிமையாளரான திரு எஸ். எம். பழனியப்ப செட்டியாரைப் பேட்டி கண்டோம்.

தமிழில் வெளியாகும் புத்தகங்களில் பெரும்பாலானவை, சாதாரண சராசரி வாசகருக்கு வாங்கி வாசிக்க முடியாத அளவிற்கு அதிக விலையில் விற்கப்படுகின்றன என்பது உண்மையா?

''நம் நாட்டிலே தனி வாசகன் ஆவலோடு புத்தகம் வாங்கிப் படிக்கும் நிலை வெகுவாகப் பாதிக்கப்பட்டு விட்டது. ஆண்கள் கிடைக்கும் நேரத்தை ஆங்கிலப் புத்தகங்கள் படிப்பதில் செலவழிக்கிறார்கள். அவர்கள் வீட்டுப் பெண்களுக்கோ, வாரத்தில் மூணு நாலு வாரப் பத்திரிகைகள் கைக்குக் கிடைத்து விடுகின்றன. வாரம் முழுதும் இவைகளைக் கொண்டு ஓட்டலாம். அப்படியே நேரம் மிஞ்சினாலும் திரைப் படங்களுக்குப் போகும் ஆர்வம் இருக்கவே இருக்கிறது. இந்தச் சூழ்நிலையில் அவர்கள் கவனம் தமிழ்ப் புத்தகங்கள் வாங்கிப் படிப்பதில் அதிகம் செல்லாததில் ஆச்சரியமில்லை. பெண்களின் ஆதரவு இப்படிக் குறைவது புத்தகங்கள் விற்பனையைப் பாதிக்கத்தானே செய்யும்? நிறையப் புத்தகங்கள் விற்பனையாகும் நிலை ஏற்பட்டால்தான் அவைகளின் விலையைக் குறைத்து வைக்கப் பிரசுர கர்த்தர்களால் இயலும். விலையைக் குறைத்தால்தான் விற்பனை அதிகமாகும் என்ற நியதியும் உண்டு. கல்யாணமானால்தான் பைத்தியம் தெளியும். பைத்தியம் தெளிந்தால்தான் கல்யாணமாகும் என்று வேடிக்கையாகச் சொல்வார்களே! அது போலேதான். இந்தச் சூழ்நிலையிலே தமிழ்ப் புத்தகங்களின் விலை ஓரளவு அதிகமாக இருப்பது உண்மைதான். ஆனால் நம் நாட்டில் அச்சாகும் ஆங்கிலப் புத்தகங்களைப் பார்க்கிற போது தமிழ்ப் புத்தகங்களின் விலை ரொம்ப ரொம்பக் குறைவு! இத்தனைக்கும் ஆங்கிலப் புத்தகங்களுக்கு மார்க்கெட் பெரிது.''

பிரசுரத்திற்கும் புத்தகங்களை ஏற்றுக் கொள்ளுமுன் பிரசுரகர்த்தர்கள் அவைகளை நல்ல முறையில் பரிசீலித்து ஏற்றுக் கொள்கிறார்களா?

''அதுதான் முறை. ஆனால் எல்லாப் பிரசுரகர்த்தர்களும் இப்படிச் செய்கிறார்கள் என்று சொல்வதற்கும் இல்லை. வியாபார ரீதியில் வருடத்துக்கு இத்தனை புத்தகங்களையாவது வெளிக் கொண்டு வர வேண்டும் என்று திட்டமிடும் போது இந்தப் பரிசீலனையில் அதிகமாகக் கவனம் செலுத்த முடிவதில்லை என்பது வாஸ்தவம். அப்படிப் பரிசீலனை செய்துமே சில சமயங்களில் ஏமாற்றத்துக்குள்ளாக வேண்டியிருக்கிறது. கொஞ்ச நாளைக்கு முன்னாலே மூன்று வெவ்வேறு பிரசுரகர்த்தர்கள் மூன்று தலைப்புக்களில் புத்தகங்கள் வெளியிட்டார்கள். எழுதியவர்களும் வெவ்வேறு நபர்கள்தான்! ஆனால் அந்த மூன்று புத்தகங்களிலும் பாத்திரங்களின் பெயர்கள் மாறியிருந்தாலும் மூலக் கதை என்னவோ ஒரே ஆங்கிலக் கதைதான்! இன்னொரு விஷயம்! என்னென்ன 'சப்ஜெக்டு'களைப் பற்றி யார்தான் எழுதுவது என்கிற வரையறை இல்லாமலும் போய் விட்டது. 'பிரசவ கால உதவிகள்' பற்றி மருத்துவம் பயின்ற டாக்டர்கள் எழுதினால் அதில் ஆதாரம் உண்டு. அதற்குப் பதிலாகக் கொஞ்சம் ஆங்கிலம் பயின்றவர்கள் எல்லாரும் எதை எதையோ மொழிபெயர்த்து வைத்திய விஷயமாக எழுதி விடுகிறார்கள். புத்தகம் வெளியிடுபவர்களுக்கு ஆதாயமான விஷயமாக இருக்கலாம். அது மட்டும் போதுமா?



''என் நண்பர் திரு 'கொனஷ்டை' ஒரு புத்தகம் உண்மையிலேயே நல்ல புத்தகமா இல்லையா என்று தெரிந்து கொள்ள ஒரு விசித்திரமான அளவுகோல் வைத்திருக்கிறார். அவர் வீட்டில் பிரத்தியேகமாக அமைக்கப்பட்ட ஒரு சோபா செட் உண்டு. எழுந்திருக்காமலே சில விசைகளின் உதவி கொண்டு அதைச் சாய்வாகவோ, படுக்கை மட்டத்துக்கோ மாற்றலாம். அந்தச் சோபாவில் சுகமாகச் சாய்ந்து அமர்ந்து ஒரு புத்தகத்தைப் படிக்கும்போது கொஞ்சம் கூடத் தூக்க உணர்ச்சி வரவில்லையானால், அந்தப் புத்தகம் நிச்சயமாகவே நல்ல புத்தகம் என்ற முடிவுக்கு வந்து விடுவார். அந்தச் சோபாவுக்கு அவர் கொடுத்துள்ள பெயர் 'புக் மீட்டர்.'

**சமையற்கலையைப் பற்றிய ஒரு தமிழ்ப்புத்தகம் ஏழு பதிப்புக்கள் வரை வெளி வந்திருப்பதாகத் தெரிகிறது. இதுபோல் வேறு புத்தகங்களுக்கும் கிராக்கி உண்டா?**

"இன்று புத்தகங்கள்வாசிப்பதில் ஈடுபாடுடையவர்கள், பெரும்பாலும் பெண்மணிகள்தான். அவர்கள் ரசனையைப் பொறுத்துத்தான் இன்றைய புத்தக மார்க்கெட் வளருகிறது. நாவல்களும், 'டெக்னிகல்' புத்தகங்களும் தான் நிறைய விற்கின்றன. சமையற் கலை போன்ற புத்தகங்களும் ஒருவிதத்தில் டெக்னிகல் புத்தகங்கள்தானே!



விற்பனையில் முதலிடம் பெறுவது நாவல்கள்தான்."

**ஆசிரியர்கள் - பிரசுரகர்த்தர்கள் உறவு நல்ல முறையில் வளர்கிறதா?**

"நல்ல முறை என்பது அவரவர்கள் பரஸ்பர அபிப்பிராயத்தைப் பொறுத்தது. கணக்கு வழக்குகளைச் சீராக வைத்துக் கொண்டு நேர்மையாகத் தொழில் நடத்த விரும்பும் பதிப்பாளர்களால் அதிகப்பட்சமாகப் பதினைந்து சதவிகித ராயல்டிதான் கொடுக்க முடியும். மீதியில்தான் விற்பனையில் கழிவு, விளம்பரக்கம், லாபம் எல்லாம் அடங்க வேண்டும். இதை அனுசரித்து நடக்கும் கோஷ்டியினரும் இருக்கத்தான் செய்கிறார்கள். சில எழுத்தாளர்கள் தங்கள் சிருஷ்டிகளைக் கட்டி எடுத்துக் கொண்டு பதிப்பாளர்களிடம் வந்து 'இதை வைத்துக் கொண்டு கொடுப்பதைக் கொடுங்கள்' என்று கேட்கிறார்கள். தம் சிருஷ்டி ஒன்றைப் புத்தக உருவில் அச்சில் பார்க்க வேண்டும் என்று அந்த எழுத்தாளர் ஆசைப்பட்டோ அல்லது ரொம்பவும் பண முடையாக இருந்த காரணத்தாலோ ஒரு தடவை இப்படிச் செய்வதில் தவறில்லை என்று கொள்ளலாம். ஆனால் அவர்கள் இதையே மாமூலாக நடத்த நினைக்கும் போது அவர்கள் சிருஷ்டிகளின் தரம் தானாகவே குறைந்து விடுகிறது என்பது அவர்களுக்கு மறந்து போய் விடுகிறது.

பதிப்பாளர்களுக்கு இந்த முறை லாபகரமாகப் படுவதால், அவர்கள் பிற்காலத் தொடர்பு, கணக்கு வழக்கு இவைகளுக்கு இடம் கொடுக்காமல், கையெழுத்துப் பிரதிகளை வாங்கிக்கொண்டு அந்தக்



திரு பழனியப்ப செட்டியார்

கணத்திலேயே உறவைக் கத்தரித்து விடுகிறார்கள். 'எத்தனை பிரதிகள் அச்சடிக்கப்பட்டன? என்ன விலைக்கு விற்கப்பட்டது?' என்ற கேள்விக்கெல்லாம் இடமில்லை.

இந்த வழக்கம் பதிப்பாளர்களுக்கும் சரி, எழுத்தாளர்களுக்கும் சரி, நேர்மையானதில்லை என்பதுதான் என் அபிப்பிராயம்."

**பதிப்பாளர்கள் முழுக்க முழுக்க வாசகசாலைத் தேவையை நம்பித்தான் தொழில் நடத்த வேண்டுமா?**

"இப்போதைய சூழ்நிலை அநேகமாக அப்படித்தான். இருந்த இடத்திலிருந்து பிரதிகளுக்கு ஆர்டர் வரும் என்ற காலம் மலையேறி விட்டது. ஊர் ஊராகச் சுற்றி அலைந்து திரிந்து வாசகசாலை ஆர்டர்கள் வாங்கி வந்தால் பிழைப்பு நடத்த முடியும். ஆர்டர்கள் வாங்கப் பிரசுர கர்த்தர்கள் பலர் எதையும் செய்யத் தயாராகும்போது இந்தத் தொழிலுக்கு அத்தியாவசியமான கௌரவமும் நேர்மையும் பாதிக்கப்படுகின்றன. பஞ்சாயத்துப் போர்டு தலைவர் வீட்டில் புத்தகங்கள் பரணில் தூசு படிந்து தூங்கும் பரிதாப நிலைமையையும் ஒரே புத்தகம் தனி மனிதருக்கு இரண்டு ரூபாய்க்கும் வாசக சாலைக்குப் பன்னிரண்டு ரூபாய்க்கும் விற்கப்படும் அலங்கோலத்தையும் காண்கிறோம். லஞ்ச ஊழல் மலிந்துபோன காரணத்தால் பஞ்சாயத்துப் போர்டு வாசகசாலைகளுக்கான புத்தகங்கள் வாங்குவது கொஞ்சநாட்களாகத் தடை செய்யப்பட்டிருக்கிறது. பழைய நிலை வரும் வரை பதிப்பாளர்களுக்குக் கொஞ்சம் சிரமம்தான். இப்போது சர்க்காரே தமிழ்ப் புத்தகங்கள் வெளியிட ஆரம்பித்திருக்கிறார்கள். அந்தப் புத்தகங்களுக்குப் போகத்தான் மற்றப் புத்தகங்களுக்கு



வாசகசாலைகளில் இடம் என்ற நிலையும் தோன்றியிருக்கிறது."

**சில புத்தகங்களுக்கு வெளியீட்டு விழா என்று தடபுடலாக நடத்துகிறார்களே! அதைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?**

"நான்கூட சமீபத்தில் 'பாப்பாவுக்குக் காந்தி' என்ற புத்தகத்துக்கு அத்தகைய விழா நடத்தினேன். அதன் ஆசிரியரையும் ஓவியரையும் பாராட்ட வேண்டும் என்ற ஆசை. அதனாலே அதை நடத்தினேன். இந்த மாதிரி விழாக்கள் எப்போதாவது சிறந்த புத்தகங்களுக்கு நடத்தினால் நன்றாயிருக்குமே தவிர

அதை ஒரு சம்பிரதாயமாகக் கொண்டு வந்து விட்டால் அதன் மதிப்புக் குறைந்து விடுகிறது. பத்திரிகைகளில் பிரஸ்தாபப் புத்தகத்தைப் பற்றி ஒரு குறிப்பு வந்தால் வியாபார ரீதியில் நன்றாக இருக்குமே என்று பலர் நினைக்கிறார்கள். இப்போதெல்லாம் அவர்கள் எதிர்பார்க்கும் அளவுக்கு அந்த நிகழ்ச்சிகள் முக்கியத்துவம் பெறுவதில்லை.''

**புத்தகப் பிரசுரத்துறையின் எதிர்காலம் பற்றி ஏதாவது சொல்ல முடியுமா?**

இந்தத் துறைக்கு எப்போதுமே நல்ல எதிர்காலம் உண்டு. இந்தத் துறையில் ஈடுபடுபவர்கள், தங்கள் கௌரவத்தையும், தொழில் கௌரவத்தையும் காப்பாற்றிக்கொள்ளும் உறுதி படைத்தவர்களாக இருக்க வேண்டும். அச்சடித்த புத்தகங்கள் அனைத்தையும் அப்படியே வாசகசாலைகளுக்கு எந்த முறையிலாவது ஏற்றி அனுப்பிவிட்டுச் செக்கை எதிர்பார்த்து நிற்க வேண்டும் என்ற மனோபாவத்தைக் கைவிட வேண்டும். வாசகசாலைகள்தான் தங்கள் தங்கச் சுரங்கம் என்று நினைக்கும் போதுதான் அவர்கள் பல அல்லல்களுக்குத் தங்களையும் மற்றவர்களையும் ஆளாக்கிக் கொள்ளுகிறார்கள். ஓரளவு தனி மனிதனையும் மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். தனி மனிதனுக்கும் சரி, வாசகசாலைக்கும் சரி, புத்தகங்கள் நியாயமான விலையில் கிடைக்க வழி செய்ய வேண்டும். இப்போதைய நிலையில் எல்லாமே விலை ஏற்றம் கண்டிருக்கிறது. புத்தகங்களின் அடக்க விலை இனி கூடத்தான் செய்யும். இது தவிர்க்க முடியாதது. ஆனால் பதிப்பாளர்களெல்லாம் ஒன்றாக நின்று, தரமான புத்தகங்களை நேர்மையான விலையில் எப்போதும் கிடைக்கச் செய்யத் தீர்மானித்தார்களானால், அவர்கள் சமூகத்துக்கு நல்ல பணி செய்தவர்களாவார்கள்.'' —மேனு

## சரியாய்ப் போச்சு!

பர்மாப் பயணத்தில் பிரமுகர்கள் சிலர் ஸ்ரீ கி. வா. ஜ.வுக்கு அறிமுகம் ஆனார்கள்; அவருடைய சொற்பொழிவுகளைத் தொடர்ந்து கேட்டு இன்புற்றார்கள். அவர்களில் ஒருவர் பேச்சின் இடையே எடுத்ததற்கெல்லாம், 'சரியாய்ப் போச்சு!' என்பார். ஒரே நேரத்தில் அடுத்தடுத்து அவர் அவ்வாறு சொல்ல நேர்ந்தால் தடவைக்குத் தடவை குரலில் மேலும் மேலும் அழுத்தம் சேரும்; பாவம் மாறும்.



அனைவரையும் சேர்த்துப் புகைப்படம் எடுக்க ஏற்பாடு செய்தார்கள். எல்லாரையும் வரிசைப் படுத்திய பின் படமெடுத்தவர், 'சற்றே சிரித்த முகமாக இருங்கள்' என்று கேட்டுக் கொண்டார். ஆனால் யாரிடமும் சிரிப்பு மலரவில்லை. படமெடுப்பவர் பலமுறைகள் வேண்டினார். பயன் சிறிதும் இல்லை.

ஸ்ரீ கி.வா.ஜ. ''இப்பொழுது நீங்கள் என்ன செய்யவேண்டும் என்கிறீர்கள்?'' என்றார்.

படமெடுப்பவர் கூறினார்: ''எல்லாரும் சிரித்த முகமாக இருக்க வேண்டும்!''

''சரியாய்ப் போச்சு!'' என்றார் கி. வா. ஜ.

அந்தச் சொற்களை அடிக்கடி உபயோகிக்கும் அன்பர் உள்பட அனைவரும் கொல்லென்று சிரித்தார்கள். படமெடுப்பவர் மகிழ்ச்சியுடன் தம் பணியை நிறைவேற்றினார்.

படப்பிரதி வந்தது. அனைவர் முகத்திலும் சிரிப்பு ஒளி விட்டது. படத்தின் பின் புறத்தில், 'சரியாய்ப் போச்சு!' என்று எழுதி வைத்தார் கி. வா. ஜ. அவர்கள். —எல்லார்வி



# தரும் விலைக்கு மிகையான மதிப்புள்ளதாக ராலிஃபேன் விளங்குவதேன்?



## ஒரே வார்த்தையில் பதில்—நல்லுழைப்பு

- உயரவோ, தாழவோ - எக்கோணத்திலும் சுழன்று, குளுமையான இளந்தென்றல் அறை முழுதும் சுகமாக வீசச் செய்கிறது.
- இயக்கப் பொருத்தத்திற்கு உரிய இறக்கைகள் வேறெந்த மின் விசிறியையும் விட அதிக அளவில் காற்றை எழுப்ப வல்லவை.
- மூச்சொலி போன்ற சுருதியுடன் ஓடி ஒழுங்காய் இயங்குகிறது.
- தொடர் பரிசோதனை மூலம் நீடித்த உழைப்பும், பாதுகாப்பான வேலை முறையும் உறுதி செய்யப் படுகின்றன.
- வேறெந்த மின் விசிறியையும் விட மேலான மெலிவழகும், நவீனக் கோல வடிவும் உடையது. தேர்ந்தெடுக்க நாலு வசீகர வர்ணங்களில் கிடைக்கிறது.

B

ராலிஃபேன் பற்றிய முழு வர்ணப் பிரசுரத்தினை இலவசமாகப் பெற, இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்பவும்: ராலீஸ் இந்தியா லிமிடெட், 21, ரேவலின் ஸ்ட்ரீட், பம்பாய்-1.

பெயர் : ____________________

விலாசம் : ____________________

____________________

மறவாதீர்கள் : ஒவ்வொரு ராலிஃபேனும் உற்பத்திப் பழுதின்மைக்கு 2-ஆண்டு உத்தரவாதமுடன் வருகின்றது

குளுமை இன்பத்
தென்றல் தவழவே

# ராலிஃபேன்

ராலி க்ரூப்பின் தயாரிப்பு.



Benson's/11-RFN-104 TM

# இருக்கிறேன், இறக்கவில்லை!

தமிழ்ப் பித்தன்

★

அத்தானே உங்கள் உடல் என்னை நீங்கி
அறுநூறு காதங்கள் பிரிந்தே செல்லும்!
பித்தான என்நெஞ்சம் பெண்ணும் வந்த
பிறப்பெண்ணித் தினந்தோறும்; வதங்கிப்போகும்!
சத்தான உடல்குறையும்; தனிமை நோய்தான்
தயவின்றி எனைத் துயரக் கடலில் தள்ளும்!
கொத்தாக மலர்ந்திருந்தும் பயன்தான் என்ன?
குளிர் தென்றல் பிரிந்துவிட்டால் மணமோடிட்டும்!

கத்தாத கடலில்லை; கனவுக் காட்சி
காணாத கண்ணில்லை; மனமும் இல்லை!
தொத்தாத கொடியில்லை; சூறைக் காற்றில்
துவளாத படகில்லை; மரங்கள் இல்லை!
குத்தாத முள்ளில்லை; நிலவைக் கண்டு
குளிராத உயிரில்லை; குருவிக் கூட்டம்
கொத்தாத பயிரில்லை; பிரிவுத் தீயால்
குமையாத பெண்ணொருத்தி பெண்ணே இல்லை!

வருநாளை நினைக்கின்றேன்; வணக்கஞ் சொல்லி
வாழ்த்துரைக்கத் துடிக்கின்றேன்; வாயில் முத்தம்
தருநாளை நோக்குகிறேன்; எந்தன் வாழ்வில்
தளிர்விசி ஒளிவீசி உவகை துள்ளும்
திருநாளை விழைகின்றேன்; அந்நாள் எண்ணித்
தேயும் விரல் பார்க்கின்றேன்; விரைவில் உம்மைப்
பெறுநாளை நாடுகின்றேன்; அதனால் இந்தப்
பேதையின்னும் இருக்கின்றேன்; இறக்க வில்லை!

●○●○●○●○●○●-○●○●○●○●○●

# 'தனி மகள் கனவு!'

வை. லட்சுமி

கண்ணுக் கினிய வெண்ணிலவு
கண்ணே வாவென் றழைக்குது
மண்ணில் மலர்ந்த பெண்ணிலவு
விண்ணில் பறக்க விழையுது

நீலத் திரைக்கடல் ஒலிக்குது,
பால்மதி பார்த்துச் சிரிக்குது
கோலக்குயில் கூடக் கூவுது
தனிமனம் பலப்பல நினைக்குது

பாய்மரம் பாய்ந்து வருகுது
பனிக்கடலில் பவனி வருகுது
வெண்முகிலில் மதி மறையுது
மண்மதியின் முகம் மலருது

மனதினில் மலர்ந்தவன் வரவினிலே,
மதிமுகம் மாறிச் சிவக்குது
கார்முகில் விரைந்து வந்திடவே,
கணத்தில் விண்மதி கருக்குது

உள்ளங்கள் தில்லென ஒன்றிடவே,
ஓரலை உயரமாய் எழும்பிடவே
ஆவல் நாணத்தை வென்றிடவே - இரு
அலைக்கரம் நீட்டி இழுத்திடவே

தென்னஞ்சோலை அசைந்திடவே - அலை,
தென்னை உயரம் எழும்பிடவே
தெம்மாங்குக் காரி திகைத்திடவே
தனிமகள் கனவும் கலைந்திடவே

மதியும் மதியும் சேர்ந்திருக்க,
மாபெருங் கடலும் களித்திருக்க,
பாய்மரக் கப்பல் பாய்ந்தோட,
பார்நிலா பவனி வந்திடுமே!




# நெஞ்சம் இனிக்கும் நினைவு

பாண்டிநாடன்

தென்னைமரச் சோலையிலே தென்றற் காற்று
தெம்மாங்கு பாடும்அலை, படகி ரண்டு
அன்னமவள் நெஞ்சத்தில் கதைகள் சொல்ல
அன்புநிறை காதலனின் சிரிக்கும் தோற்றம்

தண்ணொளிரும் வெண்ணிலவில் தெரியக் கண்டு
தையலவள் மேனியெல்லாம் செம்மை கொள்ள
மின்னலெனப் புத்துணர்வு பொங்கிப் பாயும்;
மேனியில் பெற்றயின்பம் நினைவி லாடும்.

நெஞ்சிலெழும் ஆசைகளை வார்த்தை யாக்கி
நேரிழையாள் மனமயங்க மாலை சூட்டி
கொஞ்சிநிதம் மகிழ்வித்த காளை இன்று
கொல்கின்ற தனிமைதனைத் தந்த செய்கை

வஞ்சியவள் நெஞ்சமதைச் சுட்டெரிக்க
வட்டநிலா மேலெழுந்து உச்சி நோக்கி
பஞ்செனவே மிதக்கின்ற முகிலினூடு
பாய்ந்துவரும் அழகினிலே அவனைக் காண்பாள்

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

# தென்றல் வாழ்த்து!

விரை சங்கர்

பொதிகைமலை தென்றலது பவனிசென்றது — ஒரு
பொய்கைக்கரை அன்னமதைக் கண்டு நின்றது
மங்கையவள் என்றதனை மனதில் கொண்டது—அவள்
அங்கைதனில் ஓவியத்தின் அழகு கண்டது

சித்திரைநாள் திங்களன்று நிலவு வந்தது—வானில்
முத்திரைபோல் தங்கநிற வடிவு தந்தது
பொன்பனிக்கு நீரலையாய்ப் புதுமை பெற்றது—புது
பெண்ணணங்கு வரவு கண்டு பெருமையுற்றது

கொஞ்சுமொழி சிலம்பதுவும் மெல்ல ஒலித்தது—வளை
மிஞ்சுமொழி பாரெனவே சொல்லிச் சிரித்தது
பஞ்சுநிகர் பருவமேனி பவளம் போன்றது—அதில்
மஞ்சளிளம் பிஞ்செனவே மார்பும் வாய்த்தது

எட்டவரும் பாய்மரத்தில் எண்ணம் சென்றது—அது
கிட்டவரும் வேளையிலே வெட்கம் நின்றது
வட்டவடி வான்மதியும் பெண்மைபெற்றது—அதன்
இட்டப்படி என்தலைவன் வரவுநோக்குது.

சட்டப்படி உன்பார்வை குற்றம் ஆகுது—வீண்
சண்டைபடி சச்சரவும் வரப் போகுது
இட்டப்படி என் கொழுநன் எனக்காகுது—எனக்
கட்டழகி நிலவை எண்ணிக் கருக் காணுது

வான்முகிலும் போட்டியென வட்டமிட்டது—அவள்
வார்குழலைக் கண்டுவிட்டுத் தோற்று ஓடுது
தேன்நிலவும் தப்பெனவே ஒப்புக்கொண்டது—அவள்
தேடிவந்த தலைவனுக்கும் ஆசி கூறுது

தென்றலுமே பவனிவரும் நேரம் ஆகுது—எனத்
தென்னைகளின் தலையசைத்து வரவு கூறுது
பறவையுமே மங்கலநீர் சுற்றி ஆடுது—வரும்
பாவையவள் தலைவனது புகழ் பாடுது

தாவியநல் தென்றலிதைச் சொல்லிப்போனது 'உடல்
ஆவியென' வாழ்கவென்று வாழ்த்திச் சென்றது
காவியத்தில் கவிதைபல கோடி காணுது — ''மணி
ஓவியத்துக் கொரு கவிதை'' இதுவும் ஆனது.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

# கனவின்று நனவாகும்!

இதயன்

★

முத்தமிடும் கடலலைகள் முன்றுனை நோக்கிவர
முழுமதியின் ஒளியினிலே முகமென்னும் மலர்மலர
அந்நாளின் நினைவினிலே அங்கமெலாம் தான்குளிர
அன்னமென அமர்ந்திருக்கும் அன்றலர்ந்த மென்மலரே!
இன்றிங்குத் தனிமையிலே ஏதேதோ எண்ணமுடன்
எதற்காகத் தவிக்கின்றாய்; இன்பத்தைக் குவிக்கின்றாய்?
என்றேயுன் உளம்புகுந்த எழில்மிக்க நாயகனின்
ஏற்றமிகு திருவுருவம் எண்ணமதில் எழுந்ததுவோ?

தென்னைமரச் சோலைகளில் தென்றல்புகுந் தோடிவந்து
தெவிட்டாத இன்பமுடன் தீண்டியதை புணராமல்,
வண்ணமுடன் சேலைகட்டி வாழ்த்தொலிகள் தாமெழுப்பி
வாரிபுனை அணிகலனும் ஆழியெழில் காணாமல்,
தண்ணொளியைத் தந்தேதான் தனிபுவிக்கு அழைக்கின்ற
தண்ணிலவைக் காண்ப(து)ஏன்? தனிபுவிக்கு செல்வ(து)ஏன்?
கண்ணோடு கண்ணோக்கிக் கருத்தினையும் ஒன்றாக்கிக்
காலமெலாம் கதைசொன்ன காதலனைக் காண்பதற்கோ?

'உன்னுருவைப் படமாக்கி உளமதிலே பதிவாக்கி
ஓலமிடும் கடல்தாண்டிக் களங்காணச் சென்றிட்ட
உன்னுயிரோன் வெற்றியுடன் உனைத்தேடி இன்றேதான்
உளம்பொங்க வருகின்றான், என்றேதான் இம்மகிழ்வோ?'
எனக்கேட்டுச் சிரிக்கின்ற எழில்கூட்டும் வெண்ணிலவு
ஏதோவுன் காதருகில் சொல்லியதே; அதுஎன்ன?
'கனவின்று நனவாகும்; காதல்முகம் எதிர்நோக்கும்
காரிகையே களித்திடுவாய்!' என்பதுதான் அக்கூற்றோ?

# உளத்தில் நிறைந்தவன்!

நீர்கொழும்பூர் முத்துலிங்கம்

வெண்மணற் பரப்பிலே
விளையாடிக் களித்ததுவும்
கண்மலர் மூடியே
கலந்ததும், களித்ததுவும்
விண்ணுறை நயனங்கள்
வெட்கித்து விளித்ததுவும்
உண்மையின் றுணர்கிறேன்
உரியவரைத் தேடுகிறேன்!

கலமேறிச் சென்றிட்டார்
காதலராம் என்கணவர்—நானோ
நிலமீது உடல்சாய்த்து
நலிகின்றேன் நினைவலையால்
குலப்பண்பாம் கொண்டவரும்
குறையாத பொருளீட்ட
பலகாதம், பலநாட்கள்
பிரிந்திட்டார் காணேனே!

தென்னை மரத்தினிலே
தொங்கிநிற்கும் தெங்கினையே
உன்னில் கண்டனன் யான்
என்றுரைத்த வேளையிலே
இன்னும்பல உவமைகள்
இருக்குமென நான்நினைத்து
மன்னவன் மார்புறுவேன்
மறந்தாரோ! மயங்குகிறேன்.

நிலத்திரைக் கடலே!
நீயவரி(ன்) உளத்தினிலே
காலத்தைக் கணக்கெடுத்து
காத்துயான் நிற்பதையும்
பாலொத்த நிலவொளியும்
பாழாகிப் போவதையும்
வேலன் கணைபோல
விரைந்தெடுத்துச் சேர்த்திடுவாய்!

## நல்வரவு நாடும் நங்கை

நா. தண்டபாணி

செங்குமுதம் மலர்கின்ற அந்திப்போதில்
செந்நிறத்துத் தாமரையைக் குழலிற் சூட்டி
மங்காத பேரழகு மங்கை நல்லாள்
மணற்பாங்கில் கடற்கரையில் அமர்ந் திருந்தாள்

தென்குமரச் சோலையது காற்றில் ஆட
தேட்டமிகு படகொன்று கரையை நாட
தங்கநிறத் திங்களவன் தோன்றி வந்து
தனித்திருக்கும் பூவைக்குச் செய்தி சொன்னான்

கடல்பறவை இணையாக வருதல் கண்டாள்
கண்போன்ற காதலனின் வரவு காணாள்
அடல்மறவன் கைப்பிடித்து உறுதி சொன்ன
அருமையினை எண்ணியெண்ணி நைந்து போனாள்

மடல்அவிழ்ந்து தோற்றஞ்செய் பொருட்டேபோன்று
மதியத்துள் காதலனின் முகமே தோன்ற
உடல்சோர்ந்து உளஞ்சோர்ந்து உருகும் பாவை
ஒருவகையில் மனஅமைதி கொள்ள லானாள்.

## காதல் மயக்கம்

வி. வேங்கடராமன்

துள்ளித்துள்ளிக் கடலலைகள் நாளும் போடுது - நிலா
தூரவரபோதே காதல் கீதம் பாடுது
புள்ளிரண்டு ஒன்றோடொன்று துணையும் தேடுது - மனம்
புழுக்கப் போக்க என்பதுபோல் இணையும் கூடுது!

தள்ளிநிற்கும் தென்னைதலை தாழ்த்தி வழைக்குது - அங்கே
தவழ்ந்துவருந் தென்றலதை வாழ்த்திக் குழைக்குது!
மென்னநிலவை மேகம்வந்து மூடப் பார்க்குது - கடல்
மோகத்திலே தனக்குங்கொஞ்சம் கூட கேக்குது!

நிலவுக்குள்ளே அத்தான்முகம் நினைவு நீட்டுது - அவள்
நினைவுக்குள்ளே கனவுபோன்ற பிரமையும் ஊட்டுது
பொலிவுமின்ப இரவுமேலும் போதை கூட்டுது - காதல்
புரிந் பம் புரியாத புதும்பாதை காட்டுது!

## நிலவே நீ சொல்!

வேம்பத்தூர் கிருஷ்ணன்

கடலோடித் திரவியங்கள் தேடச் சென்ற
காதலனின் நினைவலைகள் வந்து மோத
உடலோடு உள்ளத்தைச் சுமந்து வந்து
உட்கார்ந்தாள் மணல்வெளியில் தனை மறந்தாள்!

பனிப்படலம் போன்றஇருள் விலகி வந்த
பால்பொழியும் முழுநிலவின் உதயம் கண்டாள்
கனிச்சாறைத் தன்இதழில் கலைத்துப் போன
காதலனின் திருமுகத்தை நிலவில் கண்டாள்!

''கனகமணிக் கட்டிலிலே இன்பம் ஏது?
கடற்கரையில் மணற்படுக்கை உள்ள போது!
உனதென்றும் எனதென்றும் இனி யொன்றில்லை
ஒருயிர்நாம்'' எனச் சொல்லிச் சிரித்த கள்ளன்!

கையோடு கைகோத்து மணலில் சாய்ந்து
கண்ணோடு கண்வைத்து மயக்கம் தந்து
''பொய்யான இவ்வுலகை மறந்து இன்பப்
புதுஉலகின் கலைகாணப் போவோம்'' என்று....

ஒன்றல்ல இரண்டல்ல கோடி கோடி
ஒளியோடும் இருளோடும் தேடித் தேடி,
தென்றல்போல் எனைத்தழுவிக் கதைகள் சொல்லித்
தேன்மழையில் எனக்கின்பம் தந்த மாறன்

பொருளீட்டப் புறப்பட்டான் வெளி நாட்டுக்கு,
''புயல்போலத் திரும்பிடுவேன்'' என்று சென்ற
திருவாளர் என்அத்தான் என்னைத் தேடித்
திரும்பாத காரணமேன் நிலவே நீசொல்!

தமிழ்ப் பித்தன் எழுதிய
'இருக்கிறேன் இறக்கவில்லை!'
என்ற கவிதைக்கும்

வை. லட்சுமி எழுதிய
'தனி மகள் கனவு'
என்ற கவிதைக்கும்

பரிசுத் தொகையான
ரூபாய் ஐம்பது
பகிர்ந்தளிக்கப்பட்டது





# அசகாய சூரன்

படம் ஓடிக் கொண்டிருந்தது. படத்திலுள்ள வழக்கமான நடனங்களையும் திரும்பத் திரும்ப வரும் காட்சிகளையும் பார்த்து அலுத்துப் போன ரசிகர்கள் வெளியேறத் துடித்தார்கள். அப்பொழுது அங்கு வந்திருந்த பிலிம் கிரிடிக் ஒருவர், ''நில்லுங்கள்!'' என்று கூச்சலிட்டார். எல்லாரும் தயங்கினார்கள். ''முதலில் பெண்களும் குழந்தைகளும் வெளியேறட்டும்'' என்றார் அவர் நிதானமாக.

ராஜா ராணி கதை என்றால் வழக்கமான நடனங்கள், மது மயக்கம், புதையல், குத்துச் சண்டை, கத்திச் சண்டை ஆகிய ஜனரஞ்சகக் காட்சிகள் இடம் பெற்றிருக்கும். 'அசகாய சூரன்' இதில் ஒன்றிலும் பின்வாங்கிவிட வில்லை. அலுத்துப் போகும் வரை எல். விஜயலக்ஷ்மியும், ராஜஸ்ரீயும் ஆடித் தீர்த்துவிட இருக்கிறார்களே!

மகேந்திரபுரி மன்னன் ராஜசிம்மன் அப்பாவி. எடுப்பார் கைப்பிள்ளையாக மாறும் குணம் படைத்தவன். அதனால் நாட்டை நன்கு நிர்வகித்த மாமன் கோபால கிருஷ்ண நாயக்கரையும், அவர் மகளும், தன் காதலியுமான கலாவதியையும் விரட்டி விடுகிறான். பயங்கரச் சதிக் கூட்டத்தினரான நரசிங்கன், வசந்தன், காமமஞ்சரி ஆகிய இவர்களின் வலையில் அவன் விழுந்து அல்லல் பட்டால்தானே கதை முன்னேறும்? இடைவேளை வரையில் நடனமும், கூத்தும், மது மயக்கமும் நம்மைப் பாடாய்ப் படுத்தி விடுகின்றன.

சினிமா

இடைவேளைக்குப் பிறகுதான் மந்த கதியில் சென்ற கதை கொஞ்சம் வேகத்துடன் செல்ல ஆரம்பிக்கிறது. காஞ்சி மன்னன் திருபுவனர் மகன் விஜயசிம்மன் ராஜசிம்மனின் சகோதரியை மணக்க அனுப்பிய ஓலை அவமானப்படுத்தப்படவே, அதற்குப் பழிக்குப் பழி வாங்க வருகிறான். நாட்டை விட்டு ஓடிய கோபாலகிருஷ்ண நாயக்கரோடு சேர்ந்து கொண்டு 'அசகாய சூரன்' வேடம் தாங்கி, பல மாறு வேடங்களில் வந்து, சதிக் கூட்டத்தை முறியடித்து மகேந்திரபுரி மன்னனைக் காப்பாற்றுகிறான். பிறகு என்ன? வழக்கம்போல் விஜயசிம்மன் சந்திராவதியையும், ராஜசிம்மன் கலாவதியையும் மணந்து கொள்கிறார்கள்.

எல். விஜயலட்சுமி கலாவதியாகவும், ராஜஸ்ரீ சந்திராவதியாகவும் வந்து ஆடிப் பாடிக் களித்துப் படத்தின் நீளத்துக்கு ஒத்தாசை செய்கிறார்கள்.

விஜயசிம்மனாக வரும் காந்தாராவ் 'அசகாய சூரனா'கி, நாலைந்து மாறு வேஷங்கள் புனைந்து நடிக்கும்போது அவர் நடிப்பு மெச்சும்படியாக இருக்கிறது.

இந்தப் படம் தெலுங்கிலிருந்து தமிழாக்கம் செய்யப்பட்டிருப்பதால், ஒவ்வொரு 'டயலாக்'கிலும், கொஞ்சம் இழுத்து இழுத்துப் பேச வேண்டியிருக்கிறது. இது இயற்கைக்கு முரணாக அமைந்துள்ளது. சண்டைக் காட்சிகள் நன்கு ஒளிப்பதிவாக்கப்பட்டுள்ளன.

'அசகாய சூரன்' படத்தில் மெச்சும்படியுள்ளது இப் படத்தையும் துணிந்து படாதிபதி எடுத்தாரே, அந்தச் சூரத்தனந்தான்!




LIFEBUOY
for health

# ந்தனைக்கு அடங்காத சிருங்காரம்

லேடரர் ஓர் எழுத்தாளர். எழுத்தாளர் என்ற முறையில் அவரும், அவர் மனைவி ஈதலும் பல நிகழ்ச்சிகளிலும் விருந்துகளிலும் கலந்துகொள்ளுவது சகஜம்.

ஒரு சந்தர்ப்பத்தில் விண்ட்சர் கோமகனும் அவர் மனைவியும் கலந்து கொண்ட தேநீர் விருந்து ஒன்றுக்கு லேடரர் தம்பதிகள் சென்றிருந்தார்கள். விருந்து முடியும் மட்டும் ஈதல் மற்ற எதிலும் கவனம் செலுத்தாமல் விண்ட்சர் கோமகனின் மனைவியையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

விருந்து முடிந்து வீடு திரும்பியதும் ஈதல் கெஞ்சலாகவும் கொஞ்சலாகவும் தன் கணவனைப் பார்த்து, ''ஆகா! அந்த விண்ட்சர் கோமகனின் மனைவி எத்தனை அற்புதமான உடுப்பு அணிந்து வந்தாள்! வெகு பிரமாதம்! நிறப் பொருத்தம் தான் எப்படி இருந்தது!'' என்று கூறினாள்.

''அந்த உடுப்பை நீ அணிந்து கொண்டால் நீயும் அற்புதமாகத்தான் தோற்றம் அளிப்பாய்! அரச குடும்பத்தாரால்தானே அதற்கு ஆயிரக் கணக்கான டாலர்களை அள்ளி வீச முடியும்?'' என்றார் லேடரர்.

''நான் அந்த மாதிரி ஆடைகளை வாங்கத்தான் போகிறேன்'' என்று ஈதல் உறுதியாகச்

• கோமதி சுவாமிநாதன் •



சொல்லிவிட்டாள். லேடரரால் இதை வேடிக்கையாக எடுத்துக் கொள்ள முடியவில்லை. காரணம் ஈதல் அன்றிலிருந்தே கடும் சிக்கனத்தைக் கையாளத் தொடங்கிக் கொஞ்சம் கொஞ்சமாகக் காசு சேர்க்கத் தொடங்கினாள். டாக்ஸியை உபயோகிக்க வேண்டிய சந்தர்ப்பங்களில் பஸ்ஸிலேயே பிரயாணம் செய்தாள்.

ஓராண்டு காலத்தில் சிக்கன முயற்சியில் ஈடுபட்ட ஈதல் சுமார் இருநூற்றி ஐம்பது டாலர்களைச் சேர்த்து விட்டாள். வாஷிங்டன் நகரிலுள்ள பிரசித்தி பெற்ற துணி வியாபார ஸ்தாபனத்துக்குள் கணவனும் மனைவியும் நுழைந்தார்கள். அங்கு நின்றிருந்த விற்பனையாளரிடம், ''எளிய, சம்பிரதாய முறையில், வெட்டித் தைக்கப்பட்ட ஆங்கில பாணி கருஞ்சிவப்பு காபெர்டின் உடுப்பு வேண்டும்'' என்றாள் ஈதல்.

நூற்றுக் கணக்கான உடுப்புக்கள் அவள் முன் பிரித்துப் போடப்பட்டன. அவைகளில் ஒன்றுகூட ஈதல் மனத்தில் பதிந்த கற்பனையை எட்டவில்லை. பிறகு ஈதல் கேட்கும் ரகம் அகப்படாததால் அங்கே மொத்த வியாபாரத்தை மேற்பார்க்கும் உதவி மானேஜரிடம் ஈதலை அனுப்பினர். அந்த உதவி மானேஜர் தன்னம்பிக்கையும் அதட்டல் உருட்டலும் நிறைந்த ஒரு பெண்மணி. ஏற்கனவே ஈதல் பார்த்து நிராகரித்த உடைகளுக்குப் புதிய விளக்கங்கள் கொடுத்து எதையாவது ஈதல் தலையில் கட்டிவிடும் முயற்சியில் இறங்கினாள்.

லேடரர் பொறுமை யிழந்து விட்டார். சட்டைப் பையிலிருந்து ஒரு வெள்ளைப் பேப்பரையும் பென்சிலையும் எடுத்து வின்ட்சர் கோமகனின் மனைவியார் அணிந்திருந்த உடை மாதிரிப் படம் போட்டு 'இதுதான் வேண்டும்' என்று அழுத்தமாகச் சொன்னார்.

அப்போதுதான் அந்த அதட்டல் உருட்டல் உதவி மானேஜர், லேடரரைச் சரியாகக் கவனித்தாள். ''ஓ? நீங்களா? நீங்கள்தானே சமீபத்தில் 'பெண்களை விடத் திறமையாக ஆண்களால் எதையும் செய்ய முடியும்' என்ற தலைப்பில் ஒரு கதை எழுதியிருந்தீர்கள்? உங்கள் மனைவி கேட்கும் ரகம், சாமான்கள் போட்டுக் கட்டி வைக்கும் சாக்குப் போலிருக்கும். நீங்களே அந்தச் சாக்கைத் தைத்துக் கொடுக்கலாமே! நீங்கள் தான் திறமைசாலி வர்க்கத்தைச் சேர்ந்தவராயிற்றே! எங்கள் கடையில் நீங்கள் கேட்கும் ரகம் கிடையாது'' என்றாள்.

கணவனும் மனைவியும் சற்று ஏமாற்றத்துடனேயே கடையிலிருந்து திரும்பினர். வரும் வழியில் லேடரருக்குச் சட்டென்று ஒரு யோசனை தோன்றியது. ''ஏன் இந்த அனுபவத்தைக் கொண்டே பத்திரிகைக்குப் புதுக் கட்டுரை ஒன்றை எழுதக் கூடாது?''

சீக்கிரமே இந்தக் கருத்துப் பற்றி அவர் தமக்குத் தெரிந்த ஒரு பத்திரிகை ஆசிரியருடன் விவாதித்தார். அந்த ஆசிரியருக்கு இந்தச் சம்பவம் மிகவும் பிடித்துப்போய் விட்டது. லேடரர் தையல் நுணுக்கங்களைக் கற்றுக் கொண்டு, மனைவிக்கு உடுப்புத் தைத்துக் கொடுத்து அதை அவள் ஆனந்தமாக அணிந்து கொண்டு நிற்கும் கட்டம் வரை எல்லாவற்றையும் வண்ணப் புகைப் படங்களாக எடுத்துக் கட்டுரையுடன் இணைக்க வேண்டும் என்று திட்டமிட்டார். இதற்கான எல்லாச் செலவுகளையுமே பத்திரிகை ஏற்றுக் கொண்டது.

சுமார் ஆறு வார காலத்துக்கு லேடரர், வாஷிங்டன் நகரத்தில் உள்ள பிரசித்தி பெற்ற தையற் கலைக் கழகத்தில் சேர்ந்து தொழில் நுணுக்கங்களைக் கற்றார். பிறகு உயர்ந்த ரக காபர்டின் துணியில் ஐந்து கஜங்கள் வாங்கினார்.

'ஆகா! இன்னும் சில நாட்களில் நானே அளவெடுத்து வெட்டித் தைத்துப் பிரமாதமாக அந்த உடுப்பைத் தயார் செய்துவிடுவேன். அதை அணிந்து கொள்ளும் ஈதல் பெருமையால் பூரித்துப் போவாள். நானும் ஈதலும் வேண்டுமென்றே அந்தப் பிரபல துணிக் கடைக்குப் போவோம். திமிர் பிடித்த அந்த உதவி மானேஜர் எங்களைப் பார்த்து அலட்சியமாகச் சிரிப்பாள். நான் உடனே மறைத்து வைத்திருந்த பத்திரிகைப் பிரதியை அவள் முன்னால் போடுவேன். படங்கள் நிறைந்த என் கட்டுரை என் விடாமுயற்சியை அவளுக்கு விளக்கும்.'

ஈதல் தன் கணவரின் உற்சாகத்தில் நூற்றில் ஒரு மடங்கைக்கூட வெளிக் காண்பிக்கவில்லை. ஆறு வாரப் பயிற்சி வகுப்புக்கான கட்டணம், துணி விலை, அதை வாங்க நியூயார்க் வரை போய் வந்த ரயில் சத்தம், தைப்பதற்கான சாதனங்கள் எல்லாமே இதுவரை முந்நூற்றைம்பது டாலர் வரை ஆகிவிட்டது.

காபர்டின் துணியை வெட்ட ஆரம்பிக்கும் தருணம். இதுவரையிலுமே கிட்டத் தட்ட ஐம்பது புகைப் படங்கள் எடுத்தாயிற்று.

லேடரர் ஈதல் அருகில் வந்தார். ''ஈதல்! அளவெல்லாம் கச்சிதமாக எடுத்துவிட்டேன். இதை நல்ல முறையில் நான் கவனமாகத் தைத்து முடிக்க இரண்டு மாதங்கள் ஆகும். இந்த இரண்டு மாத காலத்துக்கும் என் முயற்சிக்கு உன் பூர்ண ஒத்துழைப்பு தேவை.''

''ஒத்துழைப்பா?'' என்றாள் வியப்புடன்.

''ஆமாம்! இன்னும் இரண்டு மாத காலத்துக்கு உன் உடல் பருக்கவோ இளைக்கவோ கூடாது! இல்லாவிடில் நான் இன்று அளவெடுத்துத் தைக்கவிருக்கும் உடுப்பு சோபிக்காது. ஆகார வகைகளில் நீ சற்றுக் கண்டிப்பாக இருக்க வேண்டும்!'' என்றார் லேடரர்.

அவ்வளவுதான்! ஈதல் ஓரேயடியாகச் சிரிக்க ஆரம்பித்தாள். சிரிப்பைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு கணவன் காதில் ரகசியமாக ஏதோ சொன்னாள். லேடரர் அப்படியே இடிந்து போய் விட்டார்.

இது நடந்து பதினாறு வருடங்கள் ஆகிவிட்டன. ஈதல், தான் மிகவும் ஆசைப்பட்டு விரும்பிய உடுப்பை அணிந்துகொள்ளவேயில்லை. லேடரருடைய கட்டுரையும் பத்திரிகையில் வெளியாகவில்லை. ஆனால் அந்தத் தம்பதிகளுக்கு இப்போது பதினைந்து வயதில் ஒரு பையன் இருக்கிறான்! தான் கர்ப்பவதி என்று தெரிந்துகொண்ட ஒரு பெண்ணால் எப்படி உடம்பை ஒரே சீராக இரண்டு மாதங்கள் வைத்துக் கொள்ளச் சம்மதிக்க முடியும்? (ஆதாரம்: டைஜஸ்ட்)

சித்திரக் கதை

# அரசனும் அடிமையும்

கதை: கௌசிகன் - படம்: வினு

டில்லி அரியணையிலே அடிமை வமிசம் ஆட்சி செலுத்தி வந்த காலம் அது. சுல்தானா ரஸியாவின் தந்தையான அல்தமிஷின் ஆட்சி. சுல்தான் நூறு அடிமைகளை விலைக்கு வாங்க இருந்தார். அடிமைகள் மன்னரின் பார்வைக்கு வந்த போது....




நிராகரிக்கப்பட்ட அந்த அடிமை உல்க்...









உடல் பலமற்ற உல்க்கை மற்ற அடிமைகள் அலட்சியப் படுத்தித் தங்கள் பணிகளையும் அவன் மீது சுமத்தி விட்டுத் தாங்கள் சொகுசாக வாழ்ந்தார்கள். சுல்தான் அல்தமிஷும் உல்கின் விஷயத்தை மறந்தே போனார். இந்த நிலையில் ஒரு நாள்.....

வருங்காலத்தை உணர்ந்து சொல்லும் நிமித்திகர்கள் சிலர் வந்தார்கள் தர்பாருக்கு.

பால ஜோசியரே! சொல்ல வந்ததைப் பயப்படாமல் சொல்லுங்கள்.

ஆலம்பனா! உங்களுக்குப் பிறகு இந்த அரியணையிலே ஒரு அடிமைதான் அமரப் போகிறான். தங்கள் வாரிசுகள்....

ஹ...ஹ..ஹா...! இதில் புதுமை ஏதுமில்லை. என் பிள்ளைகள் யாருக்கும் அரியணை ஏறும் தகுதி கிடையாது. இந்நாட்டை நேர்மையுடன் ஆள அல்லாஹ் வேறு யாரையாவது அனுப்புவதையே நான் விரும்புகிறேன்.

ஆலம்பனா அல்தமிஷ் இவ்வளவு அலட்சியமாக மதித்ததை அந்தப் புரத்தில்....

நம் குழந்தைகளானால் என்ன? திறமையற்றவர்களுக்கு டில்லியை ஆளும் தகுதி கிடையாது தான். தவிர விதியை யாரால் மாற்ற முடியும்?

முடியும். அரசனாகப்போகும் அந்த அடிமையைக் கண்டு பிடித்துக் கொன்று விட்டால்...?

ஹ..ஹ..ஹா! அந்த அடிமை யார் என்பது அல்லாஹ் ஒருவருக்கே தெரியும். அதை நாம் அறிவது எப்படி?

ராஜயோகமுடைய மனிதனைப் பார்த்தாலே தெரியுமாமே! அங்கலட்சணங்களைக் கொண்டு அந்த அடிமை யார் என்பதைக் கண்டு பிடித்து விடலாமாம். அந்த பால ஜோசியரே கூறினர்

பேகம் சாஹிபாவின் கண்ணீர் நாட்டிலுள்ள எல்லா அடிமைகளையும் ஒன்று கூடும்படி உத்தரவு பிறப்பிக்க வைத்து விட்டது.

ஆலம்பனா! அடிமைகள் அவர்கள் தகுதிக்கேற்றபடி வரிசைப் படுத்தி நிறுத்தப்பட்டிருக்கிறார்கள். தாங்கள் எதற்காக அழைக்கப்பட்டிருக்கிறோம் என்று அவர்களுக்குத் தெரியாது.




ம்.. இதோ! விதியை வெல்லக் கூடிய வித்தக நிமித்திகன் இருக்கிறார். அவர் பார்வைக்கு ஒவ்வொரு அடிமையாக அனுப்பி வையுங்கள்.


அந்தஸ்துக் கேற்ற படி வரிசைப் படுத்தியதில் நீர்சுமப்பவர், தோட்டிகள் கடைசியில் இருந்தனர். நண்பகல் போதில்.....
ஏய், பசி வயித்தைக் கிள்ளுது. நம்மை எப்போ கூப்பிடப்போ றாங்களோ? யாரையாவது கடை வீதிக்கு அனுப்பி ஆகாரம் வாங்கி வரச் சொல்லலாமா?
யாரையாவது என்ன? இதோ நம்ம உல்க் இருக்கானே.


என்னையா? ஐயோ! சுல்தான் முன் செல்ல வேண்டிய முறை வந்தால்?
படா திறமைசாலி இவரு. உல்கைக் காணாட்டி சுல்தான் உசிரை விட்டுடு வாரு. போடா, சோனிப்பயலே!


ஆனால் அவர்கள் எதிர்பாராதது நிகழ்ந்தது. உல்க் திரும்ப நேரமாயிற்று. மன்னர் முன் அவன் செல்லவேண்டிய தருணமோ வந்து விட்டது. வஸீர் அவன் பெயரைக் கூப்பிட்ட போது...
டேய்! இப்ராஹீம்! போ, போ. நடுங்காதே. கேட்டால் நான் தான் உல்க் என்று தைரியமாகக் கூறு.. ஓ


உல்கை உணவு வாங்க விரட்டியது அவன் சக அடிமைகளா? இல்லை. நிமித்திகனின் பார்வையிலிருந்து அகற்ற விதி செய்த சதி அது.
எங்கேடா ஓடுகிறய்? முட்டாளே! உன் பெயரில் _ நீயாக _ இப்ராஹீம் போய் வுட்டான் மறுபடி நீ போனால்...?
எங்கள் திட்டு வெளிப்பட்டு நாங்கள் தண்டனை அடையவா?


நிமித்திகனின் அன்றைய பரிசோதனை தோல்வியில் முடிந்தது. ஆனால் அவன் வாக்கு பொய்க்கவில்லை. அல்தமிஷ்க்குப் பிறகு நாட்டில் ஏற்பட்ட குழப்பங்களுக்குப் பிறகு - ரஸியாவும் இறந்து பட்ட பின், அரியணை ஏறி ஆட்சி செய்தவர் பால்பன் - அடிமை அரசர்களின் வமிசத்து கடைசி மன்னன், என்று சரித்திரம் கூறும். அந்த பால்பன் தான் இந்த அடிமை உல்க்.




தன்னிகரில்லாச் சிறப்பு! கண்ணைப் பறிக்கும் வெளுப்பு! துப்புரவான தூய்மை! எல்லாம் ஸர்ப் செயல், எல்லைமீறிய வல்லமை. கரைகடந்த நுரைவளம். சலவையே வெகு எளிது. ஆம், சிறுவர் உடை முதல், சட்டை, சேலைவரை எல்லாத் துணிகளையும் கைப்பட வீட்டிலேயே சலவை செய்துகொள்ளச் சாலச் சிறந்தது ஸர்ப்!

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

SU. 45-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

# 9

**நா**ணுவின் வாழ்க்கையிலே ஒரு வேடிக்கை. வேலூரிலிருந்து அவன் புறப்பட்ட மறுநாளே அவன் தந்தை அவனைத் தேடிக்கொண்டு அங்கே வந்து விட்டார்! தந்தைப் பாசத்துக்கு யார் தடை விதிப்பது?

வேலூருக்கு வருவதற்கு முன் அவனுடைய தந்தை அனுபவித்த அவஸ்தைகள் கொஞ்ச நஞ்சமல்ல. சுந்தரியின் மறைவே அவருக்குத் தெரியாது. பேரிடி போல அந்தச் செய்தி மதுரையில் அவரைத் தாக்கிற்று. மகன் வேலூருக்குப் போய் விட்டான் என்பதும் தெரிந்தது. சுந்தரி வசித்த அந்த வீட்டைப் பார்த்தபோது அவருக்குக் கண்ணில் நீர் வந்து விட்டது.



# யாத்திரை

ஏ.எஸ். ராகவன்

''அவன் புருஷரா நீங்கள்? அவள் தலை மறையட்டும் என்று காத்திருந்தீர்களா?'' என்று கேட்டாள் வீட்டுக்காரக் கிழவி. ''வேலூரிலிருந்து மாசா மாசம் அந்த மகராஜன் பணம் அனுப்பாமல் இருந்தால் சுந்தரி என்ன கதி அடைந்திருப்பாள்?.... இப்படி இருக்க வாமா ஒரு புருஷர்.....?'' என்றாள்.

''எல்லாம் விதி. வேறு என்ன சொல்வது?'' என்றார். சிறைவாசத்தைச் சொன்னால் நகைப்புக்கு இடமாகுமே!

கிழவி பொல்லாதவள். சுந்தரி இருந்தவரையில் துளைத்துத் துளைத்துக் கேட்டும் அறிந்து கொள்ள முடியாத ரகசியத்தைப் புருஷனிடமே கேட்க ஆரம்பித்தாள். ''ஆமாம்..... அது யார் பத்மநாபன்? அவன் ஏன் பணம் அனுப்ப வேண்டும் மாசாமாசம்? என்னவோப்பா, நான் சம்சயப்பட்டுக் கேட்கிறதாக எண்ணாதே.... ஊர் அப்படிப் பேசிக்கிறது'' என்றாள்.

சுந்தரம் சிரித்தார். ''ஊர் எதையும் பேசும்.... இப்போது உங்களோடு நான் பேசுவதைக்கூட அது கதை கட்டும்....'' என்றவாறே அங்கிருந்து புறப்பட்டார்.

மதுரையிலிருந்து புறப்பட்ட ரயிலில் எவனோ ஒருவன் எதிர்ப்பட்டான். பெயர் நாகசாமி என்றான். அவனுக்கு அந்தப் பெயர் பொருத்தமானதுதான். சுந்தரி வசித்த கொட்டகைக்கு—வீடா அது? கொட்டகைதானே? அருகில் அவனுடைய வீடு இருந்ததால் அவனிடம் குடும்ப விசாரணை நடத்தினார், தம் மகன் எப்படி வளர்ந்தான், படிப்பிலே சூட்டிகையாக இருந்தானா என்ற விவரங்களையெல்லாம் அறியும் ஆவலில்.

''அவனா ? தெரியுமே எனக்கு.... தினசரி கோயிலுக்குப் போவான் தவறாமல். பக்தியிலே குறைச்சல் இல்லை. அதிகமாகப் பக்தி வேஷம் போட்டாலே ஏதோ சூது இருக்கிறதென்று எண்ணுகிறவன் நான். செய்த பாவம் தொலைய வேண்டாமா?.... என் கட்சி என்ன தெரியுமோ, பாவமும் செய்ய வேண்டாம், கோயிலுக்கும் போக வேண்டாம்.......''

தீயில் நெய்யை வார்த்தான் அவன்.

''பக்தியிலே சூதா காண்கிறாய்? உன் பார்வையிலே சூது இருந்தால் அதற்கு அவனா பொறுப்பு?.... சீ! சீ!.... நீயும் ஒரு மனிதனா?.... உனக்கெல்லாம் கோயில் எதற்கு? அங்கே போனால் கோயில் பாழாகும்'' என்று கத்தினார் சுந்தரம். அடிக்காத தோஷம்தான்.

நாகசாமி வதந்திப் பிரியனே தவிரச் சண்டைப் பிரியன் அல்ல. சுந்தரத்திடமிருந்து தப்பினால் போதும் என்று அடுத்த ஊரில் வேறு பெட்டிக்கு ஓடி விட்டான்.

இவ்வளவையும் எதிர் வரிசையில் அமர்ந்து கவனித்து வந்த தத்துவப் பேராசிரியர் ஒருவர் மெள்ளச் சுந்தரத்தைப் பார்த்து, ''என்ன விஷயம், ஸார்?'' என்று விசாரித்தார்.

''விஷயம் இல்லை. விஷம்..... மனிதர்களை வாழ விட மாட்டார்கள் இவர்களெல்லாம்... உலகத்திலே நல்லவனே இல்லாமல் போய் விட்டானா? மாதா மாதம் ஒரு நண்பன் பணம் அனுப்பி வந்தால் அது பிழையாம்'' என்றார் சுந்தரம்.



பேராசிரியர் பொறுமையாகச் சுந்தரத்தின் கதையைத் தெரிந்து கொண்டார். பிறகு பேசலானார். ''உங்கள் கோபத்தில் நியாயம் இருக்கிறது, மிஸ்டர் சுந்தரம். அதே போல் ஊராரின் சந்தேகத்திலும் நியாயம் இருக்கிறது. இத்தனை காலமும் அந்தக் குடும்பத்தைப் பொறுத்தவரை நீங்கள் வேற்று மனிதராகவே இருந்து விட்டீர்கள். பத்மநாபனோ உற்ற மனிதராக இருந்திருக்கிறார்.... தவிரவும் உலகத்திலே தூய அன்பு, அதாவது ஓர் ஆண் ஒரு பெண்ணிடத்திலே பாலுணர்ச்சி கலவாத பாசத்தைக் காட்ட முடியுமென்பது, அபூர்வம். காரணமில்லாமல் அன்பு படராது.....'' என்றார்.

''உன் தத்துவத்தைக் குப்பையிலே போடு'' என்று சீறினார் சுந்தரம்.

பேராசிரியர் சிரித்தார். ''என் மனசில் படுவதைச் சொல்கிறேன். பத்மநாபன் உண்மையிலேயே உயர்ந்த மனிதராக, பண்புள்ள மனிதராக இருந்தால் அது அதிசயம்தான்..... ஏனென்றால், சுந்தரியை அவர் மணந்துகொள்ள ஆசைப்பட்டவர். அவள் கிடைக்காமல் போனதும் பாசம் தெய்வீக நிலையில் உருமாறிற்று என்கிறீர்கள்..... நான் வேறுவிதமாகச் சொல்கிறேன் அந்த மாற்றத்தை..... அதாவது, பத்மநாபன் அவளைப் பழி வாங்கவே இத்தனை காலமும் கருணை நாடகம் ஆடியிருக்கிறார்.''

சுந்தரம் அவரை ஜன்னல் வழியே வெளியே தூக்கி எறிந்திருப்பார். அதற்குள் ரயிலே நின்றது. பேராசிரியர் விடைபெற்றுக் கொள்ளாமலேயே இறங்கி விட்டார்.

''தத்துவம் படித்தவனுமா இப்படிப் பேசுகிறான்!.... என் மகனும் இப்படியெல்லாம் கண்டதைப் படித்துப் புத்தி கெட்டுப் போகாமல் இருக்க வேண்டுமே!'' என்று தமக்குள் கூறிக் கொண்டார் சுந்தரம்.

ஆனால் அவருடைய சீற்றம் தணியத் தொடங்கிற்று. எல்லாரும் இவ்வாறு வாதிடக் காரணம் இல்லாமற் போகுமா என்கிற கேள்வி எழுந்தது நெஞ்சில். யார் கண்டார்கள்? ஓர் ஆண்டா, இரண்டு ஆண்டுகளா, ஏறக்குறைய பதினேழு ஆண்டுகளின் பிரிவுக்குப் பின் பரிவை மட்டும் போற்றிய நெஞ்சோடு அவர் வருகிறார்! காலம் இருக்கிறதே, அது எந்தப் புண்ணையும் ஆற்றும். அதே போல் எந்தப் புண்ணையும் உண்டாக்கும்.

வேலூருக்கு நேரே செல்லாது செய்தி அனுப்பினார் அவர். பத்மநாபன் எழுதிய பதில் அவரை அங்கு வர வேண்டாமென்று தடுத்தது. ஏன் வரக் கூடாது? அவருக்குப் புரியவில்லை.

மகனை அவர் பார்ப்பதற்கு என்ன தடை? அவனைப் பார்க்கும் பாக்கியம் அவருக்கு இல்லையா ? அவரால் தாங்க முடியவில்லை.

இத்தனை நாட்கள் பட்ட துயரெல்லாம் மகனின் முகத்தை ஒரே ஒரு முறையாவது பார்த்தால் இன்றித் திராது. ரகசியமாகவாவது பார்த்துவிட்டு வந்துவிட வேண்டும். பத்மநாபன் விரும்பினால்கூட அவரால் வேலூரில் தங்க முடியாது. இது பத்மநாபனுக்கும் தெரியும். அவர் மீது இன்னும் ஒரு வழக்கு முடிவாகாமலேயே இருக்கிறது. அவரைப் பொறுத்தவரையில் வழக்குகளுக்கு முடிவே இராது போலும்!

சுந்தரம் வேலூருக்குக் கிளம்பி விட்டார். எந்தத் தடையும் அவருக்குப் பொருட்டில்லை.

நள்ளிரவில் சற்றும் எதிர்பாராத விருந்தினராக அவர் வந்து நிற்கவே முதலியார் திகைத்து விட்டார். ''வாருங்கள், உங்களுக்குத் தகவல் தெரியுமா?'' என்றார்.

''என்ன?'' சுந்தரம் பதறினார்.

''நானு இங்கிருந்து புறப்பட்டுப் போய் விட்டான்.''

''போய் விட்டானா?.... எல்லாருமாகச் சேர்ந்து அவனை ஊரை விட்டே விரட்டி விட்டீர்களல்லவா ?''

''பதறாதீர்கள். அவனை யாரும் விரட்டவில்லை.''

''விரட்டாமல் அவன் எப்படிப் போவான் இங்கிருந்து?''

''அதுதான் எனக்குப் புரியவில்லை. முந்தாநாள் சாயந்திரம்கூட அவனைப் பார்த்தேன். தலையை வலிக்கிறது என்றான். நாடி பார்த்தேன். எதையோ மனசில் வைத்துக் கொண்டு தவித்திருக்கிறான். இருதயம் வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. நிம்மதியாகப் படுடா என்று சொல்லிவிட்டு வந்தேன்.... நீங்கள் வரமாட்டீர்கள் என்பதே அவனுக்குப் பெரும் அதிர்ச்சியாக இருந்திருக்கிறது என்பது இப்போதுதான் புரிகிறது.''

''என்னை வர விடாமல் தடுத்து என் மகனையும் துரத்திவிட்டு நீங்களெல்லாம் நிம்மதியாக இருக்கிறீர்களல்லவா?''

முதலியார் ஒன்றும் சொல்லவில்லை. என்ன சொல்வது? சுந்தரம் இன்னமும் பழைய சுந்தரமாகவே இருக்கிறாரே என்கிற வியப்புத்தான் இப்போது அவருக்கு. நானு போய் விட்ட கவலை அவர்களுக்கு கிடையாதா? இது என்ன அர்த்தமற்ற பாய்ச்சல்?

''அவன் எங்கே போனானோ, என்ன ஆனானோ!.... குழந்தைதானே என்று சிறிது கூட இரக்கம் இல்லையா யாருக்கும்? வேலூரில் இன்னமும் பொறாமையும் சுயநலமும் அப்படியேதான் இருக்கின்றனவா?'' என்று அரற்றினார் சுந்தரம். பிறகு கோபமாகக் கேட்டார். ''முதலியாரே! மூடி மறைக்காமல் சொல்லுங்கள்....அவன் ஏன் போனான் இங்கிருந்து ?''

முதலியார் இந்தக் கேள்விக்கு விடையைச் சென்ற முப்பத்தாறு மணி நேரங்களாகத் தேடிக் கொண்டுதானிருந்தார். அவருக்கு அது கிடைக்கவில்லை.

''சொல்லுங்கள், முதலியாரே.... நீர் வைத்தியராயிற்றே. பொய் சொல்லாமல் சொல்லுங்கள்.''

''சுந்தரம்! எனக்குக் காரணம் எதுவும் தெரியாது. ஒரு வேளை அவனுக்கு இங்கு பிடிக்க வில்லையோ என்னவோ ?''

''ஆமாம். அதேதான். இந்த ஊரில் எவன் இருப்பான்?''

''ஊர் என்ன செய்யும், சுந்தரம்?.... பத்மநாபன் அவனிடம் உயிரையே வைத்

# வீடுகளுக்கும் மற்றும் உணவு விடுதிகளுக்கும் ஓர் அரிய சாதனம்

# லீக்கோ நவீன வீட்டு எரி பொருள்

சிக்கனமானது • மற்ற எரிபொருள்களைவிட அதிக அனலை ஈந்து நீண்ட நேர வெப்பத்தை கொடுக்கிறது • புகையாதது • எந்தரக கரி அடுப்பினிலும் உபயோகப்படுத்தவல்லது.



சிறிய 'லீக்கோ' துண்டுகளை எடுத்துக் கொள்ளவும்.



பிறகு மெல்லிய அடுக்காக அடுப்பினில் பரப்பி வைக்கவும்.



வழக்கமான முறையில் எரிய வைக்கவும்.



சில நிமிடங்கள் கழித்து நன்றாக சுடர் விட்டவுடன் மேலும் வேண்டிய அளவு 'லீக்கோ' சேர்த்துக் கொள்ளவும்.

நெய்வேலி லிக்னைட் கார்ப்பொரேஷன் லிமிடெட்,
நெய்வேலி-1.






FDS NLC 640 TH

# எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் இருங்கள் நாள்முழுவதும் சுறுசுறுப்பாக இயங்குவதற்கான புத்துணர்ச்சிக்கு

# புதிய கால்கேட் லோர்னே டால்க்

புதிய கால்கேட் லோர்னே டால்க்கின் புதுப்பிக்கும் நறுமணம் உங்களைக் குளுமையுடனும், புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கிறது....நாள் முழுவதும் அந்தத் துடியான சுறுசுறுப்பைத் தருகிறது. இளமைத் துடிப்பும், சுறுசுறுப்பும், விளையாட்டுகளில் பிரியமுள்ளவர்கள் குறிப்பாக கால்கேட் லோர்னே டால்க் வியர்வையைத் துரிதமாக கிரகித்துக்கொண்டு தாங்கள், நாள் முழுவதும் உற்சாகமாக இருக்க உதவுவதை நன்கு அறிவார்கள்!

இது சிக்கனமானதும்கூட! உங்கள் குடும்பத்தினருக்கு கால்கேட் லோர்னே டால்க்கை வாங்குங்கள்.—அது சுறுசுறுப்பான நாகரீக மக்களுக்கேற்ற புதியதொரு பரவசமூட்டும் நறுமணம் கொண்டது!








புதிய
சிக்கனமான
டால்க் நவீன
டின்னில்

## "போதும்! போதும்!"

திரு கி. வா. ஜகந்நாதன் அவர்கள் கல்கத்தா சென்றிருந்த சமயம். அங்கு அவர்கள் பத்து நாட்கள்வரை தங்கித் தமிழ்த் தொண்டாற்றுவதாக இருந்தது.

திரு கி.வா.ஜ.வுடன் சென்றோருக்கும் வசதியுள்ள இடத்தில் தங்கியிருக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்த இல்லத்தில் இருந்த ஓர் அம்மையார்தான் கி.வா.ஜ. கோஷ்டியாருக்கு உணவு பரிமாறுவது வழக்கம். தேவைக்குச் சற்று அதிகமாகவே பரிமாறுவார்களாம். எவ்வளவுதான் அன்போடு உபசரித்து உணவளித்தாலும், ஓர் அளவுதானே உண்ண முடியும்! கி. வா. ஜ.வுக்கு மெல்லவும் முடியாத முழுங்கவும் முடியாத நிலை! அடுத்த நாள் உணவருந்தும் வேளையில் 'பாயசம்' பரிமாறப்பட்டது. போதும், போதும், என்றபோதும் மேலும் பரிமாறியவண்ணம் இருந்தார் அம்மையார்!

கி.வா.ஜ., "ஏது, ஏது பாயசத்தால்கூட உயிரைக் கொல்லலாம் போலிருக்கிறதே!" என்றாரே பார்க்கலாம்!

மீத நாட்களில் அவர்கள் தேவையறிந்து உணவு பரிமாறும் நிலை பிறந்தது.

—லால்குடி சிவசண்முகம்



திருந்தார். அப்படியிருந்தும் அவனுக்கு இங்கு இருக்கப் பிடிக்கவில்லை என்றால் அது ஆச்சரியம்தான்."

"இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? பத்மநாபன்தான் என் மகனைக் காப்பாற்றப் பிறந்தவனா? இவன் இல்லாவிட்டால் என் மகன் வாழ மாட்டானா?"

"சுந்தரம்!" — முதலியார் பதறினார்.

"அட, எனக்கு எல்லாம் தெரியுமையா. என்னைப் பழி வாங்க நீங்களெல்லாம் கருணை நாடகம் நடத்தி முடித்து விட்டீர்கள். அந்தத் திரை கிழிந்து போகுமே நான் வந்தால் என்று என் காலுக்கு விலங்கு போட்டீர்கள்..... இங்கே வந்ததால் அல்லவா இத்தனையும் தெரிகிறது! முன் போலவே குருட்டுக் கண்ணோடு நான் வராமல் இருந்திருந்தால், உங்கள் பாடு கொண்டாட்டம் தான்...."

"பத்மநாபனையா சந்தேகிக்கிறீர்கள், சுந்தரம்?"

"நான் கடவுளையே சந்தேகிக்கிறேன்.... எல்லாக் கோயில்களிலும் இருக்கிற எல்லாத் தெய்வங்களையும் தூக்கிக் கடலில் எறியப் போகிறேன்.... தெய்வம் எங்கே இருக்கிறது? இந்த மனிதர்கள் அடிக்கிற கூத்திலே தெய்வம் போன மூலை தெரியவில்லையே, ஐயா....!"

முதலியார் பெருமூச்சு விட்டார். தம் முன் அலறும் தந்தை உள்ளத்தை அவரால் புரிந்து கொள்ள முடிந்தது. பாஷையில் இருந்த கரடு முரடுகளுக்குப் பின்னே அந்த உள்ளத்தில் துடிக்கிற பாசம் அவருக்குத் தெரியாமல் போகுமா?

"பால் சாப்பிடுகிறீர்களா?" என்று உபசரித்தார்.

"நல்ல பாம்புக்குப் பால் வார்க்கிறீர்கள். உங்கள் பால்கூட விஷம்தான்."

"இதோ, பாருங்கள், ஆத்திரப்படுவதால் என்ன பயன்?.... நானு கெட்டிக்காரன். உலகத்தை விழித்துப் பார்க்கிற பருவம் வந்து விட்டது அவனுக்கு..... தன்மான உணர்வு அதிகம் படைத்தவன்..... அவனுடைய உலகம் இங்கே வேலூரில் இல்லை. அதைத் தேடிப் புறப்பட்டுப் போய்விட்டான் என்று அமைதி கொள்ள வேண்டும் நீங்கள்."

"வேதாந்தம் பேசுகிறீர்களோ?... பெற்ற பிள்ளையை, அவன் கருவில் இருக்கும் போதிலிருந்தே, பாசத்தை ஊட்டி வளர்த்திருந்தால் உங்களுக்கு என் மனசு புரியும்..... வைத்தியம் பார்க்கிறவர்தானே? நோயாளியின் கஷ்டம் பாராமல் கத்தியால் புண்ணைக் கீறுவது உங்கள் தொழில். உங்கள் வேதாந்தம் எனக்குத் தேவையில்லை. பத்மநாபனிடமே நான் பேசிக் கொள்கிறேன்."

சுந்தரம் எழுந்து விட்டார். அப்போதே புறப்பட்டுப் போய்க் கதவை இடித்துப் பத்மநாபனின் நெஞ்சையும் இடிக்க வேண்டும் என்கிற ஆத்திரம் அவருடன் எழுந்து விட்டது.

"விடிந்ததும் போகலாம், சுந்தரம்!" என்று தடுத்தார் முதலியார்.

"என் வாழ்வில் விடிவே யில்லாமல் செய்து விட்டீர்களே?.... விடிகிற வரையில் காத்திருக்க முடியாது என்னால்" என்றார் சுந்தரம்.

"நான் சொல்வதைக் கேளுங்கள். இந்த இரவு நேரத்தில் போவது சரியில்லை....."

"ஏன்? இருட்டில் உங்கள் ரகசியத்தையெல்லாம் மறைத்து வைத்து விட்டு விடிந்ததும் என்னை ஏமாற்றப் பார்க்கிறீர்களோ?"

முதலியார் மௌனமானார். சுந்தரத்தைத் தடுக்க இயலாது என்பதை அவர் உணர்ந்தார். சிலவற்றைத் தடுத்து நிறுத்துவது யார் கையிலும் இல்லை. இரவு பகல் என்கிற பேதத்துக்காகத் தந்தையின் பாசம் கட்டுப்பட்டு நிற்காது. விடிவதற்குள் அணையே உடைபடலாம். இந்த வெள்ளம் இப்போதே தணிந்தாக வேண்டும்.

வேடிக்கை. இதே போல்தான், யார் தடுத்தும் கேளாமல், முன்பு ஒரு முறை நள்ளிரவில் ஊரை விட்டு இந்தச் சுந்தரம் புறப்பட்டார்!

திருமணத்தன்று இரவே அது நடந்தது. இன்றைக்கும் அந்தக் காட்சி முதலியாரின் கண் முன் நிற்கிறது.

சுந்தரி பிழியப் பிழிய அழுது கொண்டு பத்மநாபனின் வீட்டுக் கதவைத் தட்டினாள். நலங்கும் மாலையும் மாறாத கோலம்.

பட்டுப் புடவையும் புனகிதமும் குலையாத வேளை. மணப்பெண் கணவனை விட்டுத் தனித்து நள்ளிரவில் வெளியே வந்தால் ஊராரின் கண்கள் சும்மா இருக்குமா?

''என்னம்மா இது?..... அவர் எங்கே?... ஏன் அழுகிறாய்?'' என்று பதறினார் கதவைத் திறந்த பத்மநாபன்.

''பத்மநாபா! இப்போதே ஊரை விட்டுப் புறப்பட வேண்டும் என்கிறார் அவர்..... உன்னிடம் சொல்லி விட்டுப் போக வந்தேன்'' என்றாள் அவள்.

''விடிந்து போகலாமே, சுந்தரி?''

''அவர் கேட்க மாட்டேன் என்கிறார். வருகிறாயா, இல்லா விட்டால் நான்மட்டும் போகவா என்று சீறுகிறார்.''

பத்மநாபனுக்கு ஒன்றும் புரியவில்லை.

''நான் போய் விட்டு வருகிறேன். எனக்கென்னவோ பயமாகவே யிருக்கிறது. பத்மநாபா...... நீ மாறிவிட மாட்டாயே? சுந்தரியை எந்த நாளும் உன் தங்கையாக எண்ணிக் காப்பாற்றுவாயில்லையா ?''

''அசடு மாதிரி, இது என்ன கேள்வி ! உன்னைவிட உலகத்திலே எனக்கு ஒசத்தியான பொருள் ஒன்று உண்டா, சுந்தரி? நீ நன்றாக இருந்தால் போதும்..... நான் மாறவே மாட்டேன். நீதான் மாறுவாயோ என்னவோ!''

''நானா?.... பத்மநாபா, உனக்காக என் நெஞ்சிலே எப்பவுமே ஓர் இடம் உண்டு. அதிலே தெய்வத்தைக்கூட நான் வைக்க மாட்டேன்...... மற்றவர்களுக் கெல்லாம் உன்னைத் தெரியவில்லையென்றால் எனக்குமா தெரியாது என்று நினைத்தாய்?.... எனக்கு என்னைத்தான் தெரியவில்லை.....''

''உனக்குத் தெரிய வேண்டாம். ஏனென்றால் எனக்கு உன்னைத் தெரியும், சுந்தரி.''

இந்த இரண்டு பைத்தியங்களின் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டே மனைவியைத் தேடி வந்த சுந்தரம் அன்று மூன்றாவது பைத்தியமாக மாறியது முதலியாருக்கு இருளில் ஒளியைக் கண்டாற் போலிருந்ததே! அவ்வளவு உயர்ந்த பண்பைச் சுந்தரம் அன்று வெளிப்படுத்தியது அதிசயத்திலும் அதிசயம் என்றே சொல்ல வேண்டும்.

''பத்மாநாபா, நீதான் உண்மையான மனிதன். உன் அன்பு சுந்தரிக்குக் கிடைத்தது எங்கள் பாக்கியம்'' என்றாரே அவர்!

அந்தச் சுந்தரமா இன்று பத்மநாபனையே சந்தேகித்துக் குமுறுகிறார்!

மகனை இழந்த துயரத்தில் அறிவு பேதலித்து விட்டதா? அறிவை இழந்த ஆத்திரத்தால் அல்லவா மகனையும் மனைவியையும் இத்தனை காலமும் பிரிந்திருந்தார்!

முதலியார் பெருமூச்சு விட்டார்.

''முதலியார் இருக்கிறாரா?'' வெளிப்புறம் குரல் கேட்டது.

வந்தவர் பண்ணையார் பத்மநாபன் என்பது தெரிந்ததும் முதலியார் திகைப்புற்றவராய், ''சுந்தரம் வந்தாரே உங்களைத் தேடிக் கொண்டு..... நீங்கள் அவரைப் பார்க்க வில்லையா?'' என்று கேட்டார்.

''இல்லை.... அவரை வரவேண்டாமென்றல்லவா எழுதினேன்? ஏன் வந்திருக்கிறார் இங்கே ?'' என்றார் பத்மநாபன்.

ஏதோ ஒரு பெருந் துயரம் அவர் நெஞ்சை அழுத்திக் கொண்டிருப்பதை முதலியார் உணர்ந்தார். அத்தகைய சந்தர்ப்பங்களில் பத்மநாபன் அவரை நாடி வருவார்.

''எதற்காக இதெல்லாம்?.... வஞ்சனையில்லாமல் அன்பு செலுத்துவதுகூட ஒரு சுமையாக, தடையாக ஏன் ஆகிறது, முதலியாரே ?..... இன்றைக்குச் சாயந்திரம் கமலா கேட்கிறாள். 'நானுவிடம் உங்களுக்கு அவ்வளவு பிரியம் இருந்ததே, அப்பா ! அவன் ஓடிப் போனதும் தேடாமல் இருக்கிறீர்களே?' என்று. அவளுக்குப் பொறுமையாக இருந்திருக்கிறது என் பாசம். நான் சொன்னேன். 'அவனை நான் ஏன் தேடிப் பிடிக்க வேண்டும்? இங்கிருந்து போக முடிவு செய்யாத வரை அவனுக்கு நான் பொறுப்பு. அவனைக் காப்பது என் கடமை...... போய்விட்ட பிறகு எனக்குக் கவலை எதற்காக? அவனுடைய உலகம் எதுவோ, அங்கே அவன் போய் விட்டான்' என்றேன்..... இதைக் கேட்டுக் கமலா ஆச்சரியப்பட்டாள். ஆச்சரியப்பட்டாளோ இல்லையோ, தன் அப்பாவின் அன்பு முழுசாகத் தனக்கே இருப்பதில் ஒரு சந்தோஷம் வந்து விட்டது..... அவளுடைய சந்தேகம் தீர்ந்து போயிற்று.... ஆனால் எனக்குத்தான் சந்தேகம் தீரவில்லை.''

''உங்களுக்கு என்ன சந்தேகம்?'' முதலியார் சந்தேகத்தோடே சிரித்தபடி வினவினார்.

''சுந்தரம் வராமலிருப்பது நல்லது என்று நீங்களும் சொன்னீர்கள்..... அவர் மீது மீதமிருக்கிற வழக்கு முடிவானதும், அவருக்கென்று விடுதலையான வாழ்க்கை உறுதியானதும் மகனை அவர் கண்ணில் காட்டுவதே நல்லது என்று நாம் நினைத்தோம். என் வார்த்தையை மீறி அவர் ஏன் வந்திருக்கிறார் ?'

''பாசம்தான் காரணம். நான் முதலிலேயே சொல்லவில்லையா ?''

''அந்தப் பாசம் எனக்கு இல்லையா, முதலியாரே ?''

''இது வேறு; அது வேறு..... உங்களுடைய பாசம் நட்புறவால் வந்தது. அவருடைய பாசம் உயிரோடு வந்தது.''

''வாஸ்தவம்தான் போல் இருக்கிறது'' என்றார் பத்மநாபன். ''அவருடைய பாசத்தில் உயிர் இருக்கிறது. என் பாசத்தில் அது இல்லை. வெறும் மயக்கம், என்னவோ நாம்தான் காப்பாற்றுகிறோம் என்கிற பிரமை, தியாக உணர்வு இருந்து ஆட்டுவிக்கிறது..... இதெல்லாம் பொய்தான்..... மனிதர்களிடம் செலுத்துகிற அன்பு நமக்குச் சுமைதவிர வேறில்லை.... வெறும் பழிதான் மீதமாகக் கிடைக்கிறது. இல்லையா?''

இதற்கிடையில், சுந்தரம் இருளைக் குடைந்து கொண்டு பத்மநாபனின் வீட்டை அடைந்தார்.

அமைதியில் தூங்கிய வீடு மலைபோல் அவர்முன் நின்றது.

சுற்றுச் சுவரின் முன் வாயில் இரும்புக் கதவு பூட்டப்பட்டிருந்தது.

# இப்பொழுது மிகச் சிறந்த,

தனிப்பட்ட கலவைகொண்ட, **முச்செயல்-திறனுடைய**

ஹேர் ஆயில் டானிக்




**பிராஹ்மி**
**ஆம்லா**
**மாகா**

ஆகியவை அடங்கியது



பல தலைமுறைகளாகப் பயன்பட்டுவரும் பிராஹ்மி, ஆம்லா, மாகா ஆகியவை இப்பொழுது ஒரு அற்புத ஹேர் ஆயிலான **பேமி**ல், உங்களுக்கென, ஒருங்கே இணைந்து கிடைக்கின்றன. **பேம்** கால்கேட்-பாமாலிவ் கம்பெனியாரின் புதிய, தரமான தயாரிப்பு.

**பேமி**ல் அடங்கியிருக்கும் சேர்க்கைப் பொருட்களான பிராஹ்மி-ஆம்லா-மாகா தலைமுறை தலைமுறைகளாக கேசத்தை அழகுபெறச் செய்யும் குணங்களுக்காகவும், அபரிமிதமான கேச வளர்ச்சிக்காகவும், கேசம் உதிர்வதையும், முதுமை எய்துமுன் நரைப்பதையும் தடுப்பதற்காகவும், மயிர்க்கால்களுக்கு இதமளித்து,

# பேம்

அயர்ந்த நித்திரையை வருவிப்பதற்காகவும் பெரிதும் போற்றப் பட்டு வருகின்றன.

பழமைவாய்ந்த இந்தியக் கலைமுறையை நம்புங்கள்...தினந்தோறும் உங்கள் மயிர்க்கால்களில் **பேம்** தேய்த்து, மிருதுவான அடர்ந்த, செறிந்தெழிலான, செழுமையான கூந்தலைப் பெறுங்கள்.

CBHO-9-1 TAM.

''பத்மநாபன்''! என்று குரல் கொடுத்தார்.

பதில் இல்லை.

''பத்மநாபன்!''

வீட்டில் யாருமே இல்லை போலிருந்தது.

சுந்தரத்துக்குப் பொறுமை இல்லை. இரும்புக் கதவு திறக்கப்படுகிற வரை காத்திருக்க அவரால் முடியாது. சுற்றுச் சுவரை ஒரே தாவில் தாண்டித் தோட்டத்துக்குள் குதித்தார். நேரே வீட்டின் நிலை வாயிலை அடைந்து கதவை ஓங்கித் தட்டினார். தட்டவில்லை. இடித்தார்.

ஆனால் அங்கு கதவு தானாகவே திறந்து கொண்டது.

சுந்தரத்துக்கு முதன் முதலாகத் திகைப்பு ஏற்பட்டது. 'கதவைத் தாழிட மறந்து விட்டார்களா?'

இச்சமயம் 'லொள்' என்று நாய் குரைத்தது. அது கொஞ்ச தூரம் 'வாக்கிங்' போயிருந்த சமயமாதலால் முன்னரே அவர் வரவை அறிய முடியாமற் போயிற்று.

முன் வாயிலில் படுத்திருந்த கந்தன் விழித்துக் கொண்டு, '' யாரது ?'' என்றான். அவனுக்கு மாலையிலிருந்து காய்ச்சல். நல்ல தூக்கத்திலிருந்து அப்போது தான் அவனுக்கு விழிப்பு ஏற்பட்டிருந்தது.

''பத்மநாபன் இல்லையா?'' என்று கேட்டார் சுந்தரம்.

''இல்லிங்களே.... வைத்தியர் ஐயா ஊட்டுக்குப் புறப்பட்டுப் போனாரு. நீங்க யாரு ?'' என்றான் கந்தன்.

தாம் யார் என்பதை அவனிடம் சொல்ல அவர் விரும்பவில்லை. பத்மநாபன் அங்கில்லை என்றதுமே திரும்பிவிடத் துடித்தார். அந்த வீட்டில் ஒதுங்குவதே பாவம் என்று சீற்றம் கொதிக்கிறதே, நெஞ்சில் ! மகனை வாழவிடாத வீடாயிற்றே அது!

மளமளவென்று திரும்பினார்.

பளிச்சென்று அத்தையின் அறை விளக்கு எரிந்தது. பேச்சுக் குரல் கேட்டு விழித்த அவள் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்த நேரத்தில் யாரோ சுவர் ஏறிக் குதித்து வெளியேறுவது தெரிந்தது. (தொடரும்)

# டயல் ஒன் நாட் நாட்

கதை.. கௌசிகன்
சித்திரம் ரமணி.. — சித்திரக் கதைகள்



நீங்கள்
பொலிவுடனிருக்க
சார்மிஸ்
உபயோகியுங்கள்!

புதியது!
நேர்த்தியான டின்




# புதுமை பெறுக... இதம் பெறுக...
# நாள் முழுவதும் நளினமாய் இருங்கள் !

நாள் முழுவதும் நளினமாய் இருக்க, புதிய சார்மிஸ் உபயோகித்து, குளுமையையும், புத்துணர்ச்சியையும் பெறுங்கள். பளபளப்பான, புதிய டின்னில் உள்ள சார்மிஸ், வியக்கத்தக்க வகையில் உங்களுக்குப் புத்துணர்ச்சியளித்து உங்கள் அழகைச் சோபிக்கச் செய்யும் அந்த உன்னத மனோரம்மிய நறுமணத்தைக் கொடுக்கிறது.

# சார்மிஸ்

உன்னத மனோரம்மிய மணத்துடன் கூடிய
டால்கம் பவுடர்

CH.TP.G.13 TM



# தமிழ்ச் சுடர் கி.வா.ஜ.

தி.ஜ.ர

ஏதோ ஒரு கிராமபோன் இசைத்தட்டு வெளியீட்டு விழா. அதில்தான் முதல் முதலாக வ.ரா.வும் கி. வா. ஜகந்நாதனும் நேரில் பரிசயமானதாக எனக்கு ஞாபகம். அதற்குக் கருவியாக இருந்தவன் நானே என்றும் எண்ணுகிறேன். இருவரும் அந்த விழாவுக்கு வந்திருந்தார்கள். நானும் போயிருந்தேன். "இவர்கள்தான் வ.ரா." என்று கி. வா. ஜ. வுக்குத் தெரிவித்தேன், மெதுவான குரலில் ஒரு புறமாக. "தெரியும். ஆனால் நேரில் பழக்கமில்லை" என்று அவர் சொன்னார்.

முறையாகத் தமிழ் பயிலாத எழுத்தாளர்களின் முதல்வராக அன்று திகழ்ந்தவர் வ.ரா. அத்தகைய பலருக்கு ஊக்கமளித்து வழிகாட்டியவர் அவர். தமது முதல் கதையின் எழுத்துப் பிரதியை வாசித்துப் பெரிதும் பாராட்டிப் பிரசுரித்துத் தமக்கு எழுத ஊக்கமளித்தவர் வ.ரா. என்பதாகத் தம்முடைய 'ஏட்டிக்குப் போட்டி' என்ற கட்டுரைத் தொகுப்பின் முதல் பதிப்பில் 'கல்கி'யே குறிப்பிட்டிருக்கிறார். ஆனால் திரு. வி. க., நெல்லையப்பர், ராய. சொ. போன்ற சில தமிழறிஞர்களைத் தவிரப் பிற தமிழ்ப் புலவர்களிடம் வ. ரா.வுக்குப் பிடித்தமில்லை; அவர்களுக்கும் இவரிடம் அப்படித்தான். கி. வா. ஜ.வோ புலவர்களுக்கெல்லாம் புலவரான மகாமகோபாத்யாய உ. வே. சாமிநாதய்யரின் சீடர். ஐயரவர்களுக்குப் பின் தமிழறிவின் ஆழத்தாலும் விரிவாலும் அவருக்கு இணையான இடத்தைப் பெற்று விளங்குபவர். வ.ரா.வுடன் இத்தகையவரை அறிமுகம் செய்விக்கலாமா என்று நான் தயங்கவில்லை. காரணம், கி. வா. ஜ. வின் இயல்பு எனக்கு முன்பே தெரியும்.

எனவே, "இவர்கள் 'கலைமகள்' ஆசிரியர் கி. வா. ஜ" என்று வ.ரா.விடம் தெரிவித்தேன்.

வ.ரா.தான் பளிச்சென்று ஏதாவது பேசுவாரே. அவர் உடனே "அடே! எனக்கு இவரிடம் ஒரு வியப்பு; இவர் மகா தைரியசாலியடா! ஏன்? சொல், பார்க்கலாம்" என்றார். வ.ரா.விடம் எப்போதுமே எனக்கு ஒரு பயபக்தி. அவருக்கு முன்பு நான் அதிகமாகப் பேச மாட்டேன். அவரே சட்டென்று தொடர்ந்தார். "இந்த நாளிலும் இவர் குடுமி வைத்துக் கொண்டிருக்கிறாரே; இதற்கு எவ்வளவு தைரியம் வேண்டும் தெரியுமா?" என்றார்.

'குடுமி' என்பது பழைமையின் சின்னம்; பழைமை என்றாலே பிடிக்காதவர் வ. ரா. அவரே இப்படிச் சொன்னார் என்றால் ஆச்சரியமாக இருக்கிறதல்லவா? உண்மையாகவே இப்படிச் சொன்னாரா என்றுகூடச் சிலருக்கு ஐயம் ஏற்படும். உண்மையாகவே—தமது மனத்தில் பட்டதையே — இப்படி அவர் சொன்னார் என்றுதான் நான் கருதுகிறேன். எந்த ஒரு விதியும் எல்லாருக்குமே பொருந்திவிடாது. இதைப் பல சமயம் நாம் உணரத் தவறுவதாலேயே அநேகம் தொல்லைகள் நேர்கின்றன. இலக்கணத்தைப் பண்டிதன் வேண்டுமென்றே மீறினால், அது துணிச்சல்; பாமரன் மீறினால் அது பிழை, அறியாமை. எதிரியைக் கொல்ல இசையாமல் போர்வீரன் தயங்கி நின்றால், அது கோழைத்தனம்; ஒரு யோகி அப்படி நின்றால் அது பெருந்திறம். 'ஸ்வதர்மம்' என்ற சொல்லைக் கொண்டு, கீதை விரிவாக விளக்குவது இந்த நுட்பத்தைத்தான். 'ஸ்வதர்மம்' என்பது ஆளுக்கு ஆள் அவரவருடைய நிலைக்கும் இயல்புக்கும் ஏற்றபடி மாறுபடும்.

கி. வா. ஜ. பல இடங்களுக்குப் போகிறவர்; எத்தனையோ வகையான எத்தனையோ பேருடன் பழகுபவர். 'கலைமகள்' பத்திரிகையின் ஆசிரியர் என்ற முறையிலே—பழைமையோடு — பழைய இலக்கியத்தோடு—அமைந்து விட முடியாதவர்; நவீன இலக்கியத் துறைகளுக்கும் கருத்துக்களுக்கும் நிறைய நிறைய இடம் கொடுக்க வேண்டியவர், கொடுத்து வருபவர். தாமே கற்பனை இலக்கியத் துறையில் சிறந்த பல சிறுகதைகள் புனைந்து, பல தொகுப்புகளுக்குப் பரிசும் பாராட்டும் பெற்றிருப்பவர். தமிழ் வித்துவான் பரீட்சையில் முதன்மையாகத் தேறி (முதல் முதலாக என்று ஞாபகம்) ஓர் ஆதீனத்தின் ஆயிரம் ரூபாய் பரிசையும் பெற்றவர். பழைமையோடு ஒட்டியவர். ஆனால் புதுமையிலே அதிகமாய் இடம் பெற்று வருபவர். அவரது சிகை திறத்தின் சின்னம் என்று வ.ரா. கருதியதில் என்ன தவறு?

கி. வா. ஜ.விடம் முதல் முதலாக நான் எப்போது எப்படி அறிமுகமானேன் என்பது சரியாக எனக்கு நினைவில் இல்லை. ஆனால் சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி எனக்கு மிக நன்றாக நினைவில் இருக்கிறது. அதற்குச் சிறிது காலம் முன்பே ஓரளவு அவருடன் எனக்குப் பழக்கம் உண்டாகியிருந்தது. ஒரு நாள் அவர் என்னிடம் தமது குருநாதரான மகாமகோபாத்தியாய சாமிநாதய்யரவர்களை நான் சந்திக்க வேண்டும் என்று கூறினார். முறையாகத் தமிழ் பயிலாத எழுத்தாளர் கும்பலில் ஒருவன் நான். சற்று சம்பிரதாய விரோதியுமானவன். ஆகவே, ஐயரவர்களை என்னைப் போன்றவர் சந்திப்பதில் என்ன பொருத்தம்? அவர்தான் என்னைச் சந்திக்க விரும்புவாரா? இந்த ஐயம் தேவையில்லை என்று கி. வா. ஜ. விளக்கினார். ஐயரவர்கள் புது எழுத்தாளர்களையெல்லாம் சந்திப்பதிலே விருப்பம் காட்டுவதாகக் கூறினார்; இதிலே அவருக்கு மகிழ்ச்சி என்றும் தெரிவித்தார். திருவட்டீசுவரன் பேட்டையில் ஐயரவர்களின் இல்லத்தில் சந்திப்பு நிகழ்ந்தது. மட்டற்ற படிப்பும் அளவிறந்த அநுபவமும், பரிபூர்ண மனப் பக்குவமுமே உருவெடுத்தது போன்ற ஐயரவர்கள், அன்பு ததும்பப் பண்பு மிக்க சாந்தமான குரலில் பேசினார். அவர் சொன்ன வார்த்தைகள் அப்படியப்படியே நினைவில் இல்லை. என் போன்ற பலரும் எழுதுவதிலே தமக்கு மகிழ்ச்சியே என்றும் அவர் கூறினார். ஆயினும் எழுத்துப் பிழை, சொற் சிதைவு, பொருட் குற்றம் இவை யில்லாமல் எழுதினால் நல்லது என்று எடுத்துரைத்தார். இந்த விதிகளை என்றும் இயன்றவரையில் பின்பற்றியே வருவதாக ஐயரவர்களிடம் நான் தெரிவித்தேன். அந்தச் சில நிமிஷ நேரத்தில் சந்திப்பு. ஐயரவர்களின் கம்பீரமான, சாந்த சொரூபத்தை என் மனத் திரையில் நிலையாகப் பதித்துவிட்டது.

என்னைப் போலவே இன்னும் பல புதிய எழுத்தாளர்களைத் தேடிப் பிடித்து ஐயரவர்களிடம் அழைத்துச் சென்று சந்தித்துப் பேசச் செய்திருக்கிறார் கி. வா. ஜ. என்பதாக எனக்கு ஞாபகம். புதிய எழுத்தாளர்களைக் காண்பதில் ஐயரவர்களுக்குத் தானாக விருப்பம் இருந்திருக்குமோ அல்லது கி. வா. ஜ. வின் இணக்கமான தூண்டுதலே அதற்குக் காரணமோ! எது என்று என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியாது. தமது பெரு அடக்கம் காரணமாக அந்தச் சந்திப்புக்களை ஐயரவர்களே விரும்பியதாகத்தான் கி. வா. ஜ. சொல்லுவார். ஆனால் ஒன்று நான் நிச்சயமாகக் கூறுவேன்: பழமைக்கும் புதுமைக்கும் பெரும் பாலமாகப் பின்னாளில் உருவாக இருந்த கி. வா. ஜ. போன்ற ஒரு சிஷ்யர்



ஐயரவர்களுக்கு இல்லையென்றால் அந்தச் சந்திப்புக்கள் கண்டிப்பாக நிகழ்ந்திருக்க மாட்டா. உயர்ந்த வகையான குரு சிஷ்ய பரம்பரையில் சீடருக்குக் குருவால் ஆற்றல் பெருகுவது மட்டும் அல்ல. குருவுக்குச் சீடரால் யசஸ் பரவுகிறது. வேத காலத்திலிருந்து இன்று வரை இப்படிப் பல உதாரணங்களைக் காணலாம். ஸாக்ரட்டீஸ் — ப்ளேட்டோ — அரிஸ்டாட்டில், ராமதாஸ் — சிவாஜி, ராமகிருஷ்ணர் — விவேகானந்தர் இந்த உதாரணங்களை அறியாதவர் யார்? சிறந்த குருவுக்குச் சீடரில் சிறந்தவர் கிடைத்து விட்டால், அந்த உறவிலே இந்த விளைவுகள் மட்டுமல்ல; ஒருவர் மீது ஒருவருக்கு உண்டாகும் பாசத்தால், இருவருடைய பண்புகளுமே பதமும் நயமும் பெற்றுப் பக்குவம் அடைகின்றன. ஐயரவர்களின் வசன நடையில் தெளிவும் எளிமையும் அமைய நேரிடையான காரணம், தாம் அல்ல என்றுதான் கி. வா. ஜ. சொல்லுவார். இருக்கலாம்; ஆயினும் அவருக்கு ஐயரிடம் ஏற்பட்ட சீடர் உறவே ஐயரின் ஆற்றொழுக்கான வசன நடைக்குக் காரணம் என்பது பலரும் கொண்டுள்ள முடிவு. ஐயரவர்களிடம் தமிழ்க் கல்வியை மட்டும் அல்ல, பண்புகளையுமே பெற்றுப் பொலிபவர் கி. வா. ஜ. இங்கிதம், பதவிசு, அடக்கம், அன்பு, எவருக்கும் உதவும் குணம், சௌலப்யம், பொறுமை, ஓயா உழைப்பு இவையெல்லாம் கி. வா. ஜ. வின் உடைமைகள்.

இன்றைய வார ஜர்னல் அதிபரான ஸ்ரீ நா. ராமரத்தினம் அவர்களின் தந்தை ஸ்ரீ நாராயணசாமி ஐயரவர்கள், முற்றும் தமிழிலக்கியப் பணியாகவே சிறந்த முறையில் உயர்ந்த பதிப்பாக ஒரு மாதப் பத்திரிகை இல்லாத குறையை நீக்க வேண்டும் என்ற ஆர்வம் கொண்டு, 'கலைமகள்' பத்திரிகையைச் சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கினார். ஏறக்குறைய அன்று முதலே (இடையில் மிகச் சிறிய காலம் விலக்காக) அதன் பொறுப்பாசிரியராய்ப் பதவி வகித்து வருபவர் கி. வா. ஜ. அந்த ஆதிநாளில் புதிய எழுத்தாளர்களுடன் 'கலைமகள்' தொடர்பு கொள்ள அதிக வாய்ப்பில்லை. புதிய எழுத்தாளர்களெல்லாம் சிறுகதை எழுதுவோராகவே தொடங்கினார்கள்; 'கலைமக'ளோ ஏதோ ஒரே ஒரு சிறுகதையை அன்றி, மீதி அடக்கப் பொருள் அனைத்தையும் கட்டுரைகளாகவே தாங்கி வெளிவந்தது. இந்த நிலையிலும், தம் சொந்த முறையில் பல புது எழுத்தாளர்களோடு கி. வா. ஜ. தொடர்பு கொண்டார். அவர்களைத் தம் குருவான ஐயரவர்களிடமும் அறிமுகம் செய்து வைத்தார். பழமையில் வேர் கொண்டு, புதுமையில் படர அவருக்கிருந்த ஆர்வத்துக்கு இதுவே சான்று. பின்னாளில் அதிகமதிகமாய்க் 'கலைமக'ளில்

கற்பனை இலக்கியத்துக்கும் இடந்தரத் தொடங்கியபோது, அநேகமாக எல்லாப் புது எழுத்தாளர்களும் அதற்கு எழுதியிருக்கிறார்கள். ஒரு சந்தர்ப்பத்தில் கி. வா. ஜ. சொன்ன ஒரு விஷயம் இங்கே என் நினைவுக்கு வருகிறது. வ. ரா. காலமானதும் அவரைப் பற்றி ஒரு கட்டுரை எழுதும்படி கி. வா. ஜ. என்னைக் கேட்டுக் கொண்டார். அப்போது தான் இதைச் சொன்னார். சற்றுப் பெருமிதமாயிருந்தாலும், கொஞ்சம் வருத்தம் தோய்ந்த குரலில், ''பிரபல எழுத்தாளர்கள் அத்தனை பேரும் 'கலைமக'ளுக்கு எழுதியிருக்கிறார்கள். வ. ரா. ஒருவர்தான் அப்படி எழுதாமல் 'தப்பி'ச் சென்று விட்டார்'' என்றார் கி. வா. ஜ.

கி. வா. ஜ. சிறந்த எழுத்தாளர்; பொருளில் மட்டும் அல்ல; கையெழுத்தின் பொலிவிலுந்தான். சிலருடைய கையெழுத்துக்களை அச்சுக் கோப்பவர் கண்டால், ஆத்திரப்படுவார்கள். 'ராயச' வீச்செழுத்தெல்லாம் அச்சுக்குப் போகும் கையெழுத்திலே இருக்கக் கூடாது என்பது எந்தப் பத்திரிகாலயத்திலுள்ளவருக்கும் தெரியும். ஆனாலும், அவர்களெல்லாம் இதை அசட்டை செய்து, 'கோழிக் கிண்டலா'கவே கிறுக்கி விடுகிறார்கள். கி. வா. ஜ. வின் கையெழுத்தில், 'கொம்பு'களும் 'வால்'களும் சற்று முனைப்பாகவே இருக்கும். சுழிகள் அழுத்தமாக விழும். அத்தனையும் மிகத் தெளிவாய்—உள்ளத் தெளிவின் பிரதிபலிப்பாய் - அமையும். அருமையான அவருடைய இலக்கிய விளக்கங்கள், கதைகள், கட்டுரைகள் ஆகியவை தான் எல்லோருக்குமே தெரிந்தவை. இன்பத் தமிழ் மறையென அவர் பொழியும் பிரசங்கங்களைத் தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் எண்ணற்றோர் கேட்டிருக்கிறார்கள். வடக்கே டில்லி, மேற்கே பம்பாய், கிழக்கே கல்கத்தா, தெற்கே யாழ்ப்பாணம் இங்கெல்லாம் பல முறை சென்று சொற்பொழிவாற்றியிருக்கிறார். மலேயா, பர்மா ஆகியவற்றுக்கும் சென்று பேசி வந்திருக்கிறார். அவருடைய எழுத்தாற்றலும், சொற்பொழிவாற்றலும் பற்றி என் விளக்கம் தமிழன்பர்களுக்குத் தேவையில்லை. அது 'கொல்லத் தெருவில் ஊசி விற்பது' போல் முடியும்.

கி. வா. ஜ.விடம் ஒரு முறை பழகியவர்கள் பின்பு எந்நாளும் நண்பர்களாகி விடுவார்கள். அவருக்கு நாடெங்கும் ஆயிரக் கணக்கான நண்பர்கள் இருக்கிறார்கள். எத்தனை கடிதங்கள் வந்தாலும் சலிக்காமல் பதில் எழுதும் அரிய பழக்கத்தை அவர் மேற்கொண்டிருக்கிறார். அத்தனை பதிலிலும் 'ஆப்த'மான உணர்ச்சி உண்டாக்கும் ஒரு சொல்லாவது இருக்கும்.

கி. வா. ஜ. ஒரு தமிழ்ச் சுடர்; சிறந்த இலக்கியப் பத்திரிகாசிரியர்; பக்திமான்; எல்லையற்றவரின் நட்புச் செல்வத்தைப் பெற்றவர்; ஆசு கவி பொழியும் கவிஞர்; ஆப்தமாய்ச் சம்பாஷணை புரியும் நண்பர்.

அவருடைய அறுபதாண்டு விழா, தமிழன்பர்களுக்கெல்லாம் நாடெங்கும் பெருமகிழ்ச்சியளிக்கும் நல்விழாவாகும். இன்னும் பல்லாண்டு வாழ்ந்து தமிழுக்கு மேலும் பல பணி புரிய அவரை அனைவரும் மனமார வாழ்த்துவோம்.




## பிளேட்டோவின் கடிதங்கள்

பொதுவாகச் சிந்தனையைத் தூண்டிவிடும் கற்றுணர்ந்த அறிஞர்களின் புத்தகங்களைப் படிப்பதில் உள்ள சுவையே அலாதிதான். நம் செந்தமிழில் பிளேட்டோவின் படைப்புக்கள் சில வெளிவந்திருக்கின்றன. அவற்றுள் ஒன்று, 'பிளேட்டோவின் கடிதங்கள்.'

இந்நூல் பிளேட்டோவின் பதின்மூன்று கடிதங்களின் திரட்டு. ஒவ்வொரு கடிதமும் ஒவ்வொருவருக்கு எழுதப்பட்டுள்ளது. கி. மு. 387ம் ஆண்டு முதல் கி. மு. 367 வரை எழுதப்பட்டுள்ள இந்தக் கடிதங்களில், கிரேக்க சாம்ராஜ்யத்தின் போக்கையே தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

பிளேட்டோ மனித சுபாவத்தை நன்கு அறிந்தவர்; தம் கருத்துக்களை ஒளிவு மறைவின்றிச் சொல்ல வல்லவர். தம் நண்பரிடத்தில் மட்டுமல்ல, தம் எதிரியிடத்திலும் விசுவாசமுடையவர்; எல்லோரிடத்திலும் அன்பு செலுத்துகிறவர். நகைச்சுவை நிரம்பியவர். எதிலும் நிதானத்தைக் கடைப் பிடிப்பவர். நேர்மையானவர். அவருடைய இந்த நற்குணங்கள் ஒவ்வொரு கடிதத்திலும் பிரதிபலிக்கின்றன. அவருடைய அரசியல் அபிப்பிராயங்கள் எப்பொழுதும் அரசியல்வாதிகளால் ஏற்றுக் கொள்ளப்படுபவை என்பது யாவரும் அறிந்ததே.

பிளேட்டோவின் காலத்திய சமுதாய பொருளாதார நிலைகளையும் இக்கடிதங்கள் எடுத்துக்காட்டுகின்றன. இதன் ஆசிரியர் வெ. சாமிநாதசர்மா அவர்களின் மொழிபெயர்ப்பு ஓரளவுக்கே கல்வியறிவு வாய்ந்த சாதாரண மனிதன்கூடப் புரிந்து கொள்ளும்படி அமைந்துள்ளது. நாவல்களையும் சிறுகதைகளையும் உருவாக்குவதில் மோகம் அதிகமாக உள்ள இக்காலத்தில் வேதாந்த விஷயங்களை எளிய நடையில் இந்த ஆசிரியர் எழுதி வருகிறார் என்பதே இவருக்குத் தனிச் சிறப்பு. கிரேக்க வரலாற்றின் ஒரு பகுதியை அறிந்து கொள்வதோடு பிளேட்டோவின் உயிலைப் பற்றியும் இந்நூலின் வாயிலாகக் கேட்கிறோம். உயிலை அப்படியே தருவதில் ஒருவித பயனும் இல்லை என்று கருதியே அதன் கீழே தேவையான குறிப்புக்களையும் ஆசிரியர் கொடுத்திருக்கிறார். அவைகளைப் படிக்கும்போது பரந்த ஆராய்ச்சி செய்து எழுதப்பட்ட நூல் இது என்று தெரிய வருகிறது. -- சாந்தா ஜெகந்நாதன்

பிரசுரம்: பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம், சென்னை-20

# ஜீவகீதம்

ஜெகசிற்பியன்

அத்தியாயம் அறுபத்தேழு

## ஜீவகீதம் கேட்குது!

அன்று வெள்ளிக்கிழமை. சபேசன் ஜவ்வி வியாபாரத்துக்குப் போகவில்லை. நாளெல்லாம் தன் அறையிலேயே அடைந்து கிடந்தான். உறங்கினானா? இல்லை; ஓயாத சிந்தனை, சிந்தனை!

பகல்போது மறைந்து இரவும் வந்தது. ஏழு மணி வாக்கில் வெளியே போய் ஹோட்டலில் வயிறாரச் சாப்பிட்டு விட்டுத் திரும்பி வந்தான். மறுபடியும் சிந்தனையில் ஆழ்ந்தான்.

இப்படிக் கொஞ்ச நேரம் கடந்திருக்கும். திடீரென்று அவன் சிரித்தான். வாய் விட்டுக் கலகலவெனச் சிரித்தான்.

'ஆமாம்; இதுதான் முடிவு. இதுவே என் முடிவு.' — அவன் மீண்டும் சிரித்தான். 'ஒரு புறம் சந்தியா; இன்னொருபுறம் வேதா. நான் யாரை ஏற்பது? - யாரை இழப்பது? இருவரையுமே என்னால் நிராகரிக்க முடியாது. ஏனென்றால், அவ்விருவருமே என் உள்ளத்தின் இரு கண்கள் போன்றவர்கள். தேச பக்தியை ஒரு கண்ணாகவும், சமூக ஒழுக்க நெறிப் பண்பாட்டைப் பிறிதொரு கண்ணாகவும் கொண்டது என் உள்ளம். எனது தேசபக்திக் கண்ணின் கருமணியாக விளங்குபவள் சந்தியா; சமூக நெறி முறைகளின் சத்திய விழிச்சுடராகத் துலங்குபவள் வேதா. இவர்களில் ஒருவரை இழந்தாலும் என் உள்ளத்தின் ஒரு கண் குருடாகி இருண்டு விடும். அந்த ஈனமான ஊன வாழ்க்கை எனக்கு வேண்டாம். நான் வேதாவுக்கும் துரோகம் செய்ய மாட்டேன்; சந்தியாவையும் ஏமாற்ற மாட்டேன். வேறு என்ன செய்வேன்? எனக்கு நானே துரோகம் இழைத்துக் கொள்ளப் போகிறேன். என்னை நானே ஏமாற்றிக் கொள்ளப் போகிறேன். என் உள்ளத்தின் இரு கண்களையும் பிடுங்கி எறிந்துவிட்டு . நிரந்தரக் குருடனாகிவிடப் போகிறேன். கடைசிவரை அது இருண்டே கிடக்கட்டும். அந்த இருட்டிலேயே நான் தட்டுத் தடுமாறி விழுந்து எழுந்து உழன்று உழன்று கிடந்து அதிலேயே மறைந்து ஒழிவேன்....'

தனக்கே திருப்தியளிக்காததும், விவாதத்துக்கு உரியதுமான இந்த முடிவை எண்ணி மீண்டும் அவன் சிரித்துக் கொண்டான். 'என்ன செய்வது? என்னுள் ஏதோ ஒரு பலஹீனம் ஆழப் புரையோடி விட்டிருக்கிறது; அதனால் நான் எப்போதும் எதிலும் ஓர் அரை மனிதனாகவே இருந்து வருகிறேன்.'

அவன் அமைதியாக உட்கார்ந்து, ஏழுமலையான் அச்சக உரிமையாளர் கண்ணபிரானுக்கு ஒரு கடிதம் எழுதினான். இந்த ஊரில் தான் இருக்கப் பிடிக்காமல் பம்பாய் அல்லது கல்கத்தாவுக்கு இன்று புறப்பட்டுப் போய் விடுவதாக அந்தக் கடிதத்தில் எழுதி, இன்றையத் தேதி வரையில் அவருக்குச் சேர வேண்டிய அறை வாடகைப் பணம் ஐந்து ரூபாய்ச் சில்லறையையும் அதனுடன் வைத்து ஒரு கவரில் போட்டு ஒட்டி, ஏழுமலையான் படம் பதித்த கண்ணாடிக்குப் பின்னால்—பார்வையில் படும்படி — செருகி விட்டு, இந்நாள்வரை காகித ஜவ்வி வியாபாரத்தில் மிச்சம் பிடித்துச் சேமித்து வைத்திருந்த நூற்றி இருபத்தைந்து ரூபாய், தன் உடைகள் மற்றும் சாமான்களை யெல்லாம் எடுத்து டிரங்க் பெட்டிக்குள் போட்டுப் பூட்டினான். பிறகு முட்டிக் கால்களைக் கட்டிப் பிடித்துக் கொண்டு வெகுநேரம் அப்படியே உட்கார்ந்திருந்தான்.

தெருவில் ஜன நடமாட்டம் ஓய்ந்தது. 'சரி; புறப்பட வேண்டியதுதான்' என்று முனகிக்கொண்டே பெட்டியுடன் வெளியே வந்த சபேசன், அறைக் கதவுப் பலகைகளை வெறுமனே செருகிவிட்டு அங்கேயே சற்று நேரம் நின்றான். அவன் கண்கள் கலங்கின. தலை குனிந்தவாறு திரும்பி நடந்தான்.

தங்கசாலையின் ஆரம்ப முனையை அவன் அடைந்தபோது, ரிப்பன் மாளிகைக் கோபுரக் கடிகாரம் இரவு மணி பத்து என்பதை ஓர் இன்னிசைக் கலவையுடன் அறிவித்துவிட்டு ஓய்ந்தது.

மணி பத்து என்று அறிந்ததுமே சபேசனின் மனத்தில் மின்னலென ஓர் எண்ணம்:



'இந்த நேரத்துக்குத்தானே சந்தியா தன் வீட்டைவிட்டு வெளியேறி வருவதாகச் சொன்னான்?'

அவன் அந்த நினைப்பை அடியோடு மறக்க முயன்றான். என்ன முயன்றாலும் அது நீரில் அமிழ்த்திய பந்து போல் தெம்பிக்கொண்டு மேலே வந்தது. அத்துடன் அவனுடைய கால்களும் பின்னலிட்டுப் பின்னுக்கு இழுத்தன.

'அவன் நிஜமாகவேதான் அவ்வாறு சொல்லியிருப்பானா? எனக்காக அவள் வந்து காத்திருப்பாளா? அதைச் சும்மா தெரிந்துகொண்டு போய் விட்டால் என்ன?'

இப்படி அவன் முடிவு செய்வதற்குள்ளாகவே அவனது கால்கள் மெமோரியல் ஹாலை நோக்கித் தாமே நடக்க ஆரம்பித்து விட்டன. ஆயினும் அவன், அவளு

டைய கண்ணில் பட்டுவிடக் கூடாதே என்ற எச்சரிக்கையோடு சாலையின் ஓரமாகவே நடந்து தபாலாபீசுக்கு அருகில் போய், இருட்டான ஓரிடத்தில் மறைந்து நின்று கொண்டான். அங்கிருந்து பார்த்தால் மெமோரியல் ஹாலும், சந்தியா குறிப்பிட்டுச் சொன்ன அந்த மரத்தடியும் நன்றாகத் தெரியும்.

ஆனால், அவ்விடத்தில் யாரும் நிற்பதாகத் தெரியவில்லை. பரபரப்புடன் கண்களைக் கசக்கி விட்டுக்கொண்டு அப்படியும் இப்படியுமாகச் சாய்ந்து குனிந்து கூர்ந்து பார்த்தான் சபேசன். நிச்சயமாக அங்கு யாரும் இருப்பதாகத் தெரியவேயில்லை.

'ஒருகால் அவள் இனிமேல் புறப்பட்டு வருவாளோ? சரி; கொஞ்ச நேரம் இங்கேயே நின்று பார்க்கலாம்.'

ஐந்து நிமிடங்கள் கரைந்தன. சந்தியா வரவில்லை. 'இன்னும் சற்று நெருங்கிப் போய்ப் பார்க்கலாமா?' — தபாலாபீசுக்குப் பக்கத்தில் இருந்த பெட்ரோல் பங்க் ஒன்றை நோக்கி இருட்டில் ஒதுங்கி மறைந்து நடந்தான். அங்கே போய் நின்றும் ஓர் ஐந்து நிமிடங்கள் பறந்தன. சந்தியா வரவில்லை.

'அவள் என்னிடம் பொய் சொல்லியிருப்பாளோ? நிச்சயமாக அவள் நெஞ்சிலே பொய்யின் நிழல்கூடத் தீண்ட முடியாது. அதில் எனக்கு ஐயமே இல்லை. ஆயின், அவள் ஏன் வரவில்லை?'

எதிரேயிருந்த நைனியப்ப நாயக்கன் தெருவை வெறித்துப் பார்த்தான். அடுத்த கணம், அந்த நிசப்தமான இரவு நேரத்தில் யாரோ ஒரு பெண் அலறி அழும் சத்தம் கேட்டது. ஒரே ஓர் அலறல்தான். அப்புறம் அது அடங்கி விட்டது.

'இந்த நேரத்தில் யார் அப்படி அழுவது? சந்தியாவின் அழுகுரல் போலிருக்கிறதே!'

அவன் உடல் படபடத்தது. உள்ளம் துடி துடித்தது. அவனுடைய தீர்மானம், வைராக்கியம், பயணத் திட்டம் எல்லாம் அவனுக்கு மறந்து போயின. அந்தத் தெருவை நோக்கிப் பாய்ந்தோடினான். அதன் மூலையில், சாத்திக் கிடந்த பட்டாணிக்கடை யொன்றின் அருகில் சென்று நின்றான். மீண்டும் அதே அழு குரல் எழுந்து ஓய்ந்தது. அடி தாளமாட்டாமல் வீறிடுவது போன்ற ஓலம். சந்தேகமில்லை; அது சுரேஷ் சௌத்ரியின் வீட்டு மாடியிலிருந்துதான் வந்தது.

இதற்கு மேல் சபேசனால் அங்கு நிற்கவே முடியவில்லை. ஏதோ ஒரு சக்தி அவன் பிடரியைப் பிடித்துத் தள்ளுவது போலிருந்தது. கால்கள் தாமாகவே முன்னோக்கி இழுத்தன.

'என்னதான் நடக்கிறது என்று போய்ப் பார்த்து விடுவோமே!'

அந்த வீட்டை நோக்கி விரைந்து நடந்தான். அவனிடம் இப்போது எள்ளத்தனை பயமும் தலைகாட்டவில்லை. வெறி மயமான ஒரு துணிவு அவன் நெஞ்சில் எஃகு போல் இறுகிக் கனத்தது. தன் கையிலிருந்த டிரங்க் பெட்டியை மாடிப் படிக்கட்டின் ஓரம் வைத்து விட்டு ஓசையின்றி மேலே ஏறிச் சென்றான்.

வெராந்தா இருண்டு கிடந்தது. ஆனால் கூடத்து அறையில் பிரகாசமான விளக்கு எரிந்து கொண்டிருந்தது. இருள் பூசிக் கிடந்த வராந்தாச் சுவரோரம் பதுங்கிப் பதுங்கி முன்னேறினான் சபேசன். அப்படி முன்னேறித் திரைச் சீலை தொங்கிய சன்னல் ஒன்றின் அருகில் போய் நின்று மெல்ல உள்ளே எட்டிப் பார்த்தான்.

வட்டமாகப் போடப்பட்டிருந்த பிரம்பு நாற்காலிகளில் மூன்று பேர் உட்கார்ந்திருந்தனர். ஒருவன் பிமல்குமார் என்னும் போலிப் பெயர் கொண்ட அந்தப் போலி அகதி வாலிபன்; இன்னொருவர் மலையாளிப் பேர் வழி; மூன்றாமவன் ஒரு சீனன். சில தினங்களுக்கு முன் அந்தப் பல் கட்டும் 'கிளினிக்கி'ல் பார்த்த அதே சீனன்தான். அவர்கள் மூவரும் ஒருவரையொருவர் அர்த்த புஷ்டியுடன் பார்த்துப் புன்முறுவல் பூத்துக் கொண்டிருந்தனர்.

உள்ளே, சமையல் அறையில் சந்தியா அழுகையும் ஆத்திரமுமாக இரைந்து பேசிக் கொண்டிருப்பது கேட்டது. அத்துடன், சுரேஷ் சௌத்ரியின் கோபமான பேச்சுக் குரலும் கேட்டது. அவர்களிடையே ஏதோ காரசாரமான சர்ச்சை நடந்து கொண்டிருந்தது. அது வங்க மொழியில் இருந்ததால் சபேசனுக்கு ஒன்றும் புரியவில்லை.

திடீரென்று 'பளீர் பளீ'ரென அறையும் ஓசை; சந்தியா அலறி அழும் ஒலி!

உட்கார்ந்திருந்த போலி அகதி வாலிபன் கோபமாகத் துள்ளியெழுந்து சமையலறைக்குப் போனான். அடிக்கும் சத்தமும், அழுகை ஒலியும் பலப்பட்டன. உம்மென்று உட்கார்ந்திருந்த மலையாளியும் ஏதோ மூக்கால் முனகிக்கொண்டே எழுந்து உள்ளே சென்றார். அவரைப் பின்தொடர்ந்து சீனனும் போனான். சந்தியாவின் அழுகை ஓலம் அதிகமாயிற்று.

உடல் வெடவெடக்க இருட்டில் மறைந்து நின்ற சபேசன், மேலும் சற்று முன்னேறிக் கதவருகில் போய் நின்று உள்ளே எட்டிப் பார்த்தான். அம்மூவரும் உட்கார்ந்திருந்த இடத்தில் போடப்பட்டிருந்த வட்ட மேசை யொன்றின் மேல் கரன்சி நோட்டுக் கட்டுகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அவற்றின் பக்கத்தில் சில கடிதங்கள். அவை உருதுவிலும், சீன மொழியிலும் எழுதப்பட்டிருந்தன. இன்னொருபுறம் அரைகுறையான வரை படம் ஒன்று கிடந்தது. அதன் மேல் சிறிய இரும்புப் பெட்டிபோல் பளபளப்பான ஏதோ ஒரு கருவி வைக்கப்பட்டிருந்தது.

'இவை என்ன? இவையெல்லாம் என்ன?' — சபேசனுக்குச் சந்தேகமறத் தெரிந்துவிட்டன, அவைகள் அனைத்தும் அவர்களது தேசத் துரோக நடவடிக்கைகளுக்குரிய சாதனங்கள் என்று!

அந்தக் கணமே அவன் நெஞ்சு பற்றி எரிவதுபோல் இருந்தது. அதில் அடக்க முடியாததோர் ஆவேசக் கனல் மூண்டு அவனை வானுக்கும் பூமிக்குமாய் உந்தித்

சிறப்பான சிகையலங்காரத்துக்கு ஆதாரமாக அமைகிறது

# லாய்ஜூ

## ஹேர் க்ரீம்

கவர்ச்சியான கேசத்துடன் காண்பவர் அனைவரும் விரும்பி வாங்குவது லாய்ஜூ. குளித்ததும் சீவுமுன் சிறிதளவு லாய்ஜூ உபயோகித்தால் போதும், உங்கள் முடி மென்மை பெற்றுவிடுகிறது; படிய வாரிவிட முடிவதுடன் பளபளப்போடும் பொலிகிறது — இந்த மினுமினுப்பு நாள் முழுதும் நீடிக்கவும் செய்கிறது.




இது ஒரு கல்கத்தா கெமிகல் தயாரிப்பு

CTC-5 TM.

முக்கியமான மாட்சில் ஆட வேண்டும் — ராஜுவுக்கோ முதுகுவலி













ஒரே ஒரு

# ஸாரிடான்

'ரோஷ்'



## வலியைப் போக்குகிறது ஆசுவாசப் படுத்துகிறது புத்துணர்ச்சி யூட்டுகிறது

உலகப் புகழ் பெற்ற வலி நிவாரணியான ஸாரிடான் விரைவில், அபாயமின்றி, நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. தலைவலி, பல்வலி, உடல்வலி, சாதாரண உடற் கோளாறுகள், இவற்றிலிருந்து நிவாரணம் பெற ஸாரிடான் சாப்பிடுங்கள். ஒரு வில்லை முழு டோஸ்; குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை கொடுக்கலாம்.




ஸாரிடான் ஒரே வில்லை போதும்

'ரோஷ்' தயாரிப்பு

சோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் : வால்டாஸ் லிமிடெட்



''ரெண்டு கடிதம் கொடுத்திருக்கிறீர்களே, என்ன சமாசாரம்?''
''ஒன்று - வேலைக்காக நான் எழுதிய அப்ளிகேஷன். மற்றொன்று எனக்காக மூன்று மாதத்திற்கு மெடிக்கல் லீவு அப்ளிகேஷன் லெட்டர்!''

னாக்கிப் புரட்டுவதுபோலவும் இருந்தது. சிந்திக்கும் ஆற்றலை இழந்து வெறிபிடித்த நிலையிலான அவன் சடாரெனப் பாய்ந்து போய் மேசையின்மீதிருந்த கடிதங்களையும், வரை படத்தையும், அந்த விசித்திரக் கருவியையும் அவசரமாக வாரி எடுத்துத் தன் நெஞ்சோடு அணைத்துக் கொண்டு அங்கிருந்து வெளியே செல்லக் காலெடுத்த சமயம், உள்ளே சென்றிருந்த அம்மூவரும் கூடத்து அறைக்கு வந்தனர்.

'காச், மூச்' என்ற சப்தம். அவர்கள்தாம் அப்படிப் பல மொழிகளில் கூவினர். சபேசன் தடதடவெனப் படிகளில் இறங்கிக் கண்மண் தெரியாமல் ஓடினான். தபாலாபீஸ் வரையில் அவன் ஓடி வந்தும் விட்டான்.

'டுமீல்! டுமீல்!' — ரிவால்வரின் வேட்டுச் சப்தம்.

''ஹா! அம்மா!'' என்று அலறிக்கொண்டே வெறிச்சோடிக் கிடந்த தார்ச் சாலையில் சுருண்டு விழுந்தான் சபேசன். அந்த வேட்டுச் சப்தமும் அலறல் ஒலியும் கேட்டு, நடைபாதைகளில் படுத்துக்கொண்டிருந்த மக்கள் எழுந்து ஓடி வந்தனர். சற்றைக்கெல்லாம் அங்கு ஒரு பெரிய கூட்டமே கூடிவிட்டது.

அன்றிரவுக்குப் படுக்க இடம் தேடிக் கொண்டு உல்லாசமாகச் சிகரெட் குடித்தவாறு அவ்வழியே வந்து கொண்டிருந்த நச்சி இந்தக் கூட்டத்தைக் கண்டு, ''இன்னா இது, கும்பல்?'' என்று அருகில் நெருங்கினான். பிறகு ஜனக் கூட்டத்தை விலக்கிக்கொண்டு உள்ளே பாய்ந்தான். இரத்த வெள்ளத்தில் மிதந்து கிடந்த சபேசனைப் பார்த்தான். அவனால் அவன் கண்களையே நம்ப முடியவில்லை.

''பிரதர்! நீயா பிரதர்?'' — இரைந்து கூவிக்கொண்டே தரையில் சாய்ந்துவிட்ட நச்சி, அப்படியே உருண்டு கொண்டு போய் எழுந்து உட்கார்ந்து, சபேசனைத் தூக்கித் தன் மடிமேல் கிடத்திக்கொண்டு அவனைப் பரபரப்புடன் பார்த்தான். சபேசனின் விலாவிலும், இடது புறத்திலும் இரண்டு குண்டுகள் துளைத்து விட்டிருக்க, அவற்றிலிருந்து செங்குருதி பொங்கி வழிந்துகொண்டிருந்தது.

''பிரதர்! இது இன்னா, பிரதர்?''—அலறி அழுதான் நச்சி.

சபேசன் மெல்லக் கண் திறந்து அவனைப் பார்த்து அழகாகப் புன்னகை பூத்தான். ''என்ன, அண்ணே! எது வந்தாலும் அழக்கூடாதுன்னு எனக்கு அடிக்கடி புத்தி சொல்லி வந்த நீயா இப்படி அழறே? அழாதே அண்ணே! ஒண்ணுமில்லே; எனக்கு ஒண்ணுமே இல்லே!''

பத்து மணி, முப்பத்து ஐந்து நிமிடங்கள். எங்கோ இருந்த ஒரு டீக்கடையிலே உரத்துத் திருகிவிடப் பட்டிருந்த ரேடியோவில், ஆங்கிலச் செய்தி அறிக்கைமுடிந்தது. தேசிய கீதம் ஒலிக்க ஆரம்பித்தது.

நச்சியின் மடியில் மயங்கிக் கிடந்த சபேசன் அந்த இனிய கீதத்தை எப்படியோ செவிமடுத்து விட்டான். அடுத்த கணம் அவன் முகம், எல்லை கடந்த மகிழ்ச்சியால் எழில் வீசி மலர்ந்தது. ரேடியோவில் வாத்தியக் கருவிகளைக் கொண்டே அட்சர சுத்தமாக இசைக்கப் பட்ட தேசிய கீதத்தின் ஒவ்வொரு வரியையும் — அதன் தமிழ் வடிவில் — கூடவே மெல்லப் பாடினான்:

**ஜன கண மன அதி நாயக ஜயஹே,**
**பாரத பாக்ய விதாதா...**

''இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற நீதான் மக்கள் எல்லோருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்.''

**பஞ்சாப சிந்து குஜராத மராட்டா**
**திராவிட உத்கல வங்கா...**

''உன் திருநாமம் பஞ்சாபையும், சிந்துவையும், குஜராத்தையும், மகாராஷ்டிரத்தையும், திராவிடத்தையும், ஒரிஸ்ஸாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.''

**விந்திய ஹிமாசல யமுனா கங்கா**
**உச்சல ஜலதி தரங்கா**
**தவ சுப நாமே ஜாகே,**
**தவ சுப ஆசிஷ மாகே,**
**காஹே தவ ஜய காதா...**

''அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது; இந்தியக் கடல் அலைகளால் துதிக்கப்படுகிறது. அவை உன் ஆசியை வேண்டுகின்றன; உன் புகழைப் பாடுகின்றன.''

**ஜன கண மங்கள தாயக ஜயஹே,**
**பாரத பாக்ய விதாதா...**

''இந்நேரமாச்சு ... அக்காளின்னு நினைக்கிற உனக்கு—''

ஜயஹே! ஜயஹே! ஜயஹே!
ஜய ஜய ஜய ஜயஹே!...

''வெற்றி! வெற்றி! வெற்றி!''

சபேசனின் தலை மெல்லச் சாய்ந்தது. அவனது அழகிய கண்கள், இமை இதழ்களுக்குள் ஒடுங்கின.

* * *

மாதம் ஒன்று ஓடி மறைந்தது.

''ஏ, பாய்!''

''எஸ், மேடம்'' என்றவாறு வந்தான் ரோஸியின் பட்லர்.

''தெரு மேலே போய், த்ரீ பைவ் கேம்ஸ், த்ரீ பைவ் சேர்க்களே வாங்கியா மேன்!'' என்று கம்பீரமாக உத்தரவிட்ட கன்னியம்மாள் வெகு அமர்த்தலாகத் திரும்பி, ''இன்னு, பிஸி! ஸ்டேசனுக்குப் புறப்படலே? டைம் ஆவுதே!'' என்றாள்.

ஆழ்ந்த சிந்தனையில் லயித்தவளாய்ச் சோபாவிலே பொம்மை போல் உட்கார்ந்திருந்த ரோஸி, ''புறப்பட வேண்டியதுதான், மம்மி!'' என்று எழுந்தாள்.

இருவரும் வெளியே வந்தனர். தெருவில் டாக்ஸி தயாராக நின்றிருந்தது. அவர்கள் ஏறி அமர்ந்ததும் 'சென்ட்ரல் ஸ்டேஷனை நோக்கி அது பறந்தது.

பகல் பன்னிரண்டு மணி.

டெல்லி கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ் புறப்படத் தயாராக நின்றுகொண்டிருந்தது. ராணுவ வீரர்களுக்கெனத் தனியாக ஒதுக்கப்பட்டிருந்த ஒரு பெட்டியின் அருகில் போய் நின்றனர் கன்னியம்மாளும், ரோஸியும்.

அந்தப் பெட்டியின் வாசல் கம்பியைப் பிடித்த வண்ணம் ராணுவ உடையில் கம்பீரமாக நின்றிருந்தான் நச்சி!

அவர்கள் மூவரும் ஒருவரையொருவர் மௌனமாகப் பார்த்துக்கொண்டனர்.

கன்னியம்மாள் தன் மகனின் அருகில் நெருங்கி, ''ஏன்டா, பையா! அந்தப் பொண்ணு வேத கொமாரியைப் பெங்களூருக்கு அழைத்துப் போய் அவளோட அம்மாக்காரிகிட்ட விட்டுப்பிட்டு வந்தியே, அவன் கடைசியா இன்னதான் சொன்னான்?'' என்று கேட்டாள்.

''ஒன்னும் சொல்லலேம்மா! நான்தான் கேட்டேன், 'இனி இன்னா பண்ணப் போறே'ன்னு. அதுக்குத் தங்கச்சி சொல்லிச்சு: 'ஒரு வீரனின் மகளாகப் பிறந்த நான், ஒரு மாவீரனைக் காதலித்தேன். அது ஒன்றே போதும்; நான் பெண் ஜன்மம் எடுத்ததன் பயன் அதோடு நிறைவாகி விட்டது' — அப்படீன்னு!''

இவ்வளவு நேரம் மௌனமாக நின்ற ரோஸி மெல்ல நச்சியின் அருகில் நெருங்கி, ''மை டியர், டார்லிங்! இப்ப உன்னே இந்தக் கோலத்திலே பார்க்க நான் எவ்வளவு சந்தோஷப்படறேன் தெரியுமா?'' என்றாள் கண்களில் மகிழ்ச்சிக் கண்ணீர் ததும்ப.

''ஆமாம், பிஸி! நானும்தான் ரொம்பக் குஷியா யிருக்கிறேன். ஏன் தெரியுமா? என்னோட அன்பான தோஸ்து சபேசன் இந்தத் தேசத்தை ரொம்ப ரொம்ப ஆவேசமாக நேசிச்சான். அதுக்காகவே தன் உயிரையும் தியாகம் பண்ணிப்பிட்டான். அவனே நான் ரொம்ப ரொம்ப நேசிச்சேன். அதனால் அவனோட ஆத்மா சாந்தியடைய என்னேயும் இந்தத் தேசத்துக்கே அர்ப்பணிச்சுட்டேன்.''— நச்சியின் குரல் கம்மிக் கரகரத்தது.

ரயில் வண்டி நகரத் தொடங்கவே, நச்சி நார்க்கிளியன் தன் கையை உயர்த்தி, ''டாட்டா, பிஸி! டாட்டா, மம்மோவ்!'' என்று கூவினான்.

''ச்சீரியோ! பை பை!'' என்று உற்சாகமாகக் கைக்குட்டையைத் தூக்கி ஆட்டினாள் ரோஸ்லின்.

''அட, என் ராசா! இந்தக் காக்கித் தொப்பி, காக்கிச் சட்டை, காக்கிக் கால் சராய் எல்லாம் போட்டுக்கினு இருக்கிறதைப் பார்த்தா, அப்படியே அவன் அப்பன் அந்தக் காப்பிரி தொரையே வந்து நிக்கிறாப்பிலே இருக்குது!'' என்று வியந்து மகிழ்ந்து சிலையாக நின்றாள் கன்னியம்மாள்.

* * *

அன்று கொடி தினம்.

பெங்களூர் உயர்நிலைப் பள்ளி யொன்றின் பிரார்த்தனைக் கூடம். மாணவிகள் வரிசை வரிசையாய் நிற்கின்றனர்.

அந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியையான சிவகாமி தன் அறையிலிருந்து வெளிப்பட்டு அங்கு வருகிறாள். அவள் பின்னால் ஓர் ஆசிரியைக்குரிய மிடுக்குடன் வேதகுமாரி வருகிறாள். அன்றொரு நாள் சபேசன் அவளுக்கென அளித்த அந்த எளிய நூல் புடவையை அழகாக அணிந்து கொண்டிருக்கிறாள்.

பள்ளிச் சிறுமியொருத்தி, இராணுவ வீரர்களின் குடும்ப நல நிதிக்கான உண்டியலைக் குலுக்கிக்கொண்டு அவர்களிடம் ஓடி வந்து நீட்டுகிறாள்.

வேதாவும், அவளின் தாய் சிவகாமியும் அந்தச் சிறுமியிடமிருந்து கொடிகளைப் பெற்றுத் தம் மார்பில் அணிந்துகொண்டு, உண்டியலில் ஒவ்வோர் ஒற்றை ரூபாய் நாணயத்தைப் போடுகின்றனர். பள்ளி மாணவிகள் தேசிய கீதம் பாடுகின்றனர்:

''ஜன கண மன அதி
நாயக ஜயஹே,
பாரத பாக்ய விதாதா!...''



CIBA




Binaca Baby Powder. Mummy p-l-e-a-s-e. I want to be soft, velvet-smooth and kissable... like baby. CIBA has even added Bradosol, the gentlest antiseptic for baby's skin protection. I want to be protected too, please.

baby powder with a gentle baby-antiseptic

# ரண சிகிச்சையின்றிப் புதுமுறையில் வலிமயமான மூலத்தைச் சுருக்குகிறது. நமைச்சலை நிறுத்துகிறது, வலிதணிக்கிறது

நியூயார்க்— தீவிரப் பிணிகளில் தவிர மற்றபடி ரண சிகிச்சை என்பதே தேவையில்லாமல் மூலத்தைச் சுருக்கி, நமைச்சலை நிறுத்தி, வலி தணிக்கும் அற்புத வல்லமையுள்ள புதுவித மருந்துப் பொருளை முதன்முறையாகக் கண்டுபிடித்துள்ளது விஞ்ஞானம்.

டாக்டர்களின் கண்காணிப்பில் நிகழ்த்தப்பட்ட பரிசோதனைகளே இதற்கு அத்தாட்சி— வலியும் நமைச்சலும் உடனடியாகத் தணிக்கப்பட்டன. இதனுடன் மெல்ல வலியாற்றிய அதேசமயம் உள்ளபடி சுருக்கமே ஏற்பட்டது.

அனைத்திலும் ஆச்சரியம் என்னவெனில், பத்து இருபது ஆண்டுகள் நீடித்திருந்த பிணிகளிலும் இந்த அபிவிருத்தி நிலைபெற்றதுதான்.

உலகப் புகழ்பெற்ற ஆராய்ச்சிக் கழகம் ஒன்றின் கண்டுபிடிப்பாகிய பயோடைன்* என்ற புதிய மருந்துப் பொருளே இதன் இரகசியம். இப் புதிய மருந்துப் பொருள் தற்போது ப்ரிப்பரேஷன் ஹெச் என்ற பெயருடன், களிம்பு வடிவிலே அளிக்கப்படுகிறது. மூலத்தைச் சுருங்க வைப்பதோடன்றி, மலப் பாதைக்கு மழமழப்பூட்டி, மலப்போக்கினை வலி அற்றதாக்குகிறது. ப்ரிப்பரேஷன் ஹெச், 30கி. டியூப்களாக இடுகுழாயுடன், எல்லா உயர்தர மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

மூல நோய் பற்றி விளக்கும் சிறு நூலை (ஆங்கிலம் அல்லது தமிழ்) இலவசமாகப் பெற இன்றே எழுதுக: டிபார்ட்மெண்ட் 38, ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட்., போஸ்ட் பாக்ஸ் 976, பம்பாய் 1 பிஆர்.

*டிரேட் மார்க்

CPHH-2 TAM

# ரூ.10,000/- ஜெயிக்க!

## 144 ரொக்கப் பரிசுகள்

# கால்கேட் பேபி பவுடர் புகைப்படப் போட்டி!




1½ வயதிற்குக்கீழோ அல்லது 1½ முதல் 3 வயது வரையிலோ உள்ள குழந்தை உங்களுக்கு இருக்கிறதா? இந்த இரு பிரிவுகள் எதிலும் உள்ள குழந்தைகளின் புகைப்படங்களை அனுப்பிவைக்கலாம்.

ஒவ்வொரு பிரிவிலும் 72 ரொக்கப் பரிசுகள் வழங்கப்படும்:

ரூ. 1,000 முதல் பரிசு

ரூ. 500 இரண்டாவது பரிசு

மற்றும் ரூ. 50 வீதம் 70 ஆறுதல் பரிசுகள்!

**கலந்துகொள்வது எப்படி:**

மிகவும் சுலபம்! உங்களுக்குத் தேவையானதெல்லாம் இதுதான்

**ஒரு புகைப்படம்** — பொருத்தமான வயதுப்பிரிவில் உள்ள உங்கள் குழந்தையின் புகைப்படம்

**அச்சிட்ட ரசீது** — கால்கேட் பேபி பவுடரின் ஒரு லார்ஜ் அல்லது ஜயன்ட் சைஸ் டப்பாவை வாங்கினதற்கு அத்தாட்சியாக ஒரு அச்சிட்ட ரசீது.

**ஒரு பிரவேசப்பத்திரம்** — நீங்கள் பவுடர் டப்பாவை வாங்கும் கடையிலேயே கிடைக்கிறது.

பரிசு பெற எத்தனை அற்புதமான வாய்ப்புக்கள்!

இப்பொழுதே கலந்து கொள்ளுங்கள்!

முடிவு தேதி: ஜூன் 30, 1966




4

திருமணமாகாத பெண்களுக்கும், சுமங்கலிகளுக்கும் ஒரு விடுதி ஏற்படுத்துவதற்குத் திருவல்லிக்கேணிப் பள்ளியின் அருகிலேயே ஒரு வீடு கிடைத்து விட்டது. இதற்காக நீண்ட நாட்கள் அவர்கள் காத்திருக்க நேரவில்லை. மிகவும் குறுகலான அழுக்கடைந்த ஒரு தெருவில் அந்த வீடு இருந்த போதிலும் கட்டடம் அப்படியொன்றும் மோசமானதாக இல்லை. இடமும் தாராளமாக இருந்தது. மாதம் நூற்றைம்பது ரூபாய் வாடகை. இது அதிகம் தான். சர்க்கார் சலுகை கிடைப்பதற்கு வழியில்லையாகையால், நடுத்தர வகுப்பைச் சேர்ந்த பெற்றோர்கள் சமாளிக்கக் கூடிய அளவில் அங்கு தங்கியிருந்து சாப்பிடும் பெண்களிடம் அதற்கான கட்டணம் வசூலிக்கப்பட வேண்டும். மிகவும் சிக்கனமாக இருக்க வேண்டியது அவசியம். டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டியைத் தலைவியாகவும், சகோதரி சுப்புலக்ஷ்மியைச் செயலாளராகவும் கொண்டிருந்த மாதர் சங்கம் எப்படியாவது இந்த விடுதியை நல்லபடியாக நிர்வகித்துச் சமாளித்து விடலாம் என்ற நம்பிக்கையுடன் இருந்தது.

சர்க்காரிடம் சலுகை பெற்று அவர்களின் பிடியில் இராமல் இருப்பது பலவிதங்களில் அவர்களுக்குச் சந்தோஷமாக இருந்தது. சர்க்கார் உத்தியோகத்தில் இருந்த போதிலும் மிஸஸ் ட்ரைஸ்டேலும், மிஸஸ் பிரேகரும் தனிப்பட்ட முறையில் தங்களால் இயன்ற எல்லா உதவிகளையும் செய்து வருவார்கள். நிர்வாகிகள் தங்கள் கருத்தில் எது நன்மை என்று எண்ணுகிறார்களோ அதைச் செய்யவும், அதிகாரிகளின் குறுக்கீடு இல்லாமல் புதிய புதிய பரிசோதனைகளை நடத்திப் பார்க்கவும் சுதந்திரம் இருக்கும். முதலில் இதில் வெற்றி கண்டால் பிறகு பணம் கொடுக்க முடியாத பெற்றோர்களின் பெண்களுக்கும் உதவி செய்ய வழிகளைக் கண்டு பிடிக்கலாம். இப்போதேகூட விசேஷத் தகுதி பெற்ற ஏழைப் பெண்களுக்குக் கல்வி புகட்டத் தேவைப்படும் பணத்தை எப்படியாவது திரட்டி விடலாம் என்று அவர்கள் திடமாக நம்பினர்.

1921ம் வருடம் ஜூலை மாதம் வீடு குடி புகுவதற்குத் தயாராகி விட்டது. இருபத்தொரு பெண்கள் அதில் வசிக்க ஆரம்பித்தனர். ஐஸ்ஹவுஸிலிருந்து வந்தவர்களைத் தவிர பல புதிய பெண்களும் இருந்தனர். வெளியூர்களிலிருந்து பல குடும்பத்தினர் இந்தத் திட்டத்தைப் பற்றிக் கேள்வியுற்றுத் தங்கள் பெண்களைப் படிக்க வைப்பதற்கு இது அரியதொரு வாய்ப்பு என்று கருதி அனுப்பி வைத்தார்கள். விவரமறியாத வயதில் அவர்களுக்குக் கல்யாணம் செய்து வைக்க வேண்டிய கொடுமையிலிருந்து தப்பவும் இது ஒரு நல்ல வழி என்று கண்டார்கள்.

ஐஸ் ஹவுஸிலிருந்து சிலர் இந்தப் புதிய விடுதிக்கு மாற்றப்பட்ட போதிலும் சீக்கிரமே ஐஸ்ஹவுஸ் மீண்டும் நிரம்பிவிட்டது. முன்பு ஒரு முறை லார்டு செம்ஸ் போர்டிடம் மிஸ் லிஞ்ச் கூறியது போல் சென்னை ராஜதானியில் உள்ள பெரும்பான்மையான குழந்தை விதவைகள் பிராமண குலத்தைச் சேர்ந்தவர்கள்தான். ஆனால் ஐஸ்ஹவுஸுக்கு வந்த எல்லா விதவைகளுமே குழந்தைகளல்லர் என்பதும் உண்மை. உதாரணமாக, அலமேலு என்பவளுக்கு வயது இருபத்து மூன்று. அவளுடைய உறவினர்கள் யாரும் அவளை அழைத்து வரவில்லை. அவள் தானாகவே வந்து சேர்ந்தவள். பெரிய இடமான சரீரம் படைத்தவள். சகோதரியை முதன் முதலாகப் பார்த்தபோது தான் அந்த இல்லத்தில் சேருவதற்காகவே ஐந்நூறு மைல் நடந்து வந்ததாகக் கூறியவள். வந்த புதிதில் அவளுக்கு எழுத்து வாசனையே கிடையாது. ஆனால், தான் கல்வி பயில முடியும் என்று அவள் திடமாக நம்பினாள். அவளுடைய மூன்று குழந்தைகளும் தாத்தா பாட்டியுடன் இருந்தார்கள். அந்தக் குழந்தைகளுக்காகவே தான் கல்வி பயில ஆவலாக இருப்பதாக அவள் கூறினாள். அவர்களைப்

படிக்க வைக்க வேண்டுமென்று ஆசைப்பட்டாள். ஆனால் முதலில் தானே படித்துத் தேறி வேலையில் அமர்ந்து சம்பாதிக்க முடிந்தாலன்றி, குழந்தைகளைப் படிக்க வைக்கப் பணம் ஏது!

சிறுமிகளுக்கிடையில் ஆரம்ப வகுப்பில் உட்கார்ந்து படிப்பதற்கு அவள் சிறிதும் பின்வாங்கவில்லை. சீக்கிரமே அவள் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் சேருவதற்குரிய தகுதியைப் பெற்று விடுவாள் என்பது தெள்ளெனத் தெரிந்தது. நியமங்கள், கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்தப்பட்ட அவளுடைய கட்டுமஸ்தான தேகமும் வசீகரமான சுபாவமும் வெகு விரைவிலேயே தேகப் பயிற்சியிலும் மற்ற விளையாட்டுகளிலும் அவளைத் தலைவியாக்கின. ஹாஸ்டலின் சூழலில் அவள் அழகாக ஒன்றி விட்டாள்.

இதற்கு நேர்மாறாக சரஸ்வதி தேஷ்பாண்டே பதினைந்து வயதே நிரம்பியவளாயிருப்பினும், வந்த புதிதில் மற்றப் பெண்களுடன் ஒன்ற முடியாமல் தவித்தாள்.

நான்காம் தாரமாக ஒரு கிழவனுக்கு வாழ்க்கைப்பட்டவள் அவள்.

அவளுடைய கணவன், தந்தை இருவரும் ஒருவர்பின் ஒருவராக இறந்து விட்டார்கள். சென்னையில் திருவல்லிக்கேணிப் பள்ளியின் அருகில் சில உறவினர்களின் வீட்டில் தாற்காலிகமாகத் தங்கியிருக்க நேர்ந்த போது தினமும் ஹாஸ்டலிலிருந்து பள்ளிக்குப் போய் வரும் இளம் விதவைகளைப் பார்த்த சரஸ்வதி, தானும் அவர்களுடன் சேர ஆவல் கொண்டாள். ஆனால் இந்த எண்ணம் எளிதில் நிறைவேறவில்லை.

ஹாஸ்டலும் நிரம்பி விட்டிருந்தது. மேலும், சரஸ்வதி சர்க்கார் உபகாரச் சம்பளத்தைப் பெறுகிற அளவுக்குக் குறைந்த வயதினளாக இருக்கவில்லை. அவளைச் சகோதரி, அவள் சொந்த ஊருக்கு அருகிலேயே இருந்த கடலூரில் உள்ள சர்க்கார் உயர்நிலை ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் சேருவதற்கு மனுப் போடச் சொன்னாள்.

அதன்படி சரஸ்வதி கடலூருக்குச் சென்று பள்ளியில் சேர்ந்தாள். அவள் கருத்துடன் படித்ததால் அவளுக்கு 'டபிள் பிரமோஷன்' கிடைத்து விட்டது. மேல்வகுப்பில் பெரிய பெண்களுடன் சேர்ந்து படிக்கத் தகுதி பெற்றாள். ஆயினும் அவள் எண்ணமெல்லாம் ஹாஸ்டலில் சேருவது பற்றியே இருந்தது. தன்னை ஹாஸ்டலுக்கு மாற்றி விடும்படி மனுப் போட்டாள். இந்த முறை அங்கு இடம் இருக்கவே, அவளை ஏற்றுக் கொண்டார்கள். இயல்பாகவே அவள் கூச்சம் மிகுந்தவள். திருவல்லிக்கேணிப் பள்ளிக் கூடத்தில் முதல் நாளை எப்படித்தான் ஓட்டினாளோ அது அவளுக்கே தெரியவில்லை. அன்று மாலை ஹாஸ்டலுக்குத் திரும்பியதும், அவளுக்கு அழ வேண்டும் போல் இருந்தது. ஆனால் அதற்கும் வெட்கமாயிருந்தது.

அப்பொழுது பெரிய பெண்களில் ஒருத்தி அங்கு வந்தாள். "கச்சேரிக்காக வீணை சாதகம் செய்வதைக் கேட்க வருகிறாயா? உன்னை நான் எல்லா இடங்களிலும் தேடி விட்டேன். நீ எங்கு இருக்கிறாய் என்பதே யாருக்கும் தெரியவில்லை" என்றாள் அவள்.

இருவரும் ஒன்றாக உள்ளே சென்றனர். தங்களில் ஒருத்தி என்ற முறையில் அவளுடன் எல்லோரும் சர்வ சகஜமாகப் பழகினர்.

இரவுச் சாப்பாட்டுக்காக மணி அடித்த போது அவள் அந்தக் கூட்டத்தினருள் ஒருத்தியாக ஒன்றி விட்டாள்.

அந்த விடுதிக்கு வந்த ஒவ்வொரு பெண்ணும் அதைத் தன் சொந்த வீடாக நினைக்க வேண்டுமென்று சகோதரி விரும்பினாள். இந்தப் பெரிய குடும்பத்தை நடத்தும் அலுவல்களில் ஈடுபடும் போது அவர்கள் முன்பு தாங்கள் அனுபவித்த கஷ்டங்களையெல்லாம் மறந்துவிட முடியும் என்றும் சகோதரி நம்பினாள். புதிதாக வந்தவர்கள் பெரும்பாலோருக்கு இல்லத்தில் குதிர்ந்து கொள்வதில் சிரமம் இருக்கவில்லை.

குறிப்பிட்ட ஒரு சாராரை மட்டும், தான் நடத்தும் விடுதியில் சேர்த்துக் கொள்வதைச் சகோதரி சிறிதும் விரும்பவில்லை. அவர்கள் தேவதாசிகள்.

என்னிடம் பேசிக் கொண்டிருக்கும் போது எப்போதும் உயிர்க் களை ததும்பும் சகோதரியின் முகம் இப்போது ஒரு வினாடி அதிருப்தியினால் உறைந்து காணப்பட்டது. அவர் தொடர்ந்தார்: "அந்தக் காலத்தில் கௌரவமான மனிதர்கள், அதாவது பெயரளவில் கௌரவமானவர்கள் — தேவதாசிப் பெண்களை வைத்துக் கொள்வது சர்வ சாதாரணமாக இருந்தது. தேவதாசிகள் தோன்றிய முறை குற்றமற்றதுதான். பண்டைக் காலத்தில் கண்ணியமான குடும்பங்களில் — மகாராஜாக்கள் போன்ற பெரிய மனிதர்கள் கூட — கடவுளின் சேவைக்காக ஒரு பெண்ணைச் சமர்ப்பிப்பது மரபாக இருந்தது. அந்தப் பெண்கள் கோவில்களிலேயே வசித்து வழிபாட்டில் பங்கு கொள்வார்கள். துரதிருஷ்டவசமாக நாளாவட்டத்தில் கோயில் அர்ச்சகர்கள் இந்தப் பெண்களைத் தங்கள் வசப்படுத்திக் கொண்டு கெடுத்து விட்டார்கள். பிறகு வெளி மனிதர்களும் அவ்வாறே செய்யத் தலைப்பட்டனர். டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி இதையெல்லாம் தடுப்பதற்கு ஒரு மசோதா கொண்டு வர யத்தனித்தாள். கடைசியில் அதில் வெற்றியும் கண்டாள். அது உங்களுக்குத் தெரிந்திருக்குமே? பாவம், இத்தகைய பெண்களுக்குப் பிறந்த குழந்தைகள் அனுதாபத்துக்குரியவர்கள் தான். ஆனால் அவர்களில் சிலருக்கு, தெரிய வேண்டாதது எல்லாம் தெரிந்திருந்தது. அதனால்தான் அவர்கள் திருவல்லிக்கேணி விடுதியில் சேர்ந்து மற்றப் பெண்களுடன் உறவாட அனுமதிக்கப்படக் கூடாது என்று நான் நினைத்தேன்."

சகோதரி பேச்சை நிறுத்தினார்.

பாரத நாட்டில் பெரிய அரசியல் கிளர்ச்சிகள் நடந்து கொண்டிருந்தன. 1921ம் ஆண்டில், இந்திய தேசிய காங்கிரஸ் ஒரு புதிய நடைமுறையைத் தொடங்கியிருந்

குன்றுதோறும் குமரப் பெருமான் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள திவ்விய ஸ்தலங்களுள் சிறப்பு வாய்ந்த ஸ்தலம் சிக்கல். இங்கு எழுந்தருளியுள்ள சிங்கார வேலருக்கு முருகனடியார்களால் 4-2-66 முதல் கோடி அர்ச்சனை தொடங்கப் பெற்று, 10-6-66 அன்று பூர்த்தியாகப் போகிறது. கலியுக வரதனின் திருவருளுக்குப் பாத்திரமாக விரும்புவோர் செயலாளர், ஸ்ரீ சிங்கார வேலன் கோடி அர்ச்சனைக் குழு, சிக்கல், தஞ்சை ஜில்லா என்ற முகவரிக்கு நிதியனுப்பி மேற்படி திவ்விய கைங்கரியத்தில் பங்கு பெற வேண்டுகிறோம்.



சகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 5. ஷண்முகார்ச்சனை ரூ. 35. கால் லட்சம் அர்ச்சனை ரூ. 100
அரை லட்சம் அர்ச்சனை ரூ. 200. லட்சார்ச்சனை ரூ. 400.





காசி டாக்டர் பி. ரங்கசாமி அவர்களின் புதல்வர் டாக்டர் ஆர். சங்கருக்கும் சௌ. விஜயலக்ஷ்மிக்கும் காசியில் மார்ச் மாதம் பத்தாந் தேதி அதிவிமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. மணமகள் செருகளத்தூர் ஸ்ரீ நாகசாமி அய்யர் அவர்களின் புதல்வி. திருமணத்துக்குக் காசியிலுள்ள பிரமுகர்கள் பலரும் வந்திருந்து மணமக்களை ஆசீர்வதித்தனர்.

தது. இதன் விளைவாக ஒரு வருஷ காலத்தில் சுதந்திரம் கிடைத்து விடலாம் என்று மகாத்மா காந்தி கூறினார். இந்தியா முழுவதும் மனிதர்கள் பிரிட்டிஷ் நிறுவனங்களோடு ஒத்துழைக்கக் கூடாதென்றும், விதேசித் துணிகளை உடுக்கக் கூடாதென்றும் சட்ட மன்றங்களை மறியல் செய்ய வேண்டுமென்றும் கோரப்பட்டது. சர்க்கார் பள்ளிகளிலிருந்தும் கல்லூரிகளிலிருந்தும் மாணவர்கள் வெளியேறிவிட வேண்டுமென்று தூண்டப்பட்டார்கள். பலபெற்றோர்கள் திருவல்லிக்கேணிப் பள்ளிக்குத் தங்கள் குழந்தைகளை அனுப்புவதை நிறுத்தி விட்டார்கள். மற்ற எல்லா இடங்களையும் போல் சென்னையிலும் இந்தக் கிளர்ச்சி வேகம் பெற்றது. 1921ம் வருடம் நவம்பர் மாதம் பம்பாய்க்கு வேல்ஸ் கோமகன்* வந்தார். இதையொட்டி முன் கூட்டியே பல காங்கிரஸ் பிரமுகர்களைக் கைதாக்கிச் சிறையில் வைத்திருந்தார்கள்.

ஒவ்வொரு நகரத்துக்கும் கோமகன் வருகிற தினத்தன்று அங்கு அனைவரும் ஹர்த்தால் செய்து, மௌனமாகத் துக்கம் கொண்டாட வேண்டுமென்று காங்கிரஸ் தீர்மானித்தது. ஹர்த்தால் சாத்துவிக எதிர்ப்பாக, அமைதியாக இருக்க வேண்டும் என்ற காந்திஜியின் வேண்டுகோளை பம்பாயில் கோபமுற்ற மக்கட் கூட்டங்கள் புறக்கணித்தன. இதன் விளைவாக நடந்த கலவரம், துப்பாக்கிப் பிரயோகங்களில் சுமார் ஐம்பது பேர்கள் கொல்லப்பட்டார்கள். நானூறு பேர்களுக்கு மேல் காயமடைந்தனர்.

1922ம் ஆண்டு ஜனவரி மாதம் 13-ஆம் தேதி பிரிட்டிஷ் அரச குடும்பத்தைச் சேர்ந்த அந்த விருந்தினர் சென்னைக்கு விஜயம் செய்த போது, அநேகம் பேர்கள் தங்கள் தேசிய உணர்ச்சியை வெளியிட வேண்டும் என்ற விருப்பத்துக்கும் உலகப் பிரக்கியாதி பெற்ற இளைஞரைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலுக்கும் மத்தியில் இருதலைக் கொள்ளி எறும்பாகத் தவித்தனர். நகரத்தில் பல இடங்களில் ஹர்த்தால் நடந்தது. சில பகுதிகளில் ஆர்ப்பாட்டங்கள் ஒரு தீவிர கட்டத்தை அடைந்தன. ஒரு மனிதன் கொல்லப்பட்டான். சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து கவர்னர் மாளிகை வரையில் பாதை நெடுகப் போலீஸார் அணிவகுத்து நின்றனர். அவர்களுக்குப் பின்னால் இளவரசரைப் பார்க்கக் குழுமியவர்கள் பொறுமையாக, ஆயின் சற்று விறைப்பாக நின்றனர். யூனியன் ஜாக் கொடிகள் அரசாங்கக் கட்டடங்களிலிருந்தும், சில இந்தியக் கடைகளிலிருந்தும், இல்லங்களிலிருந்தும் பறந்தன. துணிவுள்ள சிலர் தாங்கள் துக்க நாள் கொண்டாடுவதை அறிவிப்பதற்காகக் கறுப்புக் கொடிகளை வீட்டில் பறக்க விட்டனர்.

ஐன்ஸைவும் பெண்களும் திருவல்லிக்கேணிப் பள்ளியிலிருந்து பல மாணவிகளும் தனிச் சலுகை பெற்றனர். மறு நாள்

* பின்னால் காதலுக்காக அரச பதவியைத் துறந்து டியூக் ஆப் விண்ட்ஸராக மாறிய எட்டாவது எட்வர்டு மன்னர்.



## சத்தம்

பம்பாயிலிருந்து வந்திருந்த எழுத்தாளர் மாயாவிக்கு விருந்து. கி. வா. ஜ., ரா. ஸ்ரீ. ஸ்ரீ., டி. வி. சுவாமிநாதன், மகரம் முதலியோரும் இந்த விருந்தில் கலந்து கொண்டனர்.

நாவிருந்தும் செவி விருந்தும் முடிந்து அனைவரும் கலைய இரவு பத்து மணிக்கு மேலாகி விட்டது.

"இனிமேல் பஸ் கிடைக்காது. இன்றிரவே ஆகாய விமானத்தில் பம்பாய் செல்ல வேண்டும். 'ஆட்டோ' வைத்துக் கொண்டு மீனம்பாக்கம் போகிறேன்" என்றார் மாயாவி.

"இங்கிருந்து மீனம்பாக்கத்துக்கு ஆட்டோவிலா? சத்தம் கடுமையாக இருக்குமே!" என்றார் ஆசிரியர் கி. வா. ஜகந்நாதன்.

"செலவைப் பார்த்தால் முடியுமா?" என்றார் மாயாவி.

"பணம் போனால் போகட்டும்; பூணல் பத்திரம்! பஞ்சு வேண்டுமானால் வைத்துக் கொள்ளுங்கள் காதில்" என்றார் கி. வா. ஜ.

"ஓ! நீங்கள் அந்தச் சத்தத்தைச் சொன்னீர்களா?" என்றார் மாயாவி.

"அது இப்போது தான் உங்களுக்குப் புரிந்ததா?" என்று கி. வா. ஜ. கூறியதும் கூடியிருந்த எல்லோரும் கொல்லென்று சிரித்து விட்டார்கள். — எஸ்லாரி



அவர்கள் கோமகனின் முன்னிலையில் கும்மியும் கோலாட்டமும் ஆடிக் காட்ட விருந்தனர். இன்று அவர்கள் மிஸ் பிரேகர், சுப்புலக்ஷ்மி மற்றும் இதர ஆசிரியைகள் உடனிருக்க மன்றோ சிலைக்கு எதிரே உயர்ந்த 'காலரி'யில் அமர்ந்திருந்தனர். யாவரும் அக்கோமகனின் வெளிறிய தலைமயிரையும், வெளுப்பான, களையான, சற்றே களைப்படைந்த முகத்தையும் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தனர். அந்தக் கோமகன்தான் இந்தியாவை ஆளப் போகும் வருங்காலச் சக்கரவர்த்தி என்று அவர்கள் பள்ளியில் படித்திருந்தார்கள்.

அன்று மாலை மவுண்ட்ரோடு சர்க்கார் மாளிகையில் லார்டு வில்லிங்டனும் அவரது மனைவியாரும் ஒரு வரவேற்பு அளித்தார்கள். விருந்தினர்களில் ஒருத்தியான சகோதரி சுப்புலக்ஷ்மி, கோமகனுக்கு அறிமுகப்படுத்தப்படுவாள் என்றும் அவ்விதம் அவருக்கு அறிமுகமாகப் போகிறவர்களின் பட்டியலில் அவள் பெயரும் இடம் பெற்றிருக்கிறது என்றும் சில நாட்களுக்கு முன்பே சகோதரிக்குச் சொல்லியிருந்தார்கள்.

சற்றுத் தொலைவில் தெருவில் தேசியவாதிகள் கறுப்புக் கொடிகளைக் காட்டி உரக்கக் கூவிக் கொண்டிருக்க, * 'பாங்குவெட்டிங்ஹாலில்' அரச போகமும் ஆடம்பரமும் நிறைந்திருந்தது. தோட்டங்களிலுள்ள சிறு பசிய செடிகள், பூச்செடிகளுக்குப் பின்னால் மறைவான இடத்தில் அமர்ந்து பாண்டுக்காரர்கள் ஆங்கில ஜெர்மானிய இசைகளை எழுப்பிக் கொண்டிருந்தனர். மாலை வேளைக்குரிய உடுப்புக்களுடன் ஆங்கிலேய அரசாங்க அதிகாரிகளும் ராணுவப் போர் வீரர்களின் உடுப்புகளும், மாதுமிகளின் ஆடைகளும் அணிந்த வேறு பலரும் அங்கு குழுமியிருந்தனர். இவர்களுக்கிடையில் இந்திய ராஜகுமாரர்களின் ஜரிகையுடன் கூடிய பல நிறத் தலைப்பாகைகள் எடுப்பாகத் தெரிந்தன. ஐரோப்பியப் பெண்மணிகளின் கவுன்கள் இலேசான நிறங்களில் பளபளப்பான பட்டினாலும் சாட்டினாலும் உருவாயிருந்தன. அவர்களுடைய வெள்ளை நிறத்தை அவை மேலும் வெளிச்சம் காட்டின. இந்தியப் பெண்மணிகள் உயர்ந்த காஞ்சீபுரம் அல்லது காசிப் பட்டில் சிவப்பு, பச்சை, ஆரஞ்சு அல்லது தங்க நிறப் புடவைகள் உடுத்தியிருந்தனர். அவர்கள் அணிந்திருந்த காதணிகளும், மூக்குத்திகளும் விளக்கொளியில் நீரில் பட்ட சூரிய கிரணங்களைப் போல் பளிச்சிட்டன.

இன்னும் தன்னுடைய மங்கைப் பருவத்தின் இளமை மாறாத சுப்புலக்ஷ்மி மிகவும் எழிலுடன் காட்சியளித்தாள். அவள் மேனி பொன்னிறமாகத் திகழ்ந்தது. அவளது கருங்கூந்தல் நன்றாக எண்ணெய் தடவி வாரப்பட்டு, அழகாகப் பெரிதாக அள்ளி முடியப்பட்டிருந்தது. ஊதாதான் அவளுக்கு மிகவும் பிடித்த நிறம். கருத்த ஊதா நிறத்தில் அகல ஜரிகைக் கரையுடன் அவள் புடவை உடுத்தியிருந்தாள். அவள் கொஞ்சமும் கலவரப்படவில்லை. அங்குள்ள காட்சியை ரசித்தவாறு மிஸ் பிரேகரின் பக்கத்தில் அவள் அமைதியாக நின்று கொண்டிருந்தாள். அங்குள்ள ஆடவர்களும் சில பெண்மணிகளும் கோமகனுக்கு அறிமுகப்படுத்தப்பட்ட போது அவள் உன்னிப்பாகக் கவனித்தாள். அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் பெயர் படிக்கப்பட்டபொழுது முன்னேறி வந்து, அவர் நீட்டிய கையைப் பற்றிக் குலுக்கினார்கள். பிறகு ஒவ்வொருவரும், பின்னால் நகர்ந்துகொண்டு, அடுத்து வருகிறவர்களுக்கு இடம் தந்தனர். அவர்களில் சிலர் அவரிடம் ஓரிரண்டு வார்த்தைகளைப் பேசினார்கள்.

கடைசியில் சுப்புலக்ஷ்மியின் பெயர் அறிவிக்கப்பட்டது.

கோமகன் வலக்கையை நீட்டியவாறு ஓரடி முன்னால் வந்தார். சுப்புலக்ஷ்மி அவர் கரத்தைப் பற்றவில்லை. அதற்குப் பதிலாக ஆழ்ந்த மரியாதையுடன் குனிந்து, இரு கைகளையும் குவித்துத் தன் நெற்றிக்கு நேராகச் செங்குத்தாகக் கொணர்ந்தாள். (தொடரும்)

* இன்றைய ராஜாஜி ஹால்.

## சினிமா பார்க்கவா இந்தச் செலவு?

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் மொத்தம் 4000 மாணவர்கள் கல்வி பயின்று வருகின்றனர். இவர்களுள் 60 சத விகிதத்தினர் விடுதிகளில் தங்கிப் படிப்போராவர். இவ்விடுதி மாணவர்கள் செய்யும் செலவுகள் பற்றி அப்பல்கலைக் கழகத்தின் 'திட்டப் பொது மன்றம்' (Planning Forum) நடத்திய ஒரு சர்வேயிலிருந்து பின்வரும் சுவையான தகவல்கள் கிடைத்துள்ளன.

| | |
|---|---|
| நடப்புக் கல்வி ஆண்டில் அவர்கள் செலவு செய்துள்ள தொகை: | ரூ. 1,20,000 |
| இதில் சினிமா பார்த்ததற்கான செலவு: | ரூ. 60,000 |
| சஞ்சிகைகள் — பத்திரிகைகளுக்கு | ரூ. 36,000 |
| சவரத்துக்கு | ரூ. 18,000 |
| சிகரெட்டுக்கு | ரூ. 15,000 |

சராசரியாகக் கணக்கிட்டதில் கீழ்க்கண்ட சதவிகிதத்தில் செலவு செய்துள்ளனர்:

| | |
|---|---|
| சிற்றுண்டி: | 18.9 சதம் |
| புத்தகங்கள்: | 12.5 சதம் |
| சினிமா: | 10.3 சதம் |
| சலவை: | 10.2 சதம் |
| பிரயாணம்: | 9.2 சதம் |
| தர்மம், கோவில் செலவு: | 1.0 சதம் |

— தகவல்: க. வெங்கடேசன் ஆதாரம்: 'ஹிந்து' பத்திரிகை

# லாபோனி ஸ்னோ

## முகத்தில் பனியின் மென்மை மிளிரச்செய்கிறது

லாபோனி ஸ்னோ உங்கள் முக அலங்காரத்தைப் புத்துணர்வுடன் துவங்கவைக்கிறது. அழகூட்ட ஆரம்பிக்குமுன் இதில் சொற்ப அளவைப் பூசுங்கள், போதும்; உங்கள் ஒப்பனை எவ்வளவு சுலப மாகப் பொலிகிறது என்பதை கண்டு நீங்கள் ஆச்சரியப்படுவது நிச்சயம். லாபோனி ஸ்னோ ஈரப்பசையையும் அளிக்கக்கூடியது என்பதை மறந்துவிடாதீர்கள்!




இது கல்கத்தா கெமிகல் தயாரிப்பு

CTC-4 TAM

# நினைவோட்டம்

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்



முசாபரி பங்களாவுக்குள் கார் நுழையும் போது ஒரு முறை மணிக்கட்டைப் பார்த்துக் கொண்டாள் மாலதி. மணி ஆறு. அன்று இரவு அங்கே தங்கல். உதவி கலெக்டருக்காக அறை பதிவாகி இருந்தது. கார் நின்றதும் பங்களா காவற்காரன் கதவைத் திறந்து விட்டு விட்டுப் பணிவாக ஒதுங்கினான்.

இறங்கி அவள் படியேறுமுன் அறை வாசல் பெஞ்சியில் உட்கார்ந்திருந்த உத்தியோகஸ்தர்கள் எழுந்து நின்று கொண்டார்கள். அவள் பார்வை வீச்சில் அவரவர்கள் வலக்கை மரியாதையாக எழுந்து அடங்கிற்று. மாலதி தலைப்பைச் சற்று இழுத்துக் கழுத்தைச் சுற்றிவிட்டுக் கொண்டு கைகூப்பியபடி உள்ளே போய் விட்டாள்.

அறை சுத்தமாக இருந்தது. பெரிய மேஜை. உட்கார ஒருபுறம் பெரிய நாற்காலி. எதிர்ப்புறம் இரண்டொன்று. சற்று ஒதுங்கினாற்போல். பக்கத்து அறையில் கண்ணாடியும், சாப்பாட்டு மேஜையும், கைகழுவும் தொட்டியும் வாசல் திரையின் நலுங்கலில் விட்டு விட்டுத் தெரிந்தன.

காவற்காரன் மனோரஞ்சிதம் ஒன்றை மேஜையின் மேல் வைத்திருந்தான். அதன் மென் மணம் அறை முழுதும் கமழ்ந்தது. கைப் பையை மேஜையின் மேல் வைத்துவிட்டு நாற்காலியில் உட்கார்ந்தாள் மாலதி. காத்திருந்தவர்கள் ஒவ்வொருவராக வந்து பேசி விட்டுப் போக ஆரம்பித்தார்கள்.

அரைமணி நேர ஊர்வலம்.

எல்லோரும் போனதும், மாலதி ஜன்னல் ஓரமாகப் போய் நின்று கொண்டாள். இருள் இறங்கும் வேளை. செதில் செதிலாய் மின்னிய தங்க மேகத் துணுக்குகள். கரும் இலைகளைத் தாவினாற்போலத் தென்னையின் பின்னிருந்து ஒரு பட்சிக் கூட்டம் பறந்தது.

தோப்புகளுக்கு அப்பால் ஸ்டேஷனை நோக்கி, இறங்கிய கருநியில் தாளமிட்டுக் கொண்டு வரும் ரயிலின் சத்தம். மரங்களின் மேல் கரும் புகை வளையங்கள் எழும்பின.

கனைக்கும் சத்தம் கேட்டது. திரும்பினாள்.

அறை விளக்கைப் போட்டு விட்டு 'காம்ப் ளொர்க்' பணிவாக நின்றார்.

''நீங்களும் கூடப் போய் விட்டுக் காலையில் என்னைச் சந்தித்தால் போதும்.'' ஏதோ சொல்லத் தயங்கியவராய் அவர் பேசாமல் நின்றார்.

''என்ன விஷயம்?''

''இந்த யூனியன் மானேஜர் பற்றிய புகார்க் கடிதத்தில் இன்று விசாரணை செய்வதாக எழுதி யிருந்தீர்கள். 'பைலை'க் கொண்டு வந்திருக்கிறேன். நாளைக் காலையில் தனியாய்க் கூப்பிட்டு விசாரிக்கச் சௌகரியப் படுமோ, என்னவோ ?''

அவளுக்கு அப்போது எந்த வேலையையும் செய்ய விருப்பமில்லை. ஜன்னல் அருகே மௌனமாய் உட்கார்ந்து சிந்திப்பது ஒன்று தான் அவளுக்குப் பிடித்தது. சற்று நேரம் போனதும் இலேசாய் உணவருந்தி விட்டுக் கையில் புத்தகத்தோடு படுத்துக் கொண்டு விடுவாள். தூக்கம் வரும் வரை படிப்பு.

அந்த நேரத்தில் வேலையா ? அதுவும் புகார் விசாரணையா?

பதில் சொல்லவும் மனமில்லாது நின்றாள். அவள் நாட்டம் தூரமாகி, தென்னை இலைகளின் அசைவில் பதிந்தாற்போல் நிலைத்தது. அப்புறம் நேரம் இராது. வேறு வழியில்லை.

''சரி, வரச் சொல்லியனுப்புங்கள்.''

''அவர் வந்து நின்று கொண்டிருக்கிறார்.''

''ஐந்து நிமிஷம்—'' என்று மாலதி பக்கத்து அறைக்குப் போனாள். மெல்லிய துண்டை எடுத்துக் கழுத்தைச் சுற்றிக் கட்டிக் கொண்டு, முகம் கழுவும் தொட்டி

பின் கண்ணாடியில் பார்த்தாள். நன்னீரை முகத்தில் தெளித்துக் கழுவிக் கொண்டாள். இருமுறை சோப்பிட்டுக் கழுவியதில் பிரயாணத்தில் முகத்தில் படிந்த அழுக்கு கலைந்து ஒரு தெளிவு தெரிந்தது. துண்டை எடுத்துப் பக்குவமாக ஒற்றிக் கொண்டாள்.

பின் விசிறியைச் சுழல விட்டு விட்டு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். மேஜை மேலிருந்த மனோரஞ்சிதத்தை விரல்களில் எடுத்துத் திருகினாள். மெத்து மெத்தென்ற அதன் மென்மையான வாசம். வாய் திறப்பது போல் அது மொட்டவிழ்ந்தது.

'பைலை'க் கொண்டு வந்து விட்டுச் சற்றுப் பின் நகர்ந்தார் 'காம்ப் க்ளார்க்'. அட்டையின் நாடாவைப் பிரித்துக் கொண்டே, முகத்தில் கடுகடுப்பை வரவழைத்துக் கொண்டாள். பார்வை மேலே வைத்திருந்த குறிப்புகளில் வரி வரியாக நழுவி ஓடியது.

"வரச் சொல்லுங்கள்" என்று நிமிராமலே சொன்னாள். சிறிது நேரமாகவே வாசல் அருகே உள்ளே வந்து நின்று கொண்டிருந்த உருவத்தின் நிழலாட்டம், பார்வையின் பக்கவாட்டில் அசைவு காட்டிற்று.

அவள் பார்வை நிமிர்ந்ததும், அவன் கை மரியாதையாக உயர்ந்தது. அசைவற்று நின்ற அவனைப் பார்த்ததும், ஓடும் பாம்பைக் காலால் அழுத்தி விட்டதைப் போல், ஒரு சில்லிப்பு நெஞ்சில் இறங்கிற்று. உணர்ச்சிகள் செறிந்து அந்தரத்தில் நின்றன. அவள் மௌன வியப்புக்குப் பதிலாக அவன் தலை குனிந்தது.

அவள் பார்வை அடங்கவில்லை. ஆனால் / பேசவும் முடியவில்லை. ஒரு கணம் அந்தப் பிரமிப்பு அவள் சக்தியையும் மீறி அவளைக் காட்டிக் கொடுத்து விட்டது; அயர்ந்து அமர வைத்துவிட்டது. ஆனால் ஒரு கணந்தான்; சமாளித்துக் கொண்டாள்.

"நீங்கதான் யூனியன் மானேஜரா?"

"எஸ், மாடம்."

அவள் குரலைக் கனைத்துச் சரிப்படுத்திக் கொண்டாள். விசாரணை தொடங்கிற்று. 'காம்ப் க்ளார்க்' பக்கத்தில் நின்று குறிப்பெடுத்துக் கொள்ள ஆரம்பித்தார். அவன் முகத்தில் அசைவில்லை. ஆனாலும் குரல் நடுநடுவில் உணர்ச்சி வசப்பட்டு இளகுவது அவளுக்குத் தெரிந்தது. அவன் குரல் தடுமாறிற்று. இருட்டில் நடப்பவனைப் போன்ற தயக்கம்.

ஒரு குரூரமான மகிழ்ச்சி அவளை ஆட்கொண்டது. அவளைத் தவிக்கவிட்ட மனிதர் இப்போது தவித்துக் கொண்டிருக்கிறார். வாழ்க்கையில் அவளுக்கு முடிவு தெரிவிக்கத் தயங்கி, அவளை நிறுத்தி விட்டவர். இப்போது அவள் முடிவுக்காகத் தயங்கிக் காத்து நின்று கொண்டிருக்கிறார். வாழ்க்கையில் இரண்டாவது தடவையாக அவருக்கு அந்தச் சங்கடம். இதற்கு அவர் உணர்ந்து வருந்துவது அவளுக்குத் தெரிகிறது. ஆனால் முதல் முறை நடந்தது?

கட்டவிழ்ந்தோடும் நினைவுகளை அடக்கி, வார்த்தைகளைச் சிதற விடாமல் பேசுவது சிரமமாகத்தான் இருந்தது. எண்ணங்களில் கலந்து பழகிப் போய் விட்ட அந்த முகத்தை, அறிமுகமே இல்லாத ஒன்றாகக் கற்பனை செய்து கொண்டு உயிரற்ற பேச்சுக்களைப் பேசுவது எளிதாக இல்லை. ஆனாலும் விட்டுக் கொடுக்க முடியாத உத்தியோக தோரணை. அரை மணி நேரம் ஒரு சோதனை.

அவள் பதில் கடைசியாக அழுத்தமாய் விழுந்தது. "நீர் போகலாம். அவசியமிருந்தால் காலையில் உங்களைக் கூப்பிட்டு அனுப்புகிறேன்."

"தாங்க்ஸ். குட்நைட் மாடம்."

அவள் பதிலுக்கு அவ்விதமாய்ச் சொல்ல வில்லை. தலையசைப்புக்



**தான்! அது அவனுடைய பதவிக்கு உரிய அம்சமாகும்.**

அவனை அனுப்பிவிட்டுப் பக்கத்து அறைக்குப் போகுமுன், ஜன்னல் திரையை விலக்கி, பங்களாவின் கேட்டை நோக்கித் தளர்ந்த நடையுடன் செல்லும் உருவத்தைக் கவனித்தாள். கேட்டை மூடுமுன் ஒரு கணம் வெளிச்சம் தெரியும் அந்த அறையையே உற்றுக் கவனித்துவிட்டு, அவன் போய் விட்டான். அவன் உருவம் மறையும் வரை மறைந்த பிறகும், அவன் சென்ற திக்கையே பார்த்திருந்து விட்டு, ஒரு பெருமூச்சுடன் அவள் ஜன்னலிலிருந்து திரும்பினாள்.

சாப்பிடப் பிடிக்காமல், விளக்கை அணைத்து விட்டுப் படுத்துக் கொண்டாள். தலை மாட்டில் பாம்பு வளைவாய் உயர்ந்த விளக்கு. அதன் ஒளிப் பொழிவிலே, மார்பில் நிற்க வைத்துப் பிடித்த புத்தகத்தின் மேல் அட்டை மின்னியது. கொட்டை எழுத்தில் எழுதிய பெயர்—மாலதி, ஐ. ஏ. எஸ்.

புத்தகத்தை மார்பின்மேல் படிய வைத்துக் கொண்டாள். அட்டையின் வழ வழப்பை மிருதுவாய் உணரும் விரல்கள். பழைமையின் நினைவின் அதிர்ப்புகை உள்ளமெலாம் புகுந்து படர்ந்தது.

இதே போலப் புத்தகத்தை மார்பில் சாய்த்துக் கொண்டு, இரவின் ஆழ்ந்த நேரங்களில் அவள் படித்துக் கொண்டிருப்பதுண்டு. அவள் பள்ளிக்கூடப் பெண். வீட்டு வேலைகளை முடித்துக் கொண்டு, பாடங்களைப் படிக்க அந்த நேரந்தான் கிடைக்கும். சந்தேகம் வரும் இடங்களைப் பென்சிலால் பக்க ஓரத்தில் குறித்துக் கொள்வாள். அவைகளைக் காலையில் அண்ணன் தூங்கி எழுந்ததும் கேட்டுக் கொள்வாள். அவனுக்குத் தெரியாவிட்டால் வீட்டின் முன் அறையில் குடியிருந்த கோபால் சொல்லிக் கொடுப்பான்.

அவர்கள் வீட்டில் சாப்பிட்டுக் கொண்டு அறையிலும் குடியிருந்தான் கோபால். மேற்படிப்புக்காகக் கல்லூரியில் சேர்ந்திருந்தான். ஒரு வகையில் தூரத்து உறவும்கூட.

வீட்டில் அவளும் அண்ணன் ரகுவும்தான். பெற்றவர்களின் முகத்தைப் பார்த்த நினைவும்கூட இல்லை. ரகு மட்டுமே அவளுக்குத் தந்தையும் தாயும். மன்னிகூட இன்னும் வீட்டில் காலெடுத்து வைக்கவில்லை.

கோபால் வீட்டில் இருந்தது மட்டும் அல்ல; குடும்பத்தில் ஒருவனாய்ப் பழகினான். அவன் பேச்சில், நடந்து கொள்ளும் விதத்தில், பழகுவதில், ஒரு தனிமையான நயம் இருக்கும். அவள் அக்கறையாய்ச் செய்யும் பணிவிடைகளைத் தன்னடக்கமாய் ஒரு மறுப்போடு, மரியாதை வார்த்தையோடு ஏற்றுக் கொள்வான் அவன்.

அவள் கல்லூரியில் சேர்ந்து விட்டாள். அவனுக்குக் கடைசி வருடப் படிப்பு. அந்த மும்முரத்திலும் அவளுக்கு அவ்வப்போது சொல்லிக் கொடுப்பது நிற்கவில்லை. அவன் சொல்லு முன்னால் அவள் சிந்தையில் பிடித்துக் கொண்டு விடுவாள்.

"மேலே எதற்குப் படிக்கப் போகிறாய் மாலதி?" என்று ரகுவைக் கேட்பான் அவன்.

"பி. டி. எங்கேயாவது வாத்தியார் வேலை கிடைக்குமே?"

"அவள் ஐ. ஏ. எஸ். பாஸ் பண்ணப் போகிறாள், பாரேன்." அவள் அறிவின் திறத்தை அவன் மெச்சியது அது முதல் தடவையல்ல. எத்தனையோ தடவைகள் சொல்லியிருக்கிறான். அந்தக் குரலும் பேச்சும் அவளுக்கு ரம்மியம் நிறைந்த கவிதை கேட்பது போன்ற உணர்வை உண்டாக்கும்.

முற்றத்தில் கவிந்த இரவின் கீழே கம்பளியை இழுத்துப் போர்த்திக் கொண்டு நட்சத்திரங்களை எண்ணிக் கொண்டிருப்பாள். அவள் தூங்கி விட்டதாக எண்ணி ரகுவும் அவனும் பேசிக் கொள்வார்கள். அவள் கலியாணத்தைப் பற்றிய கவலைதான் ரகுவுக்குக் கொஞ்ச நாட்களாய்.

கோபால் சொல்வான்: "நீ ஏன் கவலைப் படுகிறாய்? அவள் புத்திசாலித்தனத்துக்காகவாவது அவளுக்கு ஒரு நல்ல கணவன் கிடைக்காமல் போக மாட்டான்."

அவள் மார்பில் சட்டென்று ஒரு தண்மை தேங்கும். கன்னங்களில் பனி சரமாய்க் கண்ணீர் இறங்கும்.

பூஜை விளக்கண்டை உட்கார்ந்து அவள் சிந்திப்பதுண்டு; முற்றிலும் உருவாகாத ஓர் அன்பு உருவம் காணுவதற்கு; இன்னும் தெளிவாகத் தெரியாத ஓர் உறவு பலித மாவதற்கு.

ஒரு தடவை தலை நிறையக் கனகாம்பரம் வைத்துக் கொண்டிருந்த போது ரகு சொன்னான். "இந்தப் பூவை எதற்குச் சுமக்கிறாய்? துளி வாசனை இருக்கிறதா இதற்கு?"

அவள் பதில் சொல்லுமுன் கோபால் சொன்னான். "அழகிருந்தால் மணமில்லை. மணமிருந்தால் அழகு இருக்காது."

அவள் பார்வைக்கு மிகவும் சிதானத் தான். அவளை மணந்து கொள்பவன் குணத்துக்காக, சாமர்த்தியத்துக்காக, — கைப்பிடிக்கும் உறுதி கொண்டவனானால்தான் சரி. அந்தக் குறையை அவள் மறைத்ததில்லை. மற்றவர் சொல்லும்போது உறுத்தும் விதமாய் உணருவதும் இல்லை. ஆனால் அதனால் வாழ்க்கையின் சில அரிய சந்தர்ப்பங்கள் நழுவிப் போய் விடுமோ என்று மட்டும் தனியே உட்கார்ந்து வருந்துவதுண்டு.

அண்ணன் பணம் வைத்திருக்க வில்லை. இந்தக் குறையை அவனும் வேறு விதமாய்ச் சீர்ப்படுத்திவிட முடியாது. அப்படியானால் அதைப் பொருட்படுத்தாமல் அவளை ஏற்கக் கூடியவர் யார்? மணமிருந்தால் அழகில்லா விட்டாலும் பரவாயில்லை என்று ஒப்புக் கொள்வாரா, அவள் அறிவை மெச்சி ஐ. ஏ. எஸ். பாஸ் செய்யவென்று நேரிலும் சொன்னவர்? அழகு பார்த்த உடன் புலனாகி விடும். பண்பும் குணமும் பழகினால்தான் புரியும். அப்படிப் பழகியவருக்குப் புரியுமா அவள் கவலைகள்?

கரையிலிருந்து நழுவிவிட்ட குருவிக் குஞ்சு ஒன்றைக் கையில் எடுத்து அவள் அரிசியும் தானியமும் கொடுப்பதுண்டு.

ஆளிடம் அது பயப்படாமல் வரும். கையைப் பிரித்து நீட்டினால் அங்கையில் வந்து உட்காரும்.

"அது எப்படி உன் கையில் பயப்படாமல் வந்து உட்காருகிறது?" என்று கேட்பான் கோபால்.

**"என்மேல் அதற்கு அவ்வளவு நம்பிக்கை."**

"உனக்கும்கூட அது போய் விடாது என்ற நம்பிக்கை. இல்லாவிட்டால் விரல்களை மடக்கி மூடி அதை மெதுவாகப் பிடித்து வைக்க நினைப்பாயே?"

"அதுதான் பிசகு. நாம் விரலை மடக்க ஆரம்பித்தாலே அது பறந்து போய்விடும். அதன் இயற்கையை நான் மதிக்கிறேன் என்ற உணர்ச்சியினால் தான் அது என்னிடம் சுதந்திரமாக வருகிறது. நான் கட்டுப்படுத்த நினைத்தால் அது அப்புறம் என்னிடமிருந்து நழுவிவிடும்."

"உன் விவாதம் நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் வாழ்க்கை சில சமயம் அப்படிக் கட்டுப்படுத்த முடியாமல் விட்டு விடுவதால் நழுவிப் போகிற சந்தர்ப்பங்களும் உண்டல்லவா?"

உண்மைதான். அந்த உண்மையை அவளும் ரகுவும் அவனிடமே தெரிந்து கொண்டார்கள். கோபாலுக்கு அவர்கள் உதவி தேவையாக இருந்தது. உரிமையோடு அவன் ரகுவிடம் கேட்டான். அப்போது ரகுவும் உரிமையோடு அவன் துணையை நாடியிருக்கலாம். அவளுக்கும் வாழ்க்கையில் ஒரு துணை கிடைத்திருக்கும். ரகு அப்படித் தன்னை ஸ்தாபித்துக் கொள்ள நினைக்கவில்லை. அந்தச் சந்தர்ப்பம் நழுவித் தான் போய் விட்டது.

பரீட்சைகள் முடிந்து கோபால் வேலை தேடிக் கொண்டிருந்த சமயம். தீவிரமான அவன் முயற்சிகள் பலிதமாகும் போல் இருந்தது. பம்பாயில் ஒரு கம்பெனி. அதில் சேர முன் பணம் ஆயிரம் ரூபாய் கட்ட வேண்டியிருந்தது. கோபாலுக்கு அதற்கேற்ற வசதி இல்லை. ரகுவைத்தான் நாட வேண்டி இருந்தது. பணத்தைக் கொடுத்து விட்டு ரகு அவனிடம் சொன்னான்.

"மாதம் கொஞ்சமாய் நீ திருப்பித் தந்து விடுவதாய்ச் சொல்கிறாய். நீ எதுவும் தர வேண்டாம். ஆனால் என்னிடம் இருக்கும் மற்றவைகளையும் உன்னிடம் தந்து விடுவதற்குத்தான் நினைக்கிறேன்; மாலதி உட்பட."

அவள் உள்ளே இருந்தாள். ஆனால் அவள் மனம் வெளியே நடந்த அந்தப் பேச்சில் தான் இருந்தது. கோபால் என்ன பதில் சொல்கிறான் என்ற எதிர்பார்ப்பில் அவள் மனம் செறிந்து நின்றது. அவன் சிரிப்புச் சத்தம் மட்டுமே கேட்டது. அந்தச் சிரிப்புக்கு ஆயிரம் அர்த்தங்கள் கற்பிக்கலாம். சில சமயம் மௌனம் எத்தனையோ ஆரவாரமான பேச்சுக்களைக்கூட விழுங்கி விடுகிறது.

கோபால் அப்புறம் திரும்பவில்லை. அவனிடமிருந்து மாதம் கொஞ்சமாய்ப் பணம் மட்டும் திரும்பி விட்டது. அப்புறம் அவன் பம்பாய் வேலையையும் விட்டுவிட்டான். விலாசம் தெரியவில்லை. ரகுவின் ஒரிரு கடிதங்கள் விரும்புவாரின்றித் திரும்பிவிட்டன.

ரகுவின் ஏமாற்றங்கள் அவளை வதைக்கும். துக்கம் தொண்டையை அடைக்க அவன் இடிந்து உட்கார்ந்திருப்பான். அதைப் பார்க்கும்போது இடமென்று எழும் வாஞ்சை தாங்க முடியாமல் அவள் உள்ளத்தை அழுத்தும். கைகளுள் புதைந்த முகம் தெரியாமல் தனக்குள் உடைந்து புலம்புவான்.

அவளை மணம் செய்து கொடுத்துவிட வேண்டுமென்று பல பிரயத்தனங்கள் செய்து பார்த்தான் ரகு. அவளுக்கு அதில் மறுப்பில்லை; ஈடுபாடும் இல்லை. விடாமல் படித்துக் கொண்டிருந்த படிப்பை மட்டும் தொடர்ந்து கொண்டிருந்தாள். ரகுவுக்கு வெற்றி கிடைக்கவில்லை.

அவள் ஐ. ஏ. எஸ். தேறிவிட்டாள், கோபால் ஒரு நாள் ஜோசியம் சொன்னதைப் போல். 'அவன் எங்கே இருக்கிறான்? அவனுக்கு இது தெரியுமா? என்ன சொல்வான் அவளைச் சந்தித்தால்?' இவ்விதமாய் அவள் நினைப்பதுண்டு. ஆனால் அது இன்று இந்த விதத்தில் நேரும் என்று அவள் கற்பனையில் கூட நினைக்கவில்லை.

அவளுக்குப் பதவி வந்த பிறகு அவள் நிலைக்கும் முக்கியத்துவம் தோன்றிவிட்டது. ரகுவிடம் வந்து கேட்பவர்களைப் பற்றி அவளுக்குத் தெரியும். ஆனால் அவள் இப்போது யாருக்காகவும் காத்திருக்கவில்லை. அவளை யறியாமல் ஒரு வீம்பு மனத்

## தேநீர் போட்ட திருக்கரம்



காலஞ்சென்ற திரு லால்பகதூர் சாஸ்திரி காலையில் எழுந்தவுடன் முதல் வேலையாக இரண்டு கோப்பை தேநீர் தயாரிப்பார். ஒரு கோப்பை அவருக்கு; இன்னொரு கோப்பை அன்பு மனைவிக்கு.

மிக மிகுதியாக வேலை குவிந்திருந்தாலும்கூட, இந்தக் கடமையை அவர் கைவிட்டதில்லை. தமது இல்லற வாழ்க்கை முழுவதிலுமே ஒரே ஒரு தடவைதான் அவர் இதைச் செய்யத் தவறியிருக்கிறார்.

"இப்போது அந்தக் கரம் இல்லை. தேநீர் மட்டும் எதற்கு?" என்று தேநீர் குடிப்பதையே ஸ்ரீமதி லலிதா சாஸ்திரி விட்டு விட்டார். இந்தத் தகவலை அவரே, தம்முடைய தோழியான பார்லிமெண்ட் அங்கத்தினர் ஸ்ரீமதி ரேணுகா ரேயிடம் தெரிவித்திருக்கிறார். —எம்.கேசம்

தில் உருவாகி யிருந்தது. அது முற்றிய மூங்கிலாய் நிமிர்ந்து நின்றது.

தன்முன் குனிந்த அவன் முகம் நினைவுக்கு வந்தது. இன்னும் அந்த இளமை மாறவில்லை. கண்களில் அடக்கம் வந்து நின்றாலும் அவளைக் கவர்ந்த அந்தக் குறுகுறுத்த ஒளி தணியவில்லை.

ஒருவேளை கோபால் இன்று இன்னொருத்தியின் சொத்தாக இருக்கலாம். ஆனால் திருமணத்துக்கு ஓர் அழைப்புக்கூட அனுப்பவில்லையே? ஒருவேளை அதை ஒரு சங்கடமாகக் கருதித் தவிர்த்திருப்பானோ? ஆனால் அவ்வளவு தூரத்துக்கு நட்பை யார் நினைவில் வைத்துக் கொள்கிறார்கள் இந்தக் காலத்தில்? ஓடும் ரயில் சிநேகமாக, ஒண்டுக் குடி இருந்த பழக்கமாக, கூடப் படித்த நினைவாக, உடன் வேலை பார்த்த உறவாக, வந்து இருந்து நழுவி, அப்புறம் சுவடு இன்றி மறைந்து போய்விடும் சிநேகங்களில்தான் எத்தனைவிதம்!

அவனை அவள் விசாரித்துத் தண்டிக்க நேர்ந்தால்? ஏதோ ஒரு விதத்தில் பழி தீர்த்துக் கொள்ள நினைக்கும் குரூர ஆனந்தத்துக்காக அவள் செய்த செயலாக அதைக் கருதிவிடுவானோ அவன்?

அவள் அவனைத் தப்புவித்து விடலாம். குற்றச்சாட்டுகள் அப்படி ஒன்றும் பெரிதாக இல்லை. அவளுடைய அதிகாரத்தின் சக்திக்கு அந்த வலிமை இருந்தது. அப்போது அவன் அவளுக்காகத் தன் மனத்தில் ஓர் இனிய இடம் தருவானோ? கொடுத்தால் அது வெறும் நன்றியாகத்தான் இருக்குமா? முன்பு அவள் அவன் மனத்தில் இடம் பெற்றதாய் எண்ணியதுண்டு. அது இரக்கத்தால்; இது நன்றியினால். அது ஒருவகை மதிப்பு; இது பணிவு கலந்த மரியாதை.

சட்டென்று நினைப்புக் கசந்தது. அப்படியே உறங்கிப் போனாள்.

இளங் காலை நேரம். மாலதி எழுந்து கொஞ்ச தூரம் நடந்து போய்விட்டு வரக் கிளம்பினாள். ஆற்றங்கரை ஓரம் அகலக் கை விரித்த மரத்தடியில் வந்ததும், ஒரு கணம் அசைவற்று நின்றாள்.

குளித்துவிட்டுக் கோபால் கரையேறி வந்து கொண்டிருந்தான். மார்பை மூடாமல் நழுவிய ஈரத் துண்டு. மார்பின் விரிவும், கைகளின் வீச்சும் எடுப்பாய் நிற்க, பூமியில் அழுந்தி நின்ற கால்களில் உயர்ந்து நிமிர்ந்த தோற்றம். அவளால் பார்வையை அகற்ற முடியவில்லை. அந்தக் காட்சி ஒரு வேகமாய்ச் சுழன்று ததும்பி, அவள் மனத்தில் ஒரு கணம் விலக்க முடியாத கவர்ச்சியை எழுப்பிற்று.

அவனும் அவளைப் பார்த்துவிட்டான். அவளைத் திடீரெனக் கண்டதும், திடுக்கிட்டாற்போல் அவன் புறம் திரும்பினான். அவள் அதற்குள் சமாளித்துக் கொண்டு விட்டாள்.

''என்னை ஞாபகம் இருக்கிறதா?''

பனி அடித்தது போல் கோபால் உடம்பை ஒடுக்கிக் கொண்டான்.

''ஓ எஸ். மாலதி...மன்னிக்கவும் வந்து...''

அவளுக்குச் சிரிப்பு வரவில்லை இப்போது. ஒருவகைப் பரிதாபமே நெஞ்சில் ததும்பி நின்றது. தன்னுடைய இந்தப் பதவியிலும் அவளைவிடத் தாழ்ந்த நிலையிலேயே தன்னைக் கருதிக்கொள்ள விரும்பினான்.

''என்ன வேணும்?''

அவனுக்குப் பதில் சொல்ல முடியவில்லை. அவன் மனத்தை ஏதோ அலைக்கிறது. ஏதோ சொல்லக் கூச்சப்படுகிறான். அவளை நோக்கி முகம் உயர நினைக்கிறது. ஆனால் இன்னொரு நினைப்பு அவனைத் தடுக்கிறது. ஏதோ ஒரு பச்சாத்தாபம் அவனை உந்திற்று. ஈரம் சொட்ட மண்ணில் பதித்த அவன் கால்களையே பார்த்துக் கொண்டிருந்தாள். என்றோ ஒருநாள் அந்தப் பாதங்களைப் பிடிக்க ஏங்கியது நினைவுக்கு வந்தது.

''ஒன்று கேட்பேன். நீங்கள் தப்பாக எடுத்துக் கொள்ளக் கூடாது.'' அந்த மரியாதையும் விநயமும் அவளுக்குப் புதிதாக இருந்தன. கொஞ்சம் வேதனையையும் கூட எழுப்பிற்று அந்த ஒதுக்கம்.

''சொல்லுங்கள்.''

''நான் பழைய கோபால் இல்லை. முன்னைப் போல எனக்குக் கட்டற்ற சுதந்திரம் இல்லை. என் எண்ணங்கள், செயல்கள், எல்லாவற்றுக்குமே இப்போது ஓர் அடிப்படைதான். எனக்கு மூன்று குழந்தைகள். அவைகளுக்குத் தாயாக என் மனைவி. அவர்களைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்புணர்ச்சி ஒன்றுதான் எனக்கு இப்போது. அதற்கு வழி உங்கள் கையில்தான் இருக்கிறது. வேறு எதையுமே வேண்டவில்லை இப்போது. அந்த வழிக்கு வகை செய்வதாக உறுதி கொடுப்பீர்களா?''

சட்டென்று அவளுள் ஏதோ அவிந்தது. பார்வையில் ஒளி குன்றி நீலமாகி, அவள் இமைத் திரையில் இருள் படர்ந்தது போன்ற உணர்வு. பார்வையைத் தணிய விடாமல் அடக்கிக் கொண்டாள் அவள்.

அவளுக்கு என்றோ, எவ்விதமாகவோ ஒரு விழிப்பு இருந்திருக்கலாம். இப்போது அது சாம்பல் பூத்த கனலாய் அடங்கிவிட்டது.

''யோசிக்கிறீர்களா?'' — அவன் குரல் நெஞ்சடியிலிருந்து உயிரே மிதந்து வருவது போலக் கேட்டது. அவளை எதிர்பார்த்து அவன் இருந்ததற்கும், அவளிடம் பதில் எதிர்பார்த்து இப்போது அவன் நிற்பதற்கும் தோன்றிய வித்தியாசம், இரண்டுக்கும் இடையே இருந்த முரண், அவள் நெஞ்சில் பொறி எழச் செய்தது. சிரமப்பட்டுக் கண்ணீரை அடக்கிக் கொண்டாள்.

அவள் நிலையும் அந்தஸ்தும் வேறு இப்போது. அவன் முன்னிலையில் அவள் தன் வயம் இழக்கக் கூடாது. தான் தணிய வேண்டிய அவசியம் இல்லாத நிலையைக் காட்டிக் கொள்ளக் கூடிய, ஒரு வகையில் தான் அவள் நடந்து கொள்ள வேண்டும்.

''ஆகட்டும். இந்தத் தடவை தவறுகளை மன்னிக்கச் சொல்லி உத்தரவு போடுகிறேன்!''

ஓர் உயர்தர உத்தியோகஸ்தனின் பாணியில் பதில் சொன்னாள் மாலதி. குரலின் இடத்துக்கு உரிய கம்பீர ஒளி மிதந்த பார்வை. மேலும் அவன் நன்றி கூறுவதற்குக் கூட இடம் தராமல் முசாபரி பங்களாவை நோக்கி நடக்கலானாள்.



# ஊர் வம்பு

- தொழில் நுணுக்கப் புத்தகக் கண்காட்சி
- சேனகாவின் சித்திரங்கள்
- அழுவதா? சிரிப்பதா?
- கலைஞருக்குப் பாராட்டு
- நவீன ஓவியங்கள்

'மனிதர்கள் மறைந்து விடுவார்கள். ஆனால் புத்தகங்கள் மறைவதில்லை. எந்த மனிதனும் எந்தச் சக்தியும் சிந்தனைச் செல்வங்களை அழிக்க முடியாது!'' என்று புத்தகங்களின் அருமையை அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்ட் கூறி யுள்ளார். இன்று தொழில் யுகம். தொழில் நுணுக்கங்களைக் கற்றுக் கொள்வதற்கு அந்தந் துறைப் புத்தகங்கள் தேவை. ஒருவரால் அத்தனையும் வாங்கிக்கொள்ள முடியாது. நூலகங்களிலுள்ள இத்தகைய தொழில் நுணுக்கப் புத்தகங்களைப் படிப்பதால் தொழில் அபிவிருத்தியில் முன்னேற வாய்ப்பேற்படுகிறது. அமெரிக்காவில் ஒரு வருஷத்தில் கிட்டத் தட்ட ஐம்பதாயிரம் தொழில் நுணுக்கப் பத்திரிகைகளில் பல்லிரண்டு லக்ஷம் கட்டுரைகள் பிரசுரமாகின்றனவாம். 'மெத்த வளரும் மேற்'கிலிருந்து தொழில் நுணுக்க அறிவை இத்தகைய புத்தகங்களிலிருந்து பெறலாம்.

சென்னை மெமோரியல் ஹாலில் நடைபெறும் தொழில் நுணுக்கப் புத்தகக் கண்காட்சியில் ஏழாயிரம் புத்தகங்களும், பத்திரிகைகளும் இடம் பெற்றுள்ளன. கட்டடக் கலை, விவசாயம், மின்சாரப் பொறி இயல், தோட்டக் கலை, ரசாயனம், கல்வி, வைத்தியம், குழந்தைகள் விஞ்ஞானம் விளம்பரக் கலை, இப்படித் துறை துறையாகப் பிரித்துப் புத்தகங்களை அடுக்கி வைத்திருக்கிறார்கள். ஒவ்வொரு துறையிலும் விருப்பமுள்ளவர்கள் அந்தத் துறையிலுள்ள புத்தகங்களை எளிதில் பார்த்து எடுத்துக் கொள்ள வசதி செய்திருக்கிறார்கள். 'விளம்பரக் கலையின் கதை' என்ற புத்தகத்தில் முதன் முதலில் காப்பி பற்றிய விளம்பரம் குஷிகரமாக அமைந்திருக்கிறது. 1657ம் வருஷம் பிரசுரமான 'பப்ளிக் அட்வைஸர்' என்ற பத்திரிகையில் காப்பி குடித்தால் தெம்பு ஏற்படுகிறது மட்டுமல்ல, அது ஜீரண சக்தியைக் கொடுத்து, ஜலதோஷம், தலைவலிகளை நீக்கிவிடும் பானம் என்று வெளியாகியிருக்கிறது.

தொழில் நுணுக்கப் பயிற்சியில் ஆவலுள்ள இளைஞர்களுக்கு இந்தக் கண்காட்சி மிகவும் பயனளிக்கும். தொழில் நுணுக்கக் கலைகளில்தான் எத்தனை எத்தனை பிரிவு என்ற மலைப்பு நமக்கு ஏற்படுகிறது. இந்த ஏழாயிரம் தொழில் நுணுக்கப் புத்தகங்களை அமெரிக்காவிலிருந்து கொண்டு வந்து இந்தியாவின் முக்கிய நகரங்களி லெல்லாம் கண்காட்சியாக வைக்க அமெரிக்க சர்க்கார் உதவியிருப்பது தொழில் நுணுக்கப் பயிற்சியில் ஆர்வம் உள்ளவர்களுக்கு வரப் பிரசாதம். விஞ்ஞானப் பாடப் புத்தகங்களையும் இந்தியாவிலேயே அச்சடித்துக் குறைந்த விலையில் விநியோகம் செய்ய ஏற்பாடு செய்திருக்கிறார்கள். வளரும் விஞ்ஞானத்துக்கு இந்தப் புத்தகங்கள் நம் நாட்டில் பெருந் துணை செய்யும்.

'சித்திரமும் கைப் பழக்கம்' என்பது முதுமொழி. விளையும் பயிரிலே குருவின்றித் தானாகவே ஏகாக்ர சித்தத்தோடு முன்னேறி அகில உலகப் புகழ்பெற்ற சேனகா சேனநாயகா தன் உழைப்பின் பலனுக்குச் சான்றாகத் திகழ்கிறான். ஓவியக் கலையிலே நவீன பாணி ஓவியத் துறையில் சிறந்து விளங்கும் சேனகா சேனநாயகா இலங்கைப் பிரதம மந்திரி டட்லி சேனநாயகாவின் மருமகன். சிறுவன் சேனகா 250 வர்ண ஓவியங்களைத் தீட்டி, 25 சிலைகளைச் செதுக்கி அமெரிக்கா, இங்கிலாந்து, ரஷ்யா இத்தாலி, மேற்கு ஜெர்மனி ஆகிய நாடுகளில் முப்பத்தாறு கண்காட்சிகளை நடத்திப் பெரும் புகழும் பெற்றவன். ஓவியன் சேனநாயகாவின் வர்ணப் படங்களை 'பிரிட்டிஷ் கிரிடிக்' எரிக் நியூடன் சிலாகித்துத் தேர்ந்தெடுத்து லண்டனில் உள்ள காமன்வெல்த் கலைக் கண்காட்சியில் இடம் பெறச் செய்திருக்கிறார். சிறுவன் சேனகாவின் அற்புத ஓவியம் ஒன்றை ஐ. நா. சபையினர் வாங்கித் தங்கள் கட்டடத்தை அலங்கரிக்கச் செய்துள்ளனர் என்பது இவனுக்குக் கிடைத்த அரிய கௌரவமாகும்.

சிறுவன் சேனகா படிப்பது வைத்தியம்; பொழுது போக்கு ஓவியம்.





சேனகா

பத்திரிகையில் பிக்காஸோ தம் நவீன பாணி ஓவியம் வெறும் புரட்டு என்று குறிப்பிட்டதை ஒரு பத்திரிகையாளர் சிறுவன் சேனகாவுக்கு எடுத்துக் காட்டி, அவனது அபிப்பிராயத்தைக் கேட்டார். சிறுவன் சேனகா அதைக் கேட்டு, 'நானும் பத்திரிகையில் படித்தேன்!' என்று கூறித் தன் அபிப்பிராயத்தை வெளியிடாமல் அடக்கமாக நடந்து கொண்டது மெச்சும்படி இருந்தது.

சிறுவன் சேனகா சேனநாயகாவின் ஓவியக் கண்காட்சியை மார்ச் 27ம் தேதி சென்னை கவர்னர் ஸ்ரீ சந்திராரெட்டி தொடங்கி வைத்துச் சிறுவனின் கலைத் திறமையைப் பாராட்டினார். கலைத் தொடர்புகள் கழகத்தின் ஆதரவில் நிகழ்ந்தது இந்த ஓவியக் காட்சி.

—பி. என். எம்.

"இந்தியாவின் உணவுப் பஞ்ச நிவாரணத்துக்குப் பணம் சேர்ப்பதற்காக ஹாலந்தில் ஏழாயிரத்துக்கும் அதிகமான மாணவர்கள்

பி. பி. ரங்காச்சாரி



இரண்டு நாள் உண்ணாவிரதம் ஒன்றைத் தொடங்கியிருக்கிறார்கள். இந்த இரண்டு நாட்களும் அவர்கள் தேநீரும், சர்க்கரை கரைத்த தண்ணீரும் மட்டுமே அருந்தி, தலைக்கு மூன்றரை கில்டர்கள் — (சுமார் 5 ரூபாய்) சேகரிப்பார்கள்."

இச் செய்திக்கு எதிர்ப் பக்கத்தில் இந்திய அரசாங்க உல்லாசப் பயணத் துறையினர் வெளியிட்ட விளம்பரம்:

சிவந்த சூரியன் பின்னணியில் அஸ்தமித்துக் கொண்டிருக்கக் கம்பீரமாகக் காட்சிதரும் தாஜ்மகாலின் புகைப்படம். அதன் கீழே, "இந்தியாவுக்கு வாருங்கள்! மகத்தான அநுபவம்!" எத்தனை உணவு விடுதிகள்! நினைத்தாலே நாவில் நீர் ஊறச் செய்யும் எத்தனை எத்தனை அறுசுவை உண்டிகள்!....எல்லாம் இந்தியாவில்.....! இந்தியாதி..... இந்தியாதி...." நம்மில் இருபத்தைந்து பேர்களில் ஒருவருக்கு உணவளிப்பது அமெரிக்கா என்கிறார்கள். அமெரிக்கப் பத்திரிகைகளில்தான் இப்படி அரசினரின் 'அழ'கான விளம்பரங்களும் பக்கத்திலேயே நம் நாட்டில் நிலவும் உணவுப் பற்றாக்குறை பற்றிய செய்திகளும் வெளிவருகின்றன. வெட்கப்படுவதா, அழுவதா? அயல்நாட்டவரைக் கவர்ந்திழுக்க உணவு தவிர வேறு விஷயம் இல்லையா? — அ. சங்கரன்

ஸ்ரீ பி.பி. ரங்காச்சாரி, சங்கீத வித்வான் சாத்தூர் கிருஷ்ணய்யங்கார் அவர்களிடம் முறைப்படி சங்கீதம் பயின்று எத்தனையோ மேடைக் கச்சேரிகளும் செய்திருக்கிறார்; பல பிரசித்திபெற்ற ஹரிகதா காலக்ஷேப வித்துவான்களுக்குப் பின்பாட்டுப் பாடியிருக்கிறார்; பிரபல நாடகக் குழுவின் தலைவரான காலஞ்சென்ற சி. கன்னையா அவர்களின் நாடகக் குழுவில் சேர்ந்து "தசாவதார"த்தில் ஸ்ரீ ராமன், "இராமாநுஜ"ரில் ராமாநுஜர், "பகவத் கீதை"யில் ஸ்ரீ கிருஷ்ணன், "ஆண்டாள் திருக்கல்யாண"த்தில் பெரியாழ்வார் என்று பல முக்கிய பாத்திரங்களாக நடித்திருக்கிறார். ஆதி தமிழ் பேசும் படங்களான "காலவா" (காலவரிஷி), "ஹரிச்சந்திரா" ஆகிய படங்களில் நடித்தார்; அதிலிருந்து தொடர்ந்து பல தமிழ்ப் படங்களில் நடித்திருக்கிறார்; இன்னும் நடிக்கிறார்.

இத்தகைய புகழ்பெற்ற கலைஞர் தமது சஷ்டியப்தபூர்த்தி வரையிலும் தம்முடைய கீர்த்தியை மங்காமல் வைத்துக் கொண்டிருப்பது மாபெரும் அதிசயம்! சமீபத்தில் இந்த அதிசய மனிதருக்குச் சிறப்பான முறையில் சஷ்டியப்த பூர்த்தி வைபவம் நடந்ததில் அதிசயம் என்ன இருக்கிறது? —காந்தன்

சிலையைப் புரிந்துகொள்வது கஷ்டம். அதுவும் 'மாடர்ன் ஆர்ட்' என்னும் கலையைப் புரிந்துகொள்ள வேண்டுமென்றால் மனிதன் கற்பனையின் உதவியைத்தான் நாட வேண்டும். ஆயகலை அறுபத்து நான்கென்று அறுதியிட்டுப் போற்றிய நமது பாரத நாடு தற்கால ஓவியக் கலையையும் சீராக வளர்த்திருக்கிறது என்பதில் ஐயமில்லை. அதனை மக்கள் பார்த்துக் களிக்க வேண்டும் என்பதற்காகச் சென்னை ராஜ்ய லலித கலா அகாதமியார் மியூஸியம் நூற்றாண்டு விழாக் கலையரங்கத்திலே ஒரு கலைக் காட்சிக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். கண்ணுக்கும் கற்பனைக்கும் விருந்தான பல சித்திரங்கள் இதில் இடம் பெற்றிருந்தன. எத்தனை சித்திரங்கள் இடம் பெற்றிருந்தனவோ, அந்த அளவுக்குக் கூடக் கலையன்பர்கள் காண வரவில்லை!

இந்தக் கலைக் காட்சியில் நடந்த இன்னொரு வேடிக்கை என்னவாம் தெரியுமா? கலைக் கண்காட்சியில் 'பங்கெடுத்துக் கொண்ட ஓவியர்களுக்கு லலித கலா அகாதமியார் ரொக்கப் பரிசு வழங்குவதாக இருந்தார்களாம். அகாதமியின் தலைவரான திருமதி சந்திரா ரெட்டி செக்கில் கையெழுத்திட வேண்டுமாம். தாற்காலிகக் கவர்னரான அவர் செக்கில் கையெழுத்திட முடியாமற்போகவே, பரிசு பெற்ற ஓவியக் கலைஞர்கள் தங்கள் கற்பனைக்கு வேலை கொடுக்கும்படி ஆகிவிட்டது. அதாவது கைக்கு வந்து சேராமலே ரொக்கப் பரிசு கைக்கு வந்து விட்டதாகக் கற்பனை புரிந்து மகிழும்படியாகி விட்டது! —குறும்பன்

# வெற்றித்திருநகர்

## அகிலன்

### அத்தியாயம் எட்டு

## யாருக்காகப் போர்?



காலடியில் விழுந்து வணங்கிய அரியநாத முதலியாரைத் தம் இரு கரங்களாலும் பற்றித் தூக்கி அணைத்துக்கொண்டார் நாகம நாயக்கர். அணைத்தவாறே அவரைத் தமது ஆலோசனை மண்டபத்துக்குள் அழைத்துச் சென்றார். உடன் சென்ற ராமபத்திர நாயக்கருக்கு நாகமரிடம் ஏற்பட்டிருந்த இந்த மன மாற்றம் பெரு வியப்பைத் தந்தது.

விநாடிப் பொழுதுக்கு முன்பு வரையிலும் யாரை 'நன்றி கெட்டவர், துரோகி, வஞ்சகர்' என்று ஆத்திரத்தோடு தூற்றிக் கொண்டிருந்தாரோ, அவரை நேரில் கண்டவுடன் அடியோடு மாறிப் போனார் நாகம நாயக்கர். அகமும் முகமும் ஒன்றாக மலர, நாயக்கர் முதலியாரிடம் அன்பு கனியும் சொற்களால் அளவளாவினார். அவரது குடும்பத்தாரின் நலன்களையும், விசுவநாதன், கமலாதேவியார் பற்றியும் ஆர்வத்தோடு விசாரித்தார். நாகமரின் பேச்சில் அணுவளவும் நடிப்பில்லை. நெஞ்சு நெகிழ்ந்த அன்பும் ஆனந்த பரவசமும், உள்ளம் ஒட்டிய பரிவும் ஒலித்தன நாகமரின் பேச்சுக்களில்.

ராமபத்திர நாயக்கர் ஏற்கனவே நாகமரின் சுபாவத்தை ஓரளவு அறிந்தவர். இருந்தாற்போலிருந்து ஆத்திரப்பட்டுத் துள்ளிக் குதிப்பார்; மறுகணமே அதை மறந்து விட்டு ஆனந்தக் கூத்தாடுவார். 'எந்த அரியநாத முதலியாரைச் சற்று முன்பு நாக்கில் நரம்பின்றித் திட்டினாரோ, அதே மனிதரிடமா இப்படிக் குழைந்து பேசுகிறார்! என்ன இருந்தாலும் வளர்ப்புப் பிள்ளையல்லவா? அந்தப் பாசம் எங்கே போய் விடும்?'

வளர்ப்புப் பிள்ளையைக் கண்ட மாத்திரத்தில் இப்படிச் சரணாகதி அடைந்து விட்டவர், விசுவநாதனை நேரில் சந்தித்து விட்டால் என்ன செய்யப் போகிறாரோ! இவருக்காகப் பரிந்து கொண்டு இவருடைய அருமைக் குமாரனுக்கு எதிராக எப்படி ஆயிரக்கணக்கான வீரர்கள் போர் தொடுக்கப் போகிறார்கள்?

அரியநாத முதலியாரும் தாம் வந்த நோக்கத்தைக் கூற முடியாமல் சிறிது நேரம் தவித்துக் கொண்டிருந்தார். அதற்குள் நாகமநாயக்கரின் ஆணைப்படி அங்கே பொற்கலத்தில் பழங்களும் பாலும் வந்து சேர்ந்தன. அவற்றை எடுத்து உண்ணச் சொல்லி முதலியாரை வற்புறுத்தத் தொடங்கினார் நாகம நாயக்கர். அரியநாத முதலியார் தயங்கினார். அவரால் வெளிப்படையாக மறுக்கவும் முடியவில்லை. மனமொப்பி எடுத்துச் சாப்பிடவும் அவர் கூசினார்.

"தூதுவன் என்ற முறையில் நான் இப்போது இளவரசரிடமிருந்து வந்திருக்கிறேன். நாடு வெற்றி பெற்று விட்டால் பிறகு உண்டு செல்கிறேன்" என்றார் அரியநாத முதலியார்.

நாகம நாயக்கரும் காரணத்தோடு தான் அவற்றை உடனடியாக அங்கு கொண்டு வரச் செய்திருந்தார். முதலியார் மறுக்காமல் அவற்றை உண்ணத்

தொடங்க வேண்டுமென்பது அவர் ஆசை. முதலியாரின் நயக்கத்தால் நாகமரின் முகம் சிறிது வாட்டம் அடைந்தது.

"தங்களுடைய உணவால் வளர்ந்த உடல் இது. அதை என்றும் நான் மறக்க மாட்டேன். தாங்களே என்னை உபசரிப்பதை என்றால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. ஆனாலும் இப்போது ஒரு தூதுவன் என்ற முறையில் வந்திருக்கிறேன். நமக்குள் உடன்பாடு ஏற்பட்டு விட்டால் பிறகு சாப்பிடுவது முறைதான்."

"தூதுவராக வந்தால் என்ன? உண்ட பிறகு பேசுங்களேன்!" என்று இராஜதந்திர முறையில் கூறினார் நாகமநாயக்கர்.

"தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. தாங்கள் எல்லா விஷயங்களிலும் முதிர்ச்சி



வடைந்தவர்கள்: இந்தப் போர் அவசியம் தானா? போரில்லாமலே நமக்குள் ஓர் உடன்பாட்டுக்கு வந்துவிட முடியாதா?''

''இதே கேள்விகளைத்தான் நான் உங்களிடம் கேட்க வேண்டும் என்றிருந்தேன்'' என்றார் நாகம நாயக்கர்; ''விஜயநகரத்திலிருந்து நெடுந்தூரம் கடந்து என் மீது போர் தொடுக்க நீங்கள்தாம் வந்திருக்கிறீர்களே தவிர, நான் உங்களைத் தேடி வரவில்லை! ஆகவே, நான் கேட்க வேண்டிய கேள்வி அது!''

அரியநாத முதலியார் அதுவரையிலும் நாகமருக்கு எதிரே அமர்ந்து வாதிட்டு அறியாதவர். தக்க சமயங்களில் சாடையாக அவருக்கு யோசனைகள் கூறியிருக்கிறாரே தவிர, நேருக்கு நேர் எதையும் வற்புறுத்தியதில்லை.

''பாண்டிய நாட்டைச் சந்திரசேகர பாண்டியர் பொறுப்பில் விட்டு விட்டு, தாங்கள் எங்களோடு புறப்பட்டு விஜயநகரத்துக்கு வந்து விடலாம். இதற்குத் தாங்கள் உடன்பட்டால் போரைத் தவிர்க்கும்படி சக்கரவர்த்திகளே கட்டளையிட்டிருக்கிறார்கள். இளவரசரும் நானுமே அதனால் அதிக மகிழ்ச்சி அடைவோம்'' என்றார் அரியநாத முதலியார்.

''உங்கள் இளவரசன் விசுவநாதனோடு போர் புரிய வேண்டும் என்று எனக்கு மட்டும் ஆவலா என்ன?'' என்று கேட்ட நாகம நாயக்கர், ''யாரும் தம்முடைய கையாலேயே வெட்டிக் கொல்வதற்காக ஒரு மகனைப் பெறுவதில்லையே!'' என்று கூறிவிட்டுச் சிரித்தார்.

அரியநாத முதலியார் மௌனமாகச் சிறிது நேரம் அமர்ந்திருந்துவிட்டு, மெல்ல அங்கிருந்து எழுந்தார். அவரால் சரியாகப் பேச முடியவில்லை. துயரம் தொண்டையை அடைக்க, ''போரைத் தவிர்க்க முடியாது போல் தோன்றுகிறது; இறைவனின் திருவுளம் எதுவோ அதன்படி நடந்துவிட்டுப் போகட்டும்!'' என்று கூறி, விடைபெறுவதற்காகக் கரம் கூப்பினார்.

''அவசரம் எதற்கு? அமருங்கள்!'' என்று அவரைப் பற்றி இருக்கையில் அமர்த்தி விட்டு, ''போரைத் தவிர்ப்பதற்காக நான் கூறும் ஆலோசனைகளை உங்கள் இளவரசனிடம் போய்ச் சொல்லுங்கள். பயமறியாத இளம் காளையாக அவன் துள்ளித் திரிவதால் நீங்களும் அவனுக்கு எடுத்துக் கூறுங்கள்.

''சக்கரவர்த்திகள் கிருஷ்ண தேவராயர் உயிரோடு இருக்கும் வரையில்தான் விஜயநகர சாம்ராஜ்யத்துக்கும் உயிர் இருக்கும். அவருக்குப் பிறகு ஆட்சிக்கு வருவதற்கிருந்த திருமலைதேவனும் அப்பாஜியால் கொல்லப்பட்டு விட்டான். இனி அவர் தம்பி அச்சுதராயரோ, அல்லது மருமகன் ராமராயரோதான் ஆட்சிக்கு வருவார்கள். ஆனால் யார் வந்தாலும் அவர்கள் கிருஷ்ண தேவராயரைப் போல் இருக்க மாட்டார்கள்.....

''இத்தனை பெரிய சாம்ராஜ்யத்தை இணைத்து வாழக்கூடிய இராஜ தந்திரம் அவரிடம் இருக்கிறது. பரந்த மனம் அவருக்கு உண்டு. பல மொழி பேசுவோர், பல சமயங்களைச் சேர்ந்தவர், பல்வேறு வகையினரிடமும் விருப்பு வெறுப்பின்றி நடந்து கொள்பவர் அவர். ஆற்றலோடு இந்தப் பரந்த மனமும் இருப்பதால்தான் தமிழரான நீங்கள் அங்கே பொறுப்பான பதவியில் இருக்க முடிகிறது. மற்றொரு தமிழரான சாளுவ நரசிம்மர் அமைச்சராக இருக்க முடிகிறது. நான்கூடச் சக்கரவர்த்திகளுக்கு நெருங்கிய உறவினன் இல்லை. இருந்தாலும் தகுதியறிந்து என்னைத் தளதிகாரியாக்கியிருக்கிறார்கள்.....'' என்றார்

''தாங்கள் சக்கரவர்த்திகளிடம் இவ்வளவு நன்றி கொண்டவர்களாக இருந்தும், இப்படிச் செய்வது அவசியம்தானா?'' என்று கேட்டார் முதலியார்.

''சக்கரவர்த்திகளின் காலம் முடிவுக்கு வந்து விட்டது. என் காலமும் நெருங்கிவிட்டது. இனி அங்கு ஆட்சிக்கு வரக் கூடியவர்களுக்குச் சக்கரவர்த்திகளுக்கு இருந்த ராஜ தந்திரம் இருக்காது. உற்றார், உறவினர், சூழ்ந்திருப்போர், துதி பாடுவோர் இவர்களுக்கே பொறுப்புக்களையும், நாட்டையும் பகிர்ந்து கொடுப்பார்கள். திறமையும் தகுதியும் பண்பும் இல்லாதவர்களிடம் செல்வமும் அதிகாரமும் சேரும். அப்போது நீங்களோ, விசுவநாதனோ அங்கு இன்றுபோல் பொறுப்பேற்று வாழ முடியாது. நான் எனக்காக இந்த நாட்டைக் கைப்பற்றவில்லை. இதை ஆளப் போகிறவன் விசுவநாதன்! அவன் இசைந்தால், நானே அவனுக்கு முடிசூட்டு விழா நடத்துகிறேன்!''

திடுக்கிட்ட முதலியார், ''பாண்டியரின் கதி என்ன?'' என்று கேட்டார்.

''தமிழ்நாடு முழுதும் விசுவநாதனின் ஆட்சிக்குள் வரப் போகிறது. அப்போது பாண்டியரின் ஆற்றலுக்கேற்றபடி அவருக்கு ஒரு நாட்டை அளித்து நம்முடைய சிற்றரசராகவே வாழச் செய்வோம்!''

''சாம்ராஜ்யத்திலிருந்து பிரிந்து தனி நாடாக இது விளங்கவேண்டுமென்கிறீர்களா?''

''பிரிந்து இது தனி சாம்ராஜ்யமாகவே விளங்க வேண்டும். இதற்கு விசுவநாதனையே சக்கரவர்த்தியாக்கி நான் என் கண்களால் பார்த்துவிட்டு மடிய வேண்டும். விசுவநாதனை மட்டிலும் இந்த யோசனைக்கு இணங்கச் செய்து விடுங்கள். தெற்கே சேர நாட்டு உதய மார்த்தாண்டவர்மனும் நம் சார்பில் இருப்பார். பிறகு, சக்கரவர்த்திகளே விஜயநகரத்திலிருந்து படை நடத்தி வந்தாலும் நம்மை வெல்ல முடியாது!''

''உதய மார்த்தாண்டவர்மன் இப்போது தங்களுக்குத் துணையாகப் படை நடத்தி வர மாட்டார். ஆகவே, அவருடைய உதவி தங்களுக்குக் கிடைக்காது'' என்று நிதானமாகக் கூறினார் முதலியார்.

''என்ன!''

''ஆம், அவருக்கு இளவரசர் எச்சரிக்கை விடுத்திருக்கிறார்!''

நாகமநாயக்கருக்கு இது எதிர்பாராத செய்தியாகும்.

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று முடிவாக முதலியாரிடம் கேட்டார் நாயக்கர்.

''நான் தூதுவன். தாங்கள் கூறியதை இளவரசரிடம் தெரிவிக்கிறேன். மீண்டும் உடன்பாடு காண வாய்ப்பிருந்தால் நானே

வருகிறேன்..... இல்லாவிட்டால்... வைகை யாற்றின் எதிர்க் கரையிலிருந்து போர் முரசுகள் ஒலிப்பதைக் கேட்கலாம்.''

அரியநாத முதலியார் ஒரு துண்டுப் பழத்தைக்கூட விரலால் தொடாமல் அங்கிருந்து எழுந்து விட்டார்.

''விசுவநாதனிடம் என் முடிவைச் சொல்லுங்கள். அவன் மதுரைக்கு வந்து முடிசூடிக் கொள்வதாக இருந்தால், இந்தப் போரே வேண்டாமென்று சொல்லுங்கள்!''

அவ்வாறே வாக்களித்துவிட்டு விடை பெற்றுக் கொண்டார் அரியநாத முதலியார்.

## அத்தியாயம் ஒன்பது

# போர்முனையில்...

**வை**கையாற்றின் வடக்குக்கரை முழுவதும் பாசறைக் கூட்டத்தால் நிரம்பியிருந்தது. யானைகள் அங்கங்கே மரங்களில் கட்டப்பட்டிருந்தன. குதிரைகள் கூட்டம் கூட்டமாகத் திறந்தவெளிகளில் மேய்ந்து கொண்டிருந்தன. தலைவனின் கட்டளைக்காகக் காத்துக் கொண்டிருந்தனர் போர்வீரர்கள்.

விசுவநாதனின் பாசறைக்குள் அவன் அமைதி இழந்து குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டிருந்தான். அமைதியைச் சிறிதும் இழக்காத அரியநாத முதலியார் அவனுடைய மறுமொழிக்காகக் காத்துக் கொண்டிருந்தார். நாகம நாயக்கர் கூறிய செய்திகளனைத்தையும் விசுவநாதனிடம் கூறி முடித்து விட்டார் முதலியார்.

''நான் தனியாக ஒரு சாம்ராஜ்யத்துக்குச் சக்கரவர்த்தியாக வேண்டும்! அதற்காகத் தந்தையார் என்னையே எதிர்த்துப் போரிடப் போகிறார்கள்! போர் நடத்தி வெற்றிபெற்று, முடியைப் பறிப்பதைத்தான் வரலாறு கண்டிருக்கிறது. இவர்களோ என்னையே வென்று எனக்கு முடிசூட்டப் பார்க்கிறார்கள்!''—வேதனையோடு சிரித்தான் விசுவநாதன்.

''அவர்கள் அதற்காகக் கூறிய காரணங்களைப் பார்த்தால்....'' என்று தயக்கத்தோடு குறுக்கிட்டார் அரியநாதர்.

''காரணங்களில் ஓரளவு உண்மையிருக்கலாம். சக்கரவர்த்திகளுக்குப் பிறகு யார் நாட்டை ஆள்வது என்று குறித்துப் போட்டிகள் ஏற்படலாம். உட்பகை, விருப்பு, வெறுப்பு, குழப்பம், பூசல் இவை அங்கே ஏற்படலாம். சக்கரவர்த்திகளின் வலிமையும் பரந்த மனமும் இராஜதந்திரமும் இல்லாதவர்கள் அங்கு ஆட்சிக்கு வரக் கூடும். இவ்வளவையும் நான் மறுக்கவில்லை. ஆனால், இவைகளுக்காக நாம் சாம்ராஜ்யத்தைச் சிதைப்பதா?''

விசுவநாதனின் விழிகளில் வேதனை படர்ந்தது.

''எந்த லட்சியத்துக்காக இதுவரையில் வரலாறு காணாத ஒரு புதுமையாக இந்த சாம்ராஜ்யம் உருவாகியதோ, அந்த லட்சியத்தையே அழித்துவிடப் பார்க்கிறாரே, — அப்பா! இந்த நாட்டின் வரலாற்றில் ஏற்பட்ட பயங்கரமான கொடுமைகளை எத்தனையோ முறை அநுபவித்த பிறகு, ஒரு புதிய வரலாற்றின் சின்னமாக விஜயநகரம் ஏற்பட்டிருக்கிறது. காலம் மாறி விட்டது, முதலியார் அவர்களே! காத தூரத்துக்கு ஓர் அரசும் ஆட்சியும் இருந்து, ஒன்றுக்கொன்று வீரம் பேசிப் போரிட்டு அழிந்த காலம் மலையேறி விட்டது. ஒற்றுமையின்மையாலும் உட்பகையாலும் சீரழிந்த இந்தப் பாரத கண்டம் வெளிநாடுகளிலிருந்து அலை அலையாகப் பகைவர்களின் படையெடுப்புக்களுக்குத் தன் கதவுகளைத் திறந்து விட்டிருக்கிறது. வடக்கே இமயத்தின் வழியே புகுந்த அழிப்பெருக்கு தெற்கே குமரிமுனை வரையிலும் பாய்ந்து நாட்டைப் பாழ்படுத்தியிருக்கிறது. நினைத்துப் பாருங்கள்! காலங் காலமாகக் காஞ்சியிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் வாழ்ந்து வந்த உங்கள் உற்றார், உறவினர்கள், தங்கள் வீடு வாசல்களை விட்டு, தெற்குக் கோடிக்கு ஓடி வந்த அந்தப் பயங்கரமான நாட்களை நினைத்துப் பாருங்கள்! கடல் கடந்து ஈழ நாட்டுக்குச் சென்று குடியேறிய அந்தத் துயரம் நிறைந்த நாட்களை நினைத்துப் பாருங்கள்! தரைவழி போதவில்லை என்று, கடல் வழியாகவும் மேற்கிலிருந்து போர்த்துக்கீசியர்கள் இங்கே வந்து குவிந்து வருகிறார்கள்! போர்முறைகளில் நம்முடைய முன்னோர்கள் பயன்படுத்திய ஆயுதங்கள் பயனற்றுப் போய், வடக்கே பீரங்கிகளையும் வெடிமருந்துகளையும் கொண்டு உள்ளே புகுந்திருக்கிறார் பாபர்! விஜயநகர சாம்ராஜ்யம் சிதையுமானால், பிறகு யாருக்குத்தான் இங்கு நாடு நிலைக்கும்? யாருக்குத்தான் இங்கு வாழ்வு நிலைக்கும்?''

அரியநாத முதலியாருக்குப் பேச நா எழவில்லை. தொண்டை நாடு பல்லவர்கள் காலத்தில் பெற்றிருந்த சிறப்புக்குச் சின்னங்களாக அதன் கோயில்களை அவர் கண்டவர். அதேபோல் பிற்காலத்தில் அதன் சீரழிவைக் குட்டிச்சுவர்களாக மாறிவிட்ட பல கிராமங்களிலிருந்து தெரிந்து கொண்டவர். படையெடுப்புக்களின் கொடுமையால் வேட்டையாடப்பட்ட மக்கள் கூட்டம் உயிருக்கஞ்சித் தெற்கே குடிபெயர்ந்து ஓடியதாம். தென்பாண்டி நாட்டில் அவரது பரம்பரையைச் சேர்ந்த பலர் தஞ்சம் புகுந்திருந்தார்கள் என்பதை அவர் கேள்வியுற்றிருந்தார்.

''விஜயநகரத்தின் இலட்சிய ஆவேசமாக நீங்கள் விளங்குகிறீர்கள், இளவரசே! நீங்கள் நெடுநாட்கள் வாழ வேண்டும். சக்கரவர்த்திகளோடு அந்த லட்சியம் சிதறி விடாமல், உங்கள் வாயிலாக அது தழைத்தோங்க வேண்டும்!'' என்று நாத் தழுதழுக்கக் கூறினார் அரியநாத முதலியார்.




"ஆபீஸ் நேரத்திலே ஆபீசுக்குள்ளேயே, ரேடியோ கேட்டுக்கொண்டிருக்கிறீயே இப்படிச் செய்யலாமா?"

"அரசுப் பட்டம், பதவி, அதிகாரம், செல்வக் குவியல் எதற்குமே ஆசைப்பட்டு நான் என் லட்சியத்தை விற்றுவிட மாட்டேன். நான் முடி சூடிச் சக்கரவர்த்தியாக வேண்டாம். குடிமக்களின் தலைகளில் நான் அமர்ந்து அவர்களின் தலைவனாக வேண்டாம். என் சின்னஞ் சிறு தலையில் நான் அவர்களைச் சுமந்து காப்பாற்றத் துடிக்கிறேன். என் உயிருள்ள வரையில் என்னை மனிதனாக்கிய இந்த சாம்ராஜ்யத்தை நான் சிதறவிட மாட்டேன். என் தந்தையே எதிர்த்து நின்றாலும் சரி! நான் விஜயநகர சாம்ராஜ்யத்து ஊழியன்! அதற்காகவே வாழ்ந்து, அதற்காகவே உழைத்து, அதற்காகவே போரிட்டு, அதற்காகவே மடியத் துணிந்த ஊழியன்! இப்போது அவர் என் பகைவர்! மிகக் கொடுமை நிறைந்த பகைவர்!"

விசுவநாதன் இவ்வளவு கொதிப்படைந்து அரியநாத முதலியார் என்றுமே கண்டதில்லை. சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயருக்குப் பிறகு சாம்ராஜ்யம் எந்த நிலைக்குப் போகுமோ என்ற கவலை அவருக்கும் ஒருபுறம் இருக்கத் தான் செய்தது. ஆனால் விசுவநாதனைப் போன்ற இளைஞர்கள் உயிருடன் உள்ள வரையிலும் சாம்ராஜ்யம் சரிந்து விடாது என்ற நம்பிக்கை கொண்டார் அவர்.

"கொட்டுங்கள், போர்முரசு!" என்று பாசறைக்கு வெளியே வந்து கூவினான் விசுவநாதன்; "முதலியார் அவர்களே! என் தந்தையாரை உயிரோடுதான் கைப்பற்றி ஆகவேண்டும் என்பதில்லை; இனி அவரை உயிரோடு விட்டு வைப்பதைவிடக் கொன்று விட்டாலும் குற்றமில்லை!"

முரசுகள் விண்ணதிர முழங்கின. சங்குகள் விம்மின. எக்காளங்கள் எழுந்தன.

விசுவநாதன் விழிகளில் அனல் பறக்கத் தன்னை மறந்த நிலையில் வானேந்திக் குதிரை மீது தாவினான். அரியநாத முதலியாரும் வீரர்களும் அவனைப் பின்பற்றிச் சூழ்ந்து வந்தனர். யானைக் கூட்டத்தின் பிளிறல் ஒரு புறம் மதுரைப் பெருநகரத்தின் அடிவயிற்றையே கலக்கியது.

"வீரர்களே! உங்கள் உற்றார் உறவினர் பகைக் கூட்டத்தில் இருக்கிறார்கள் என்ற நினைவு குறுக்கிட்டு உங்கள் ஆண்மையைக் குலைத்துவிடக்கூடாது. நான் என் தந்தையை எதிர்த்தோ, நீங்கள் உங்கள் உற்றார் உறவினரை எதிர்த்தோ இப்போது போர் புரிய வில்லை. விஜயநகர சாம்ராஜ்யத்தில் பாது காப்போடு வாழும் கோடானு கோடி குடி மக்களின் பகைவர்களை ஒழிக்கப் போராடு கிறீர்கள்!" என்று குமுறினான் விசுவநாதன்.

எதிர் வரிசையும் சித்தமாகவே காத்திருந் தது. மதுரை மாநகரத்தின் கோட்டைகள் பழைய போர்களில் அழிக்கப்பட்டு விட்ட தால், நகரம் பாதுகாப்பற்றதாகவே காட்சி யளித்தது.

விசுவநாதன் வீரர்களோடு முன்னேறி வரும் காட்சியைப் பார்த்துக் கொண்டே செயலிழந்து நின்று விட்டார் நாகம நாயக்கர். ஒவ்வொரு விநாடியும் அவரிட மிருந்து ஆணையை எதிர்பார்த்த படைத் தலைவர்கள், அது வராமல் போகவே, துடியாய்த் துடித்துக் கொண்டு நின்றனர்.

நாகம நாயக்கர் அது போர்க்களம் என் பதையோ, எதிரில் வருபவன் தம் உயிர் குடிக்க வரும் பகைவன் என்பதையோ அறவே மறந்தார். அவர் விழிகளில் நீர் பெருகியது.

என்ன மிடுக்கு, என்ன கம்பீரம், என்ன செருக்கு அவனிடம்! புலிக்குப் பிறந்தது பூனையாகி விடுமா என்ன! அவருடைய ஆவி சிறகடித்துப் பறந்து போய் அப்படியே அவனைத் தெஞ்சாரத் தழுவிக் கொண்டது. 'கொல்ல வருகிறானா? வரட்டுமே! அவ னுடைய வாள் முனை பட்டு மடிய நேர்வது போல் ஒரு பாக்கியம் எளிதாகக் கிடைத்து விடுமா என்ன?" உடைவாளைப் பற்றியிருந்த அவரது கரம் மெல்ல நடுங்கியது.

"விசுவநாதா!" என்று அன்பு பொங்கும் குரலில் அவனைக் கூவி அழைத்தார்.

அவர் இப்படிக் கூவியிருக்காமல் இதற்குப் பதிலாக வேல் முனையை அவனுடைய நெஞ்சில் பாய்ச்சியிருக்கலாம். இடையிரண்டு பின்னவென வாளை உருவி அவன் தலையைச் சீவித் தரையில் உருட்டியிருக்கலாம். விசுவ நாதனால் இந்த அழைப்பின் கொடுமையை மட்டும் தாங்க முடியவில்லை.

கடிவாளத்தை இழுத்துப் பிடித்துக் குதிரையை நிறுத்தி விட்டு அவரை உற்றுப் பார்த்தான் அவன். பாண்டிய நாட்டுக்கே அதிபதியாக இருந்த அவர் ஏன் இப்படி உருக் குலைந்து உடல் நலிந்து காணப்படுகிறார்? அவருக்கு இந்த இடைக்காலத்தில் என்ன குறை நேர்ந்து விட்டது?

அவருடைய இரும்புச் சிலையொத்த கட்டுக் குலையாத உடல் தளர்வெய்திக் கலகலத்துப் போயிருந்தது. விசுவநாதன் தடுமாறினான். ஓடிப் போய் அவர் கால்களில் விழுந்து கதற வேண்டும் போலிருந்தது என்றாலும், "போர் தொடங்கலாமே!" என்றான், தன் நெஞ்சைக் கல்லாக மாற்றிக் கொண்டு. (தொடரும்)

# படித்துப் பாருங்கள்

## ஸ்ரீ காமகோடி ப்ரதீபம்

(மாத சஞ்சிகை)

உயர்ந்த ஆன்மீக விஷயங்களைத் தகுதி பெற்ற சான்றோர் அழகுபட எடுத்துரைக்க, அவற்றை நல்ல முறையில் வெளியிட்டு வரும் உத்தமமான சஞ்சிகை 'காமகோடி ப்ரதீபம்'. ஏழாவது ஆண்டினைத் தொடங்கியுள்ள இப்பத்திரிகை ஆஸ்திகர் இல்லங்களிலெல்லாம் இடம் பெற வேண்டியது அவசியம். ஹிந்து தர்மத்துக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டுள்ள இந்தப் பத்திரிகை குறிப்பாக ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்துக்கும், ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு அவர்களுக்கும் அருந்தொண்டாற்றிப் பல சிறப்பான விஷயங்களைச் சுவையுடன் கூறுகிறது. ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர் எம். எல்.ஸி. அவர்களை ஆசிரியராகக் கொண்டுள்ள இப்பத்திரிகையில் ஆசிரியரவர்கள், ஸ்ரீ நா. ரகுநாதய்யர், ஸ்ரீவத்ஸ சோமதேவசர்மா, போலகம் ஸ்ரீராம சாஸ்திரிகள், மற்றும் பல பெரியோர்களின் கட்டுரைகளும், ஸ்ரீகாஞ்சி ஆசாரியர்களின் உபதேச மொழிகளும் இடம் பெறுகின்றன. பத்திரிகையின் அமைப்பு, காகிதம், அச்சு எல்லாமே உயர்வாக இருக்கின்றன. சநாதன தருமத்தை அறிய தக்க ஓர் அரிய சாதனம் 'ஸ்ரீ காமகோடி ப்ரதீபம்.'

வருட சந்தா: ரூ. 5; தனிப்பிரதி விலை: 50 பைசா. விலாசம்: 4, ஃப்ரான்ஸிஸ் ஜோஸப் தெரு, சென்னை–1

## ஒரு கவிஞனின் குரல்

ஒரு மொழியில் உள்ள கவிதையை மற்றொரு மொழியில் பெயர்ப்பது மிகவும் சிரமசாத்தியமான காரியம். உலகம் முழுவதற்கும் கவித்துவ உணர்ச்சி பொதுவானதே எனினும் அந்த உணர்ச்சி வெளிப்படும் முறைகளும், அதன் சாயைகளும் மாறுபடும். ஒரு நாட்டுக்குரிய பிரத்தியேகப் பண்பை அந்நாட்டின் மொழிதான் பிரதிபலிக்க முடியும். கவி என்பவன் உலகமனைத்தையும் தழுவும் அநுபவத்தைப் பெற்றவனே எனினும், அவனது உணர்ச்சிகளிலும் தன்னாட்டுக்கே உரிய பண்பும், அந்தப் பண்புக்கே உரிய மொழியும் இயல்பாகக் கரைந்திருக்கும். கவிதையில் மொழி எங்கு முடிகிறது, பொருள் எங்கு தொடங்குகிறது என்றும் வடிவம் எங்கு முடிகிறது, உயிர் எங்கு தொடங்குகிறது என்றும் பிரித்துப் பிரித்துச் சொல்ல முடியாதாகையால் இவற்றில் மொழியை—வடிவை விட்டுப் பொருளை—உயிரை மட்டும் மாற்று மொழியில் ஆக்கி விடுவதால் மூலக் கவிதை முழுவதையும் தந்ததாக ஆகி விடாது. என்றாலும் ஒரு கவியின் உலகளாவும் பொதுஉணர்வுகளை உலகம் முழுவதற்கும் ஆக்கித் தருவதெனில் அதற்கு மொழிபெயர்ப்புத் தவிர வேறு உபாயம் கிடையாது. ஆனால் மொழி பெயர்ப்பவர் கவியின் ஜீவநாடியைப் பிடித்துப் பார்த்தவராயிருக்க வேண்டும்; கவியின் மூல மொழியிலும், தாம் அதைப் பெயர்க்கும் மொழியிலும் நன்கு முழுகித் திளைத்தவராயிருக்க வேண்டும். இந்த அம்சங்கள் யாவும் சேர்ந்து விட்டால் மொழிபெயர்ப்பென்பது எவ்வளவு சிலாக்கியமாக அமைய முடியுமோ அவ்வளவு சிலாக்கியமாக அமைந்து விடும். ரசிகர்களும் மகிழ்வார்கள்.

மகாகவி பாரதியின் கவிதைகளில் முப்பத்து மூன்றை ஆங்கில உருவில் தாங்கியுள்ள 'வாய்ஸ் ஆஃப் ஏ போயட்' (கவிஞன் குரல்) உயர்ந்த மொழிபெயர்ப்புக்குரிய தேவைகள் அனைத்தையும் பூர்த்தி செய்கிறது. பாரதியாரை ஆங்கிலத்தில் ஆக்கியவர்களின் பெயரைக் கேட்டாலே நமக்கு மொழிபெயர்ப்பு தரமாகத்தான் இருக்க முடியும் என்ற நம்பிக்கை ஏற்படும். பெரும் பகுதி பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்களின் காவியக் கையில் உருவானது. மற்றும் ரசிகத் தலைவர் ராஜாஜி, நுண்ணியக் கவியுணர்வு பெற்ற டாக்டர் ஜே. ஹெச். கஸின்ஸ், பேராசிரியர் கே. சுவாமிநாதன், பெ. நா. அப்புசாமி, பேராசிரியர் பி. மகாதேவன், ஸ்ரீமதி பிரேமா நந்தகுமார் ஆகிய பல அறிஞர்கள் பாரதியாரை அழகுற ஆங்கிலக் கவிதைகளில் மொழி பெயர்த்தளித்திருக்கிறார்கள். தேசீயப் பாடல்கள், தோத்திரப் பாடல்கள், கண்ணன் பாட்டுக்கள், தனிப் பாடல்கள், வசனகவிதை, பாஞ்சாலி சபதம் இவை யாவற்றினின்றும் உதாரணங்களைத் தேர்வு செய்து இங்கு கோத்திருப்பதால் கவியின் பல கோணங்களையும் காண முடிகிறது.

'திறமான புலமை எனில் வெளிநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்' என்ற கவியின் ஆணை செயலாவதற்கு முயற்சி மேற்கொண்டுள்ள பதிப்பாளர்கள் பாராட்டுக்குரியவர்கள்.

(The Voice of a Poet)—பாரதி தமிழ்ச் சங்கம், நெ. 93-A, ராஷ்பிகாரி அவென்யூ, கல்கத்தா - 26 விலை ரூ. 2.00.

# காலைத் தூக்கி நின்று...

இ. எஸ். பாலகிருஷ்ணன்



பாத்திரங்கள் :

கல்லிடைக்குறிச்சி

| | | |
|---|---|---|
| தாண்டவம் பிள்ளை | - | ஒரு நடன ஆசிரியர் |
| சிவகாமி | - | அவர் மனைவி |
| செங்கமலம் | - | அவர் மகள் |
| கோண்டு | - | அவர் மகன் |
| ராஜி | - | சிவகாமியின் தோழி |
| வேலாயுதம் | - | பள்ளிக்கூட வாத்தியார் |

காட்சி 1

சிவகாமி: நல்லாயிருக்கு நீங்க நாட்டியம் சொல்லித் தரும் அழகு! வயசுப் பெண்ணை இப்படித்தான் ஒற்றைக் காலில் ஒரு மணி நேரம் நிற்க வைத்து வதைப்பார்களா?

தாண்டவம்: நாட்டியம் பின்னே எப்படி வருமாம்? 'கல்லிடைக்குறிச்சி பாணி'யை அவள் எப்படிப் புரிந்து கொண்டு ஒழுங்காக ஆடுவாளாம்?

சிவகாமி: உங்க பாணியும் கீணியும்! பெற்ற மனசு பதைக்கிறது. குழந்தையை முதலில் ரெண்டு காலில் நிற்க வையுங்கள். கால் வலி தாங்க முடியாமல் அவள் கதறுவது உங்கள் கண்ணில் படவில்லையா?

தாண்டவம்: சிவகாமி! இதோ பார். பிரபல நாட்டிய ஆசிரியர் 'கல்லிடைக் குறிச்சியாரி'ன் மனைவியாட்டமாவா பேசுகிறாய் நீ? தாளம் தவறி ஆடும் பெண்களை ஒற்றைக் காலில் ஒரு மணி நேரம், ரெண்டு மணி நேரம் நிறுத்தி வைத்தால்தானே, அவர்கள் திருந்துவார்கள்? பள்ளிக்கூடத்திலே 'இம்போஸிஷன்' எழுதச் சொல்வதில்லையா..... அது போலத்தான் இதுவும்!

சிவகாமி: நல்ல தண்டனை போங்கள்! கல்யாணத்துக்கு நிற்கும் ஒரு பெண்ணை இப்படி இராப்பகலா ஒற்றைக் காலில் தவமிருக்கச் சொல்லி அவள் உடம்பு கருவேப்பிலைக் குச்சியாட்டம் மாறியாச்சு...

தாண்டவம்: கலை என்றால்....

சிவ: உங்கள் அகராதியில் காலை ஒடிப்பதுதான் கலை...கண்ணாலே..... குழந்தை கஷ்டப் படுவதைக் காணச் சகிக்கலே.

தாண்: ஏன் மனத்தை அலட்டிக் கொள்கிறாய் சிவகாமி? அந்தக் காலத்திலே எனக்கு நாட்டியம் கற்பித்த செங்கநல்லூர் சிங்காரம் பிள்ளை தாளம் தவறி ஆடினால் என்ன செய்வார் தெரியுமோ ?

சிவ : எனக்கு ஒன்றும் தெரிய வேண்டாம். குழந்தையை முதலில் தரையில் ரெண்டுபாதமும்படிய நிற்கச் சொல்லுங்கள்,

(பையன் கோண்டு ஒரு பெரிய பாட்டிலுடன் நுழைகிறான்.)

தாண்டவம்பிள்ளை: ஏண்டா.... அது என்னடா பாட்டில்?

கோண்டு: 'தாண்டவ தைலம்' அப்பா!

தாண்: என்னடா உளறுகிறாய்?

கோண்டு: நிஜமாகத்தான் அப்பா! உன்னிடம் நாட்டியம் கற்றுக் கொண்டு கால் வீங்கிக் கஷ்டப்படுபவர்களுக்கு ஆரிய வைத்தியன் குஞ்சுப் பணிக்கரினால் ஸ்பெஷலாகத் தயாரிக்கப்பட்டது. போன வாரம் ஒரே நாள் பாடம் கற்றுக் கொண்டபின் ஓடியே போய்விட்டாளே, ஓர் ஒல்லிப் பெண்..... அவள்கூட நாலு பாட்டில் வாங்கிட்டுப் போனாள்.....

சிவகாமி: இதை எப்படிடா தடவணும்? வைத்தியர் ஏதாவது சொன்னாரா?

கோண்டு: அக்கா! காலிலே அரை மணி நேரம் தேய்த்தபின், வெந்நீரில் ஒத்தடம் கொடுக்கச் சொன்னார்....

தாண்: தூக்கி எறிடா, அந்தப் பாட்டிலை! வெந்நீராம், ஒத்தடமாம்! அந்த வைத்தியன் காலை வீங்க வைத்து விடுவேன் வீங்க....

கோண்டு: அவள் நாட்டியம் கற்றுக் கொள்ள வந்தால்தானே ?

(செங்கமலம் விம்முகிறாள்.)

சிவ: என்னம்மா, செங்கமலம்..... ஏன் அழுகிறாய்? காலை வலிக்கிறதா? நீபாட்டுக்கு ரெண்டு காலையும் தரையில் வைத்து 'ஜம்'னு நில்லுடி அம்மா. உங்க அப்பாரு என்னதான் செய்வார், பார்ப்போம்!

தாண்ட: இந்தத் தாண்டவம் பிள்ளையை என்ன முட்டாள்னு நெனச்சியோ? செங்கமலம் மட்டும் இரண்டு காலையும் கீழே வைக்கட்டும்.... நான் இந்த வீட்டில் இனிமேல் சோறு திங்க மாட்டேன்.

கோண்டு: அப்பா! இன்னிக்குப் பொரிச்ச குழம்பு அப்பா! அது இருந்துமா நீ சாப்பிட மாட்டாய்?

சிவ: நீ சும்மா இருடா கோண்டு...உங்கப் பாவுக்கு எப்பவுமே வக்கிர புத்தி ஜாஸ்தி. நேர் வழியிலே சாதிக்கக்க முடியாததை எல்லாம் பயமுறுத்திச் சாதித்துக்கொள்வார்.

கோண்டு: இன்னும் அக்கா எத்தனை நாழி இப்படி நிற்க வேண்டும்?

சிவ: அந்த ஈசனுக்குத்தான் வெளிச்சம்! 'கலை' 'கலை'ன்னு காலை ஒடிக்கிற குடும்பத்திலே வந்து பிறந்துட்டா அவ... நாளைக்குக் கழுத்திலே ஒரு மஞ்சள் கயிறு ஏறிப் புருஷன் வீட்டுக்குப் போனால்தான் நிம்மதியா அவள் ரெண்டு காலில் நிற்க முடியும்!

காட்சி 2

ராஜி: என்ன சிவகாமி... ஒரு மாதிரியா யிருக்கிறாய்? ராத்திரி சரியா தூங்கலியா? செங்கமலம் எங்கே? கண்ணுலேயே படுவ தில்லையே இப்பவெல்லாம்.

சிவ: அந்தக் கண்றாவியை ஏன் கேட்கிறாய்? என் வயிற்றில் பிறந்து கஷ்டப்படறது அது.

ராஜி: என்ன சொல்றே நீ? செங்கமலத்துக்கு என்ன குறைச்சல்? அழகில்லையா?... பணமில்லையா?

சிவ: எல்லாம் இருக்கு. ஆனால் தரையில் நிற்கமட்டும் உரிமையில்லை!

ராஜி: என்னடி புதிர் போடுகிறாய்? புரியத்தான் சொல்லேன்.

சிவ: அவங்க அப்பாரு அதை ஆட்டி வைக்கிற ஆட்டத்திலே அண்ட சராசரமே ஆடிப் போவுது. தாளம் தவறி ஆடிட்டாளோ, வந்தது வினை! நாள் முழுதும் ஒற்றைக் காலிலேயே நின்றாக வேண்டும்... ஒத்தடம் கொடுத்து, ஒத்தடம் கொடுத்து என் கையெல்லாம் நோவுது.

ராஜி: நீதான் கொஞ்சம் அவர்கிட்டே சொல்லிப் பாரேன்.

சிவ: ஐயோ! அவர் பெயருக்கேத்தபடி தாண்டவமே ஆடிப்புடுவாரு. நாட்டியக் கலை மேலே அவருக்கு ஒரே பைத்தியம்.... ஆடும்போது சிறு கோணல் ஏற்பட்டால்கூடப் பொல்லாத கோபம் வந்துவிடும். கலியாண மாகிப் புருஷன் வீட்டுக்குப் போனால்தான் செங்கமலத்துக்கு விமோசனம்.

ராஜி: போகிற இடத்திலும் யாருக்காவது நாட்டியக் கலையிடம் ஆசை இருந்தால் பிடித்தது ஆபத்து.

சிவ: அதுக்காகத்தான் கலை வாசனையே இல்லாத குடும்பத்தில் அவளைக் கொடுக்கணும்னு பார்க்கிறேன்.

ராஜி: நம்ம ஆராவமுதம் பிள்ளை மகன் மார்க்கண்டேயத்தைப் பார்த்தீர்களே, ஏன் வாணும்னுட்டீங்க?

சிவ: அந்தப் பையனோட சித்தப்பாவோட ஒன்றுவிட்ட மாமாவின் பெண்ணுக்குச் சமீபத்தில் அரங்கேற்றமானதாகப் பத்திரிகையில் படித்தேன். உடனே அந்தச் சம்பந்தம் வேண்டாம்னு தள்ளிப்புட்டேன். குடும்பத்திலே எந்த மூலை முடுக்கிலாவது கலைப் பைத்தியம் இருந்தால் அது தொத்திக் கொண்டுவிடும்னு பயம்... வேறென்ன?

ராஜி: அம்பாசமுத்திரம் இசக்கியா பிள்ளையோட மகன் முருகேசனுக்கு என்ன குறை? அமெரிக்காவில் போய் மேல் படிப்புப் படிச்சிட்டு வந்திருக்கானே?

சிவ: அந்தப் பையனை எனக்கு ரொம்பப் பிடிச்சிருந்தது. நாட்டியம், சங்கீதம், சித்திரம் — இதெல்லாம் கொஞ்சம்கூட நாட்டம் இடையாது அவனுக்கு. ஆனால் போன வருஷம் இங்கே வந்திருந்தபோது குளத்தங் கரையிலே ஒற்றைக் காலில் நிற்கும் ஒரு கொக்கைக் காட்டி 'அது என்ன ஜோரா பரதம் பயிலறது?'ன்னு சொன்னதாகக் கேள்வி. அப்படியே அந்தச் சம்பந்தம் வேண்டாம்னு விட்டுப்புட்டேன்.

ராஜி: நீ செஞ்சதுதான் சரி. இந்த விஷயத்தில் எல்லாம் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்கிறது நல்லது..... எனக்கு ஒரு யோசனை தோணுது. எங்க குடும்பத்திலே ஒரு பையன் இருக்கான். வேலாயுதம்னு பெயர். வாட்டசாட்டமா இருப்பான்... சிதம்பரத்திலே வாத்தியார் வேலை பார்க்கிறான்... அவனுக்கு நாட்டியம் கீட்டியம் என்றால் ஒரே வெறுப்பு. அவனை வேண்டுமானால் செங்கமலத்துக்குப் பார்க்கலாம்.

சிவ: இத்தனை நாட்கள் ஏன் சொல்லவே இல்லை நீ?

ராஜி: பையன் கொஞ்சம் மாநிறம். அத்தோடே அவன் சம்பளமும் நாலே நூத்திருபதோதான்......

சிவ: பையன் கறுப்பாயிருந்தால் என்ன? அத்தோடே சம்பளமா முக்கியம்? பெண்ணைக்




# தரத் தேயிலைத் தூள்களிலே தனிப்பெருமை வாய்ந்தது

# லிப்டன்ஸ்

## ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ

குணமும், சுவையும் நிறைந்த பொன்னிறமுள்ள டீ யை வெகு சீக்கிரத்தில் இந்தத் தேயிலையைக் கொண்டு அதிகமான கப்புகளைப் பெறுவீர்கள் இந்த ஒப்புயர்வற்ற டீ யை நீங்களே பருகிப் பாருங்கள்—உங்கள் விருந்தினர்களுக்கும் கொடுங்கள். நிச்சயமாக இதை ரசித்து நீங்கள் மகிழ்வீர்கள்—ஆம்!—அப்படியே உங்கள் விருந்தினர்களும்கூட! தரத் தேயிலைத் தூள்களில் லிப்டன்ஸ் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் தனிப்பெருமை வாய்ந்தது. தன்னிகரற்றது என்பது உண்மை.




**லிப்டன் என்றாலே நல்ல டீ**

**எல்லாம் 4 நான்கு!**



ஜெர்மனியை ஆண்ட மன்னர் நாலாம் சார்லஸ் ஐ. பி. (1316–87) அவர்களுக்கு நாலு என்ற எண்ணிக்கையில் மோகம்.

தினமும் அவர் நாலு தடவை போஜனம் செய்வார். அதில் நாலு வகைப் பண்டங்களிருக்கும். தினமும் நான்கு மாளிகைகளில் தங்குவார். ஒவ்வொன்றிலும் நான்கு அறைகள். நான்கு சரவிளக்குகள், நான்கு வாயில்கள் உண்டு. தினமும் நான்கு வண்ணங்களில் ஆடைகள் அணிவார். அவருடைய மகுடத்தில் நான்கு முகப்புகள் உண்டு. அவர் தம் ஆட்சிக் காலத்தில் ஜெர்மனி நாட்டையே நாலு மாநிலங்களாகப் பிரித்து வைத்தார். சேனைகளையும் நான்காகப் பிரித்தார். ஆட்சிப் பொறுப்புக்கு நான்கு கோமகன் நாலு கவர்னர், நாலு ஜெனரல் (தளபதி) ஆகியோரை நியமித்திருந்தார்.

மரணப் படுக்கையில் அந்த நாலாம் சார்லஸ் மன்னர் கிடந்த போது அவருக்கு நான்கு வைத்தியர்கள் பணிவிடை செய்தார்கள். கடைசியில் சாயங்காலம் நாலு மணி அடித்து நான்கு நிமிடங்களானதும் அந்த மன்னர் உயிர் நீத்தார்!

ஆதாரம்: 'நவநீத்' தகவல்: எஸ். ஆர். சின்னமணி

கால் வலிக்காமல் காப்பாற்றினால் அதுவே பெரிய காரியம்.... நீ சாயங்காலமே அந்தப் பையனின் விலாசத்தைக் கொடு. பாவம்! குழந்தை சீக்கிரம் கல்யாணமாகி ரெண்டு காலும் தரையைத் தொட நிம்மதியாய் நிற்கட்டுமே !

காட்சி 3

(செங்கமலத்துக்கும் வேலாயுதத்துக்கும் கல்யாணம் நடந்து இரண்டு மாதங்களான பிறகு அவளைத் தேடி வருகிறாள் சிவகாமி.)

செங்கமலம்: வாம்மா.... வா... ஏது இமர்னு? கடிதாக போடக் கூடாதோ ?

சிவகாமி: உன்னைப் பார்க்கணும் போல் தோணித்து. பஸ் ஏறி வந்துவிட்டேன். நீ இல்லாமல் வீடு 'வெறிச்'சுன்னு இருக்கு.... சௌக்கியமாக இருக்கிறாயா?

செங்கமலம்: ஏதோ இருக்கேன்....

சிவ: உடம்பு ஏன் ரொம்ப இளைத்திருக்கு? குளிரு ஒத்துக்கலியா? வெள்ளி செவ்வாய் எண்ணெய் தேய்ச்சுக்கிறியோ?

செங்க: அதுக்கெல்லாம் என்ன குறைச்சல்?

சிவ: முகத்திலே ஏன் பழைய குறுகுறுப்பைக் காணும்? (மெதுவான குரலில்) மாப்பிள்ளை உன்னை ஒரு குறையும் இல்லாம நல்லாத்தானே வச்சிருக்கார்? ஆமாம்... இந்த அட்டிகை ஏது? புதுசா இருக்கே.

செங்க: அவர்தான் வாங்கித் தந்தார்.....

சிவ: இந்த ஊரில்தான் வாங்கித்தா?

செங்க: ஆமாம்..... போன வாரம் 'கைப்பிடித்த கள்வன்' சினிமா பார்க்கப் போயிருந்தோம். போன இடத்திலே ஏதோ ஒரு கடையில் இந்த அட்டிகையைப் பார்த்தார். உடனே வாங்கிட்டார்.

சிவ: அடி சக்கைன்னுனாம்! வாரா வாரம் சினிமா பார்க்கிறயாக்கும். சமையல் எல்லாம் நீதானா?

செங்க: நான் சமைக்கிறேன்னு அவரு விடமாட்டேங்கிறாரு. தானே செய்யறாரு. அடுப்பங்கரையிலே வேலை செய்தால் என் உடம்பு கெட்டுப் போய் விடுமாம்!

சிவ: பார்த்தியா, பார்த்தியா.... மாப்பிள்ளைக்கு உன் பேரிலே எவ்வளவு அக்கறைன்னு! ஏதோ இந்தமட்டுக்கு நிம்மதியா ரெண்டு காலிலே நிற்க முடிஞ்சுதே.... சந்தோஷம்..... ஆமாம், இதென்ன இருந்திருந்தாற்போல் அழுகிறாய்?

செங்க: ஒன்னுமில்லே, அம்மா....

சிவ: வாயைத் திறந்து சொல்லேண்டி.

செங்க: பிறகு சொல்றேன். அவர் வர்ற நேரமாகி விட்டது. நான் ஒற்றைக் காலில் நின்றாக வேண்டும்!

சிவ: இதென்ன கூத்து? மாப்பிள்ளைக்கு எப்பொழுது நாட்டியப்பைத்தியம் பிடித்தது?

செங்க: மெதுவாப் பேசு அம்மா. அவர் காதில் விழப் போகிறது....

சிவ: மாப்பிள்ளை வாத்தியார் வேலைதானே பார்க்கிறார்? நாட்டிய ஸ்கூல் எதுவும் தொடங்கலியே !

செங்க: அதெல்லாம் ஒன்றுமில்லே. வாத்தியார் வேலையேதான் பார்க்கிறார்.... பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளையும் இப்படித்தான் ஒற்றைக் காலில் நிற்க வைத்துப் பிராணனை வாங்குகிறார்.

சிவ: பள்ளிக்கூடத்தில் கணக்கு, சரித்திரம், பூகோளம் கற்பிக்காமல் பிள்ளைகளை ஏன் நாட்டியமாட வைக்கிறார்?

செங்க: அதற்காகத்தானே அவருக்குச் சம்பளம் தருகிறார்கள்?.... நீ நினைப்பது போல் அவர் கணக்கு, பூகோளம், சரித்திரம் எல்லாம் போதிப்பதில்லை.

சிவ: பின்னே? நவீன கல்வித் திட்டம்னு சொல்லி 'தேனீ வளர்த்தல்' அல்லது 'எறும்பு பிடித்தல்'னு எதுனாச்சும் புதுப் பாடம் தொடங்கி விருக்காங்களா? அதுக்கும் ஒற்றைக் காலில் நிற்பதற்கும் என்ன சம்பந்தம்?

செங்க: அதெல்லாம் இல்லே, அம்மா! இவர் டிரில் வாத்தியார். தேகப் பயிற்சி என்றால் இவருக்கு ஒரே பைத்தியம்! ஒற்றைக் காலில் நிற்பதுதான் இவருக்கு மிகவும் பிடித்தமான பயிற்சி. என் உடம்பு தேறுவதற்காக நாள் முழுதும் என்னை இப்படியே நிறுத்தி வைக்கிறார், அம்மா!

(இரை)




★ பொது மடமை

★ ஒலிபெருக்கித் தொல்லை!

★ நவீன ஓவியங்கள்

★ ரேஷன் தொல்லை

"ஒவ்வொரு பாடத்திலும் மிகுந்த திறமைசாலிகளை உயர்ந்த சம்பளம் கொடுத்து ஆசிரியர்களாக நியமித்து நடத்தப்படும் பள்ளிகளுக்கே 'பப்ளிக்' பள்ளிகள் என்று பெயர். "நாட்டில் உள்ள எல்லா 'பப்ளிக்' பள்ளிகளையும் மூட வேண்டும்.

"காரணம் என்னவெனில் அதனால் தகுதியுள்ளவர்கள் இன்னும் அதிக திறமைசாலிகளாகிறார்கள். (அறிவில்!) ஏழைகள் புறக்கணிக்கப்படுகிறார்கள்" என்று காங்கிரஸ் அக்கிராசனர் கூறியதாகத் தினசரியில் கண்டிருக்கலாம். மணியான யோசனை. அறிவுடைமையில் பொதுவுடைமை அல்லது பொது மடமை என்பதை அடைவது சிறிது கஷ்டம் என்றாலும், மேற்கூறிய யோசனையைச் செயல்படுத்துவதற்கு வழிகள் உள்ளன.

பள்ளிகள் என்பது நல்ல தரமான திறமையான மாணவர்களை உற்பத்தி செய்வதல்ல! ஆகவே, முதலாவதாக அறிவுமிக்க மாணவர்க்கு உபகாரச் சம்பளம் என்பதை மாற்றி மிகக் குறைவான மார்க் வாங்கி, படிப்பில் கவனமே செலுத்தாத மாணிக்கங்களுக்கு உதவிச் சம்பளம் கொடுக்கலாம்!

படிக்காத மாணவர்களுக்குப் பல பெரும் பரிசுகள் வழங்க ஏற்பாடு செய்யலாம். இதனால் கல்வியின் தரம் மிகச் சிறந்த முறையில் விரைவாகக் கீழிறங்கி எல்லாரும் சமம் என்ற உயர்ந்த நிலை வரும்! எந்த வேலைக்கும் "திறமைக் குறைவே நிறைவான தகுதி" என்று விண்ணப்ப பாரங்களில் குறிப்பிடலாம்.

மார்க் வாங்காத மாணவர்களுக்கு இனி முதுகு பழுப்பது போக, 'ஷொட்டும்', 'சபாஷ்' கிடைக்கும் காலம் வரும் என்பதை நினைக்கும்போது என் பையனைப் பற்றிச் சிறிதும் நான் கவலைப்படவில்லை. "உனக்குக் கட்டுப்போட்டாக்கூட படிப்பு வராது" என்ற நல்வாசி எப்போது கிடைக்கும் என்று மாணவர் ஏங்கும்படி ஆசிரியர்கள் செய்தல் நலம்!

சென்னை — 4
17–3–66

ராஜு மணி

நமது சென்னை நகர மாணவர்கள் ஏப்ரல் மாதப் பரீட்சைகளுக்கு மார்ச் மாதம் முதல் படிக்க ஆரம்பிக்கிறார்கள். இரவும் பகலும் அதிக நேரம் கண் விழித்துப் படிக்க வேண்டியிருக்கிறது. ஆனால், விடுதிகள், வீடுகள் முதலியவற்றைச் சுற்றியுள்ளவர்கள் ஒலிபெருக்கிகள் மூலம் காலை முதல் இரவு பத்து மணி வரை தொல்லை கொடுக்கிறார்கள். இதனால் நமது மாணவர்கள் படிப்பில் கவனம் செலுத்த முடிவதில்லை.

சென்னை — 7
18–3–66

எஸ். கந்தசாமி

ஓவியர் மணியம் அவர்களுடன் மாடர்ன் ஆர்ட்டைப் பற்றிய பேட்டியைக் கண்டேன். அந்த அநுபவக் கலைஞரின் கருத்துக்கள் என்னை மிகக் கவர்ந்தன.

எந்த ஓவியனும் தன் படைப்பைப் பிறர் உணர்ந்து உணர்ச்சிப்பட வைக்குமாறு உருவாக்குவதே கலையின் அழகல்லவா? நவீன பாணி ஓவியம் இதற்கு விதிவிலக்கா?

நமது இந்தியப் பண்பாட்டோடு நாமும் மாடர்ன் ஆர்ட் வரையலாம் என்ற திரு மணியத்தின் கூற்று என்னை மிகக் கவர்ந்தது.

இத்துடன் நான் வரைந்த நவீன பாணி ஓவியத்தின் புகைப்படம் அனுப்பியுள்ளேன்.

கல்கத்தா
16–3–66

ஜே. ஸ்ரீனிவாசன்



கோவை மாவட்டம், உடுமலை வட்டம் கணியூர் பகுதியில் பணி புரியும் அரசுப் பணியாளர்கள் பலர் ரேஷனுக்காக உடுமலைப்பேட்டை சென்று திரும்ப ரூ. 1.37ம் வக்கேஜ் முப்பது பைசாவும் வாரா வாரம் கொடுக்க வேண்டிய அநியாய நிர்ப்பந்தத்தில் உள்ளனர். விலைவாசியின் கொடூரப் பிடியில் சிக்குண்டு தத்தளிக்கும் ஆசிரியர்கள் இந்த நிலையால் மனம் வெதும்புகின்றனர்.

இதே ரேஷனை கணியூர் 'கூட்டுறவு பண்டகசாலை'யில் கொடுக்கக் கூடாதா?

கணியூர்
7–3–66

வள்ளிமணாளன்

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

'அந்த
அதிகரித்த
வெண்மை
எங்கிருந்து
வருகிறது?'

# டினோபால் வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது.

துவைத்த துணிகளைக் கடைசியாக அலசுவதற்கு முன், தண்ணீரில் சிறிதளவு டினோபால் சேர்த்துப் பாருங்கள், உங்கள் வெள்ளைத் துணிகளெல்லாம் எப்படி மேலும் வெண்மை பளிச்சிடுகின்றன! சட்டைகள், புடவைகள், டவல்கள், விரிப்புகள் எல்லாம் எப்படி அதிகரித்த வெண்மை துலங்க விளங்குகின்றன!

இந்த அதிகரித்த வெண்மைக்கு ஆகும் செலவுதான் என்ன? துணி ஒன்றுக்கு ஒரு பைசாவுக்கும் குறைவுதான்! கால் தேக்கரண்டி அளவு டினோபால் ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்கிறது.

விஞ்ஞான ரீதியாகத் தயாரிக்கப்பட்ட டினோபாலை எப்பொழுதும் உபயோகியுங்கள். அதனால் துணிகளுக்கு ஒருவிதமான கெடுதலும் ஏற்படுவதில்லை.



**டினோபால் இப்பொழுது சீல் செய்யப்பட்ட அலுமினிய ரேக்குப் பேக்கெட்டுகளிலும் கிடைக்கிறது.** ஒரு பேக்கெட் டினோபால் ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்கிறது- சிறிதும் வீணாவதில்லை, உபயோகிக்கச் சுலபமானது, தொந்தரவற்றது.




டினோபால், ஜே.ஆர்.கெய்கி, எஸ்.ஏ.பாஸ்ல், ஸ்விட்சர்லாந்து அவர்களின் பதிவுபெற்ற வியாபாரச் சின்னமாகும்.
சுஹ்ரித் கெய்கி லிட்., த.பெ. 965, பம்பாய் 1 பி.ஆர்.

Shilpi SG 223 A Tam

o No. M. 4392
as a Newspaper in Ceylon




பனாமா
ஒரு நல்ல சிகரெட்

செழுமையான
ஜீனியாப் புகையிலை
சீர்திரவிய கலவை
புதுமை மயமானது

# இழுக்க
# இழுக்க
# இன்பம்
# இறுதிவரை

கோல்டன் டுபாக்கோ கம்பெனி பிரைவேட் லிமிட்டெட், பம்பாய்-56.



பாரதத்தில் இத்தகைய தேசீய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது

655-C. Tam. Greens' Advtg.